ஸ்ரீ:

திருமங்கை மன்னன் திருவாய் மலர்ந்தருளிய

# சிறிய திருமடல்.

பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

முன்னோருரைகளைத் தழுவி

எளிய நடையில் தெளிய எழுதிய

திவ்யார்த்த தீபிகையென்னும் உரையுடன்,

M. R. கோவிந்தசாமி நாயுடுவால்,

சென்னை மாடல் அச்சுக்கூடத்தில்

அச்சிடுவிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

1927

இதன் விலை அணு 10.] [தபால் செலவு வேறு.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச் செய்தது.)

శ్రీశైలేశ దయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్।
యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిమ్॥

[ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச் செய்தவை.)

లక్ష్మీనాథసమారమ్భాం + వన్దే గురుపరమ్పరామ్॥
యోనిత్యమచ్యుతపదామ్బుజ + రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే.

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் பரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச் செய்தது.)

మాతా పితా యువతయః + ప్రణమామి మూర్ధ్నా॥

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசர பட்டர் அருளிச் செய்தது.)

భూతం సరశ్చ + శ్రీమత్పరాఙ్కుశమునిం ప్రణతోఽస్మి నిత్యమ్.

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]

ஸ்ரீ:



* திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

# சிறிய திருமடல்.

சிறிய திருமடல் என்னும் இத்திவ்யப் பிரபந்தமானது இந்த உலகில் இருள் நீங்க வந்துதித்து அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்களுள் பிரதானரான நம்மாழ்வாரருளிச் செய்த சதுர்வேத ஸாரமான நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய ஆறு திவ்யப்ர்பந்தங்களுள் ஒன்றும். [பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம்-என்பன ஆறு திவ்யப்ரபந்தங்களாம்.]

---

* இவ்வாழ்வாருடைய வைபவத்தைப் பெரிய திருமொழி உரையின் தொடக்கத்திலே விரித்துரைத்தோம்; அங்கே கண்டுகொள்க.

ஸ்ரீமந்நாதமுனிகள் வகுத்தருளின அடைவில் மூன்றாவது ஆயிரமாகிய இயற்பாவில் ஒன்பதாவது பிரபந்தமாக அமைந்தது இது.

"வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி வேற்கணார் கலவியே கருதி, நின்றவா நில்லா நெஞ்சினை யுடையேன்" என்றும் "சார்ந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளத் தாழ்ந்தேன்" என்றும் தாமே அருளிச் செய்தபடி விஷயப்ரவணராயத் திரிந்துகொண்டிருந்த இவ்வாழ்வார் தம்மை எம்பெருமான் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம்பற்றி 'விஷயங்களில் ஆழ்ந்து திரிகிற இவரை சாஸ்த்ரங்களைக் காட்டித் திருத்த முடியாது, நம் அழகைக் காட்டியே மீட்கவேணும்' என்று கொண்டு தன் அழகைக் காட்டிக்கொடுக்க, ஆழ்வாரும் அதைக்கண்டு ஈடுபட்டு "வேம்பின் புழு வேம்பன்றி யுண்ணாது, அடியேன் நான் பின்னுமுன் சேவடியன்றி நயவேன்" என்னும்படி அவகாஹித்தார்.

இவர் இப்படி தன்பக்கல் அவகாஹிக்கக்கண்ட எம்பெருமான் "இப்போது இவர்க்கு நம்மிடத்து உண்டான பற்று மற்ற விஷயங்களிற்போலல்லாமல் ஸம்பந்த வுணர்ச்சியை முன்னிட்டுப்பிறந்ததாக வேணும்; இல்லையேல் இப்பற்று இவர்க்கு நிலைநிற்காதொழியினும் ஒழியும்" என்றெண்ணி எல்லாப்பொருள்களையும் விளக்குவதான திருமந்த்ரத்தையும் தனது ஸௌசீல்யம் முதலிய திருக்குணங்களையும் திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லை நிலமான திவ்ய தேசங்களையும் ஆழ்வார்க்குக் காட்டிக்கொடுக்க, அவரும் "வாடினேன் வாடி" என்று தொடங்கி எம்பெருமானுகந்தருளின இடமே பரம ப்ராப்யமென்று அநுபவித்தார்.

இங்ஙனம் அநுபவித்த ஆழ்வார்க்கு இவ்வநுபவம் நித்யமாய்ச் செல்லுகைக்காக இவரைத் திருநாட்டிலே கொண்டுபோக வேணுமெனக் கருதிய எம்பெருமான் ஸம்ஸாரத்தில் இவர்க்கு ஜிஹாஸை பிறக்கும்படி அதனுடைய தன்மையை அறிவிக்க, அறிந்தவிவர் அஞ்சி நடுங்கி "மாற்றமுள" என்னுந் திருமொழியிலே "இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல்" "பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல்" "வெள்ளத் திடைப்பட்ட நரியினம்போலே" என்று தமது அச்சத்திற்குப் பலவற்றை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிக் கதறினார்.

இப்படி இவர் கதறிக்கதறி "பணியாயெனக் குய்யுமவகை பரஞ்சோதீ!" என்றும், "அந்தோ வருளாய் அடியேற்கு னருளே" என்றும் சொல்லி வேண்டின விடத்தும், சிறுகுழந்தைகள் பசி பசி யென்று கதறியழுதாலும் அஜீரணம் முதலியனவை கழிந்து உண்மையான பசி உண்டாமளவும் சோறிடாத தாயைப் போலே, எம்பெருமான் 'இவர்க்கு முற்ற முதிர்ந்த பரமபக்தி பிறக்குமளவும் நாம் முகங்காட்டுவோ மல்லோம்' என்று உதாஸீநனாயிருக்க; ஒரு க்ஷணமும் அவனைப் பிரிந்திருக்கமாட்டாத ஆழ்வார் மிகுந்த தாஹங் கொண்டவர்கள் நீரிலே விழுந்து நீரைக் குடிப்பதும் நீரை வாரி மேலே இறைத்துக்கொள்வதும் செய்யுமாபோலே, அவ்வெம் பெருமானை வாயாலே பேசியும் தலையாலே வணங்கியும் நெஞ்சாலே நினைத்தும் தரிக்கப்பார்த்தார்—திருக்குறுந்தாண்டக மென்னும் திவ்யப்ரபந்தத்திலே.

தாஹம் அளவற்றதாயிருக்கச் சிறிது குடித்த தண்ணீர் த்ருப்தியை உண்டுபண்ணுமல் மேலும் விஞ்சிய விடாயைப் பிறப்பிக்குமாபோலே, இவர் திருக்குறுந்தாண்டகத்தில் அநுபவித்த அநுபவம் பழைய அபிநிவேசத்தைக் கிளப்பிப் பெரிய ஆர்த்தியை உண்டாக்கவே, "நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே" என்று ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார்—திருவெழு கூற்றிருக்கை யென்னும் திவ்ய ப்ரபந்தத்திலே.

அப்போதும் எம்பெருமான் இவருடைய அபேக்ஷிதத்தைச் செய்து தலைக்கட்டிற்றிலன்; நம்போலியரை வாழ்விக்க இவ்வாழ்வார் முகமாக இன்னுஞ்சில திவ்ய ப்ரபந்தங்களை வெளியிட்டுவேணு மென்ற அவாவினால் வாளா இருந்திட்டான். சக்ரவர்த்தி திருமகன் ஸமுத்ர ராஜனைச் சரணம் புகுந்து வழிவிடவேண்டின விடத்தும் அக்கடலரையன் இறுமாப்பையே பாராட்டி முகங் காட்டாமல் அலக்ஷியஞ் செய்து கிடக்க, பெருமாள் சீறிச் சிவந்த கண்ணினராய் "సాగరం శోషయిష్యామి—చాపమానయ సౌమిత్రే!—పద్భ్యాంయాన్తుప్లవంగమాః" [ஸாகரம் சோஷயிஷ்யாமி—சாபமாநய ஸௌமித்ரே—பத்ப்யாம்யாந்து ப்லவங்கமா] 'இதோ இக்கடலை வற்றச்செய்து விடப்போகிறேன்—லக்ஷ்மணா! சார்ங்கவில்லைக் கொண்டுவா—வாநரமுதலிகள் காலாலே நடந்து செல்லட்டும்—ஒரு க்ஷணத்திலே இக்கடல் படுகிறபாடு பாருங்கள்' என்றருளிச்

செய்து ஸமுத்ரராஜனை அழிக்க முயன்றாப்போலே, இவ்வாழ்வாரும் 'நமது அபேக்ஷிதத்தை நிறைவேற்றாத எம்பெருமான் ஏதுக்கு? அவனுடைய ஸ்வரூபகுண விபூதிகளையும், அவன் உகந்து எழுந்தருளியிருக்குமிடங்களையும் அழித்து விடுவோம்' என்று அவற்றை அழிக்கப்பார்க்கிறார் இச்சிறிய திருமடலிலே.

இஃது ஆழ்வார் தாமான தன்மையிலே யிருந்து பேசுகின்ற பிரபந்தமன்று; க்ருஷ்ணாவதாரத்தில் குடக்கூத்திலே அகப்பட்டு அன்னவனை அநுபவிக்கப் பெறாது வருந்தி மடலெடுக்கத் துணிந்த ஒரு பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு அவளுடைய பாசுரத்தாலே தனது தசையை வெளியிடும் பிரபந்தம் இது.

ஆழ்வார்க்குப் பிராட்டிதன்மை நேர்தற்குக் காரணம்—புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகமடங்கப் பெண்தன்மையதாதலும், ஜீவாத்மாவினது ஸ்வாதந்த்ர்யமின்மையும் பாரதந்திரியமும் முதலியன.

நாயகன் வேட்டைக்குப் புறப்பட்டானாய், நாயகியும் தோழியுமாகப் பூக்கொய்து விளையாடவென்று புறப்பட்ட வளவிலே ஒரு வ்யாஜத்தாலே தோழியும் பிரிந்த ஸமயத்திலே நாயகனும் தெய்வவசமாக அங்கே வந்துசேர, அங்கே அவனோடே கண்கலவியே கூட்டக்கூடி, ஊழ்வினை பிரித்தலால் உடனே பிரிவும் நேர்ந்திட, அந்த நாயகனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாத நாயகி அவனோடு கூடுதற்காகச் செய்யும் ஸாஹஸ ப்ரவ்ருத்திதான் மடல் எனப்படுவது. இஃது எம்பெருமானுடைய ஸ்வரூபகுண விபூதிகளை அழிப்பதாகச் சொன்னது எங்ஙனே யெனில்;—(மடலூருகையாவது) நாயகனை ஒரு படத்திலே எழுதி, வைத்த கண்வாங்காமல் அதனைப் பார்த்துக்கொண்டு புஷ்பம் சந்தனம் முதலிய போகத்துக்கு உரிய வஸ்துக்களை விஷமாக உதறித்தள்ளி ஊணும் உறக்கமும் உடம்புகுளிப்பது மின்றியே பனைமட்டையைக் கையிலே எடுத்துக்கொண்டு அதனால் உடம்பை மோதிக்கொண்டு தலைமயிரை விரித்துக்கொண்டு "இன்ன படுபாவி என்னைக் காக்கமாட்டாதே கைவிட்டான்; அவன் கண்ணற்றவன்; அவனிலும் விஞ்சின கொடியன் இல்லை; பல ஸ்தலங்களிலே அவன் ஸந்நிதிபண்ணி அடியாரைக் காக்கின்றானென்பதும், ராமக்ருஷ்ணாதி அவதாரங்களினால் பலரைக் காத்தான் என்பதும் முழுப்பொய்யான பேச்சுக்கள்"

என்று தெருவேறக் கதறிக்கொண்டு கேட்டாரெல்லாரும் நடுங்கும் படியும் இரங்கும்படியும் திரிந்துழல்வதுதான் மடலூருகையாவது. அப்படிப்பட்ட கொடிய காரியத்தைச் செய்வதானது எம்பெருமானுடைய ஸ்வரூபாதிகளை அழிக்கை என்னத்தட்டுண்டோ? ஒருவனுக்கு உள்ளவற்றை இல்லையென்பதிறே அழிக்கையாவது.

இப்படி கதறிக்கொண்டு தெருவிலே புறப்படுவதற்கு ப்ரயோஜனம் யாதெனில்; இந்த ஸாஹஸ ப்ரவ்ருத்தியைக்கண்டு ராஜாக்களாயுள்ளவர்கள் இவ்வார்த்தியைப் பொறுக்கமாட்டாத கருணையினாலே இருவரையும் கூட்டிவைப்பர்கள்; உறவுமுறையாராவது கூட்டிவைப்பர்கள்; தோழிமாராவது கூட்டிவைப்பர்கள்; பழிக்கு அஞ்சி நாயகனேயாவது வந்து கூடுவன்; இவை யொன்றுமில்லையாகில் நாயகிதான் முடிந்து பிழைத்துப் போவள்—இவையாயிற்று மடலூர்தற்குப் பிரயோஜனங்கள்.

ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக்கொண்டு ஸாஹஸம் தோற்றத் தெருவிலே கிளம்பினாரோ? எனில்; இல்லை; "மடலூர்வன், மடலூர்வன்" என்று சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதை முடிய நடத்தினபாடில்லை. நம்மாழ்வாரும் "மாசறு சோதி" என்ற திருவாய்மொழியிலே, "தோழீ! உலகு தோறலர் தூற்றி ஆம் கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே" என்றும், "யாம் மடமின்றித் தெருவு தோறயல் தையலார் நாமடங்காப் பழிதூற்றி நாடுமிரைக்கவே-யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல்தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம்" என்றும் மடலூரப் புகுவதாக அச்சமுறுத்ினாரே யன்றி, அதனை அநுஷ்டாநபர்யந்தமாகச் செய்திலரிறே.

புருஷன் ஸ்த்ரீகளைக் குறித்து மடலூரலாமேயொழிய, ஸ்த்ரீ புருஷனைக் குறித்து மடலூரலாகாதென்று தமிழ்நெறியில் ஒரு வரம்பு கட்டப்பட்டிருக்கிறது; "கடலன்ன காமத்தராயினும் மாதர், மடலூரார் மற்றையார்மேல்" என்றார் தமிழர்; அப்படியிருக்க, ஆழ்வார் பிராட்டி தசையை அடைந்து மாதரான பின்பு மடலூரப் புகுதல் பொருந்துமோ? என்று இங்கே ஒரு சங்கை உண்டாகக்கூடியதே; இதற்கு இவ்வாழ்வார்தாமே மேல் பெரிய திருமடலில், "மானோக்கின் அன்னநடையார் அலரேச

ஆடவர்மேல், மன்னு மடலூராரென்பதோர் வாசகமும், தென்னுரையில் கேட்டறிவதுண்டு, அதனையாம் தெளியோம் மன்னும் வடநெறியே வேண்டினோம்" என்று ஸமாதாநம் அருளிச்செய்துள்ளமை அறியத்தக்கது. மடலெடுக்கை யென்பது ஆசைமிகுதியினால் தன்னடையே உண்டாவதொரு ப்ரவ்ருத்தி; ஆசையை வரம்பிட்டுக்காக்க ஆராலும் முடியாது; அரசராணைக்குக் கட்டுப்படுமோ ஆசை! வேலியடைத்தால் நிற்குமோ வேட்கை? அளவுகடந்த வேட்கையின் காரியமாக விளையக்கடவதான மடலூருகையை ஆண்கள் தாம் செய்யலாம், பெண்கள் செய்யலாகாதென ஒரு வரம்புகட்டுவதானது ப்ரேமஸ்வபாவத்தின் போக்கை அறியாதவர்களுடைய செயலாமத்தனை யென்பது ஆழ்வாருடைய திருவுள்ளம்.

அஃது இருக்கட்டும்; "எம்பெருமானுக்குத் திருவுள்ளமானபோது நம்மை நோக்கியருள்வான், நாம் பதறவொண்ணாது" என்று அநுஸந்தித்து குணாநுபவமே போதுபோக்கா யிருக்க வேண்டியதன்றோ ஸ்வரூப ப்ராப்தம்; அங்ஙனமிராமல் தாம் பதறி ஒரு அதிப்ரவ்ருத்தி செய்ய நினைக்கைதானும் அவத்யமன்றோ! அதிலும் ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானத்தில் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகிற ஆழ்வார்கள் இப்படி மடலூர்வேனென்றல் முதலியன பேசுதல் மிகவும் பொல்லாங்கன்றோ? என்னில்; அன்று; ப்ராப்ய வஸ்துவில் ப்ராவண்யாதிசயத்தினால் உண்டாகிற ப்ரவ்ருத்தியேயன்றி எம்பெருமானுக்குக் கெடுதலை விளைக்க வேணுமென்கிற கெட்ட எண்ணத்தினால் உண்டாகிற ப்ரவ்ருத்தியல்ல; ப்ரேம பரவசர்க்கு இது அவத்யத்தை விளைக்கக்கூடியதன்று. ஆனால், 'இது கலக்கத்தினால் செய்யும் செயல்தானே, அஜ்ஞாந மூலமாக வருமவை ஒன்றும் ஆதரிக்கத் தக்கதன்றே' எனின்; "ஞானங்கனிந்த நலம்" என்றபடி ஞானபரிபாக ரூபமான பக்தியின் காரியமாக ஸம்பவிக்கின்ற ப்ராப்தாப்ராப்த விவேக விரஹத்தால் வரும் ப்ரவ்ருத்தி விசேஷங்கள் எல்லாம் மிகவும் ஆதரிக்கத் தக்கனவேயாம். கருமமடியான அஜ்ஞானத்தினால் வருமவையே ஹேயம் என்று கொள்ளக்கடவது.

ஆனாலும், சேதநனிடத்து ஒருவகையான ப்ரவ்ருத்தியையும் ஸஹியாத ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்திற்கு இந்த அதி

ப்ரவ்ருத்தி ப்ரதிபந்தகமாக மாட்டாதோ? என்னில்; இந்த அதி ப்ரவ்ருத்திதானும் ஸித்தோபாயமான எம்பெருமான் பண்ணின க்ருஷியின் பயனெனக் கருதத்தக்கதாம். "மயர்வற மதிநலமருளினன்" "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த, காரமர்மேனி நங் கண்ணன்" என்று—இப்படிப்பட்ட அதிப்ரவ்ருத்திக்கு ஹேதுவான பக்தியைப் பிறப்பிக்குமவனும் வளரச் செய்பவனும் அவ் வெம்பெருமானாகுகையேயன்றோ சொல்லப்பட்டுள்ளது. ஆகையாலே பக்தி பாரவச்யப்ரயுக்தமான நோன்பு நோற்கை, மடலூருகை முதலான அதிப்ரவ்ருத்திகளை உபாயபலமென்று பூர்வாசார்யர்கள் ஸித்தாந்தீகரித்தருளினர்.

அன்றியும், பலனைக் கடுகப் பெறவேணுமென்ற விரைவின் மிகுதியினால் கண்ணுஞ்சுழலையிட்டு இத்தலைபடுகிற அலமாப்பெல்லாம் "நம்மை ஆசைப்பட்டு இப்படி படப்பெறுவதே!" என்று அவன் முகம் மலருகைக்கு உறுப்பாகையாலே நோன்பு நோற்கை மடலெடுக்கை முதலான அதிப்ரவ்ருத்திகளெல்லாம் அவனுடைய முகமலர்த்திக்காகப்பண்ணும் கைங்கரியத்தோடொத்து உபேயத்தில் அந்தர்ப்பூதமாய் விடுமென்றே அறுதியிடத்தக்கது. நிற்க.

# திருமடல் ஒரே பாட்டு.

இச்சிறியதிருமடல் இலக்கணமுறைமைப்படி ஒரேபாட்டாகக்கொள்ளத்தக்கது. இதனை எளு, பாட்டாகக் கணக்கிட்டார் பிள்ளையாசிரியர்; நாற்பது பாட்டாகக்கணக்கிட்டார் ஸ்ரீவேதாந்த தேசிகன். அவர்கள் இப்படி பலபாட்டுக்களாகப் பிரித்துக்கொண்டது இலக்கண முறைமைக்கு இணங்குவதல்ல. மஹான்களாகிய அவ்வாசிரியர்கள் இலக்கண நெறிக்கு முரண்படுமாறு அங்ஙனே பிரித்துக்கொண்டதற்குக் காரணம் இன்னதென்பதை மேலே கூறுவோம். இஃது இலக்கண முறைமைப்படி ஒரேபாட்டென்பதை இப்போது விளக்கப் புகுகின்றோம்;—

ஈற்றடிமுச்சீரடியாகவும் மற்றையடி நாற்சீரடியாகவும்பெற்று, காய்ச்சீரும் மாச்சீர்விளச்சீர்களும் இருவகை வெண்டளைகளுங் கொண்டு மற்றைச்சீரும் தளையும் பெறாமல், நாள் மலர் என்ற ஓரசைவாய்பாடுகளுள் ஒன்றினாலாவது, காசு பிறப்பு என்ற ஈரசைவாய்பாடுகளுள் ஒன்றினாலாவது முடிந்து, ஒரு விகற்பத்தாலாயி

னும் இருவிகற்பத்தாலாயினும் வருவது வெண்பா என்று பொதுப் படக்கூறி, இரண்டடியால் வருவது குறள்வெண்பா வென்றும், மூன்றடியால் வருவது சிந்தியல் வெண்பா வென்றும், நான்கடிக ளாய் இரண்டாமடியின் இறுதிச்சீர் முதலிரண்டடிகளின் எதுகை யையுடைய தனிச்சொல்லாய் வரநிற்பது நேரிசை வெண்பா வென் றும், நான்கடிளாய்த் தனிச்சொல் இன்றி வருவது இன்னிசை வெண்பா வென்றும், ஐந்தடிமுதல் பன்னிரண்டடியளவும் வருவது பஃறொடை வெண்பா வென்றும், பன்னிரண்டடிக்கு மேற்படின் கலிவெண்பா வென்றும் விசேஷித்து யாப்பிலக்கண நூல்களில் கூறப்பட்டுள்ளமையால் திருமடல்களிரண்டையும் கலிவெண்பா வாகக்கொண்டு ஒவ்வொரு மடலையும் ஒவ்வொரு பாட்டாகவே கொள்ளவேண்டும். திருமடல்களிரண்டிலும் முற்றும் ஒரே எதுகை யாக அமைந்தமையும் ஈற்றடி முச்சீராக முடிந்துள்ளமையும் நன்கு நோக்கத்தக்கது.

சங்கத்துச் சான்றோர் இயற்றிய பன்னிரு பாட்டியல் என்ற இலக்கண நூலில் இனவியலில் மடலிலக்கணஞ் சொல்லுமிடத்து, "பாட்டுடைத் தலைமகனியற்பெயர்க் கெதுகை, நாட்டிய வெண் கலிப்பாவதாகி......காமங் கவற்றக் கரும்பனைமடன்மா, ஏறுவராட வர் என்றனர் புலவர்." என்றதும், "இவ்வாறு வந்தன மங்கையர் கோன் அருளிச்செய்த பெரிய திருமடல் சிறிய திருமடல் என் பன" என்று அதன்கீழ் விவரணங் காட்டியிருப்பதும் அறியத் தக்கன.

"அறம்பொருள் வீடெனு மம்முக்கூற்றின் திறங்கடிந் தரி வையர் திருத்துறு மின்பம் பயனெனக் கலிவெண் பாவாற் றலைவன் பெயரெதுகையினிற் பேசுதல் வளமடல்." என்ற இலக்கண விளக்கமும் அறியத்தக்கது.

வச்சணந்திமாலை யென்னும் வெண்பாப் பாட்டியற் செய்யு ளியலில் மடலிலக்கணஞ்சொல்லவந்த "உற்றவறம் பொருள் வீடெள்ளியுயர்த்தின்பம், பொற்றொடி காதற்பொருட்டாகப்— பெற்றி, யுரைத்த கலிவெண்பா மடலிறைவனெண்பேர், நிறைத்த வெதுகை நிறுத்து" என்ற வெண்பாவும் உணரத்தக்கது. இன் னும் இவ்விஷயத்தைப் பன்னியுரைக்குங்காற் பாரதமாமென்று இவ்வளவிலே நிற்கின்றோம்.

ஆகவே திருமடல்களைப் பலபாட்டுகளாகப் பிரித்தல் இலக்கண முறைமைக்கு எவ்வகையாலும் இணங்காதாயினும், வேதாந்த தேசிகனும் அப்பிள்ளையும் பலபாட்டாகப் பிரித்துக்கொண்டது ஔசித்யம் (ஔசித்யம்) என்கிற பிரமாணத்தின்படி ஒருவாறு பொருந்தக்கூடும். அதாவது - ஆழ்வார்களருளிய தமிழ் வேதத்திற்கு நாலாயிரம் என்ற திருநாமம் நாடெங்கும் வழங்கி வந்திருக்கின்றது; ஏற்றக்குறைவின்றிச் சரிசமமாக நாலாயிரம் பாட்டுக்கள் உள்ளனவாகக் காட்டவேணுமென்கிற திருவுள்ளம் அவ்வாசிரியர்கட்கு உண்டாயிற்று; ஸ்ரீ தேசிகன் இராமாநுச நூற்றந்தாதியையுஞ் சேர்த்து நாலாயிரமாகக் கணக்கிடத் திருவுள்ளம் பற்றினர்; அப்பிள்ளை அந்த நூற்றந்தாதியைத் தவிர்த்து நாலாயிரமாகக் கணக்கிடக் கருதியருளினர். திருமடல்களை ஒவ்வொரு பாட்டாகக் கொண்டால் இவர்களுடைய திருவுள்ளம் நிறைவேறுதற்கு அவகாசமின்றியிருந்தது. இரண்டு திருமடல்கள் தவிர மற்ற திவ்ய ப்ரபந்தங்கள் இருபத்திரண்டில் ௩ளஎச பாட்டுக்கள் மாத்திரமே தேறுகின்றன. இராமாநுச நூற்றந்தாதியின் நூற்றெட்டுப் பாட்டுக்களையுங் கூட்டிக்கொண்டால் ௩௮௮உ பாட்டுக்கள் தேறுகின்றன. ஆகவே, நாலாயிரத்திற்கு நூற்றுப்பதினெட்டு பாட்டுக்கள் தேவையாயின. அதற்காகச் சிறிய திருமடலை நாற்பது பாட்டாகவும் பெரிய திருமடலை எழுபத்தெட்டு பாட்டாகவும் பிரித்துக்கொண்டு பூர்த்தி செய்தருளினர் தேசிகன். நூற்றந்தாதியையொழிய நாலாயிரம் கணக்கிடத் திருவுள்ளங்கொண்ட அப்பிள்ளைக்கு உஉசு பாட்டுக்கள் தேவையாயின. அதற்காக அவர் சிறிய திருமடலை எஎ௨, பாட்டாகவும், பெரிய திருமடலை கச௮௨, பாட்டாகவுங்கொண்டு கணக்கிட்டுப் பூர்த்தி செய்தருளினர்.

["ஸ்திதஸ்ய கதிச் சிந்தநீயா"] உள்ளதற்கு ஒருவழி விடவேண்டும் என்ற நீதியை யடியொற்றி இங்ஙனே ஒரு ஸமாதாநம் காட்டினோமென்க.

இலக்கணப்படி திருமடலை ஒரே பாட்டாகக் கொள்வதே ஏற்கும். இப்படியாகில், இருநூற்றுச்சொச்சம் பாட்டுக்கள் குறைதலால் நாலாயிரம் என நாடெங்கும் வழங்குவது சேருமாறு எங்ஙனே யென்னில்; உலகத்தில் ஒரு பெரிய தொகைக்குச் சில எண்கள் குறைந்தாலும் பெரிய தொகையை யிட்டே வழங்குவதுண்டு;

நாலாயிரக்கணக்குக்கு நூறு இருநூறு குறைந்தாலும் நாலாயிர மென்றே வழங்கலாம். [உதாரணம்.] நம் ஆழ்வார்கள் "வாண னுயிரந்தோள் துணித்த" என்றும் "இண்டவாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்த" என்றும் அருளிச்செய்துள்ளமை அனை வருமறிவர்; பரமசிவன் பிரார்த்தனையால் பாணாஸுரனை $ நான்கு கைகளோடும் உயிரோடும் எம்பெருமான் விட்டருளினனென்பது ஸ்ரீ பாகவதாதிகளில் ப்ரஸித்தம். இனி, கீழ்க்குறித்த ஆழ்வார் பாசுரங்களுக்கும் இப்புராண வரலாற்றுக்கும் ஐககண்டியம் பண் ணப்புக்கால், ஆயிரத்துக்கு நாலைந்து குறையினும் ஆயிரமென்றே சொல்லலாமென்று அனைவரும் அங்கீகரிக்கவேண்டுமே. இனி திரு வாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு பாட்டாயிருக்க, ஆழ்வார் தாமே "குருகூர்ச்சடகோபன் சொன்ன ஓராயிரம்" என்று பல விடங்களிலும் அருளிச்செய்தது சேரும்படி எங்ஙனே? பெரிய திருமொழி க௦௮௪ பாட்டாயிருக்க, "பொங்குபுகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரம்" என்றது எங்ஙனே? நூற்றெட்டுப் பாட்டுக்களமைந்த பிரபந்தத்தை "இராமாநுச நூற்றந்தாதி" என்கை சேரும்படி எங்ஙனே? ஆயிரத்தெட்டு ச்லோகங்களமைந்த ஸ்தோத்ரத்தைப் பாதுகாஸஹஸ்ரம் என்றும், எழுபத்தினொன்கு ச்லோகங்களமைந்த ஸ்தோத்ரத்தை யதிராஜ ஸப்ததி என்றும் சொல்வது எங்ஙனே? என்றிப்படி பலவற்றையுமெடுத்துக்காட்டிக் கேட்பார்க்கு—ஆயிரத்துக்கு நூறு ஐம்பது மிகுந்தாலும் ஆயிர மென்றே வழங்கலாமென்றும் நூற்றுக்குப் பத்து எட்டு மிகுந்தா லும் நூறென்றே வழங்கலாமென்றும் மறுமொழி யுரைத்தலில் மயங்குவாரில்லையே.

இவ்வுதாஹரணங்களால், ஸ்வல்பம் ஏற்றத்தாழ்வு அகிஞ்சித் கரம் என்பது நன்கு விளங்கும். இவ்வகையில் நாலாயிரமென்ற வ்யவஹாரம் நன்கு பொருந்தத் தடையில்லை யென்றுணர்க.

இஙஙனம்:

பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கரார்யதாஸன்.

---

$ ஹரிவம்சம் விஷ்ணு பர்வத்தில் ௧௨௬ – ஆவது அத்தியாயத்தில் இரண்டு கைகளோடு விட்டருளினதாக வரலாறு காண்கிறது; பிரகிருதத் தில் இரண்டு வகையும் துல்யம்.

ஸ்ரீ:

# சிறிய திருமடலின் தனியன்.



(பிள்ளை திருநறையூரரையர் அருளிச்செய்தது.)

நேரிசை வெண்பா.

முள்ளிச் செழுமலரோர் தாரான் முளை மதியம்
கொள்ளிக்கென் னுள்ளங் கொதியாமே—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி
மருவாளன் தந்தான் மடல்.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| செழு முள்ளி மலர் ஓர் தாரான் | செழுமை தங்கிய முள்ளி மலர்களினாலாகிய ஒப்பற்றமாலையை அணிந்து கொண்டிருப்பவரும், | கார் கலியை வெட்டி | அஜ்ஞாநதோஷத்தை ஒழித்தவருமான |
| வள்ளல் | (ஸ்ரீஸூக்திகளை அளவறத் தந்தருளுகையாலே) மிக்க உதாரரும், | சீர்கலியன் | ஸ்ரீ திருமங்கையாழ்வார் |
| திரு ஆளன் | ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை ஆள்பவரும் | முளை மதியம் கொள்ளிக்கு என் உள்ளம் கொதியாமே | உதிக்கின்ற சந்திரனாகிய கொள்ளியிலே என் நெஞ்சு பரிதபியாதபடிக்கு |
| மரு வாளன் | பொருந்திய வாளையுடையவரும் | மடல்தந்தான் | திருமடல் பிரபந்தத்தை அருளிச் செய்தார். |

* * *—முளைத்தெழுகின்ற சந்திரனைவிரஹிகள் கண்டவாறே 'இவன் சந்திரனல்லன், சண்டனேயாவன்' என்று நிச்சயித்துக் கொள்ளியைக் கண்டாற்போலே குடல் குழம்பிக் கொதிப்பர்கள்; அப்படிகொதிக்கவேண்டாதபடி திருமங்கையாழ்வார், விரஹதாபஹரமான இத்திருமடலெனும் திவ்யப்பிரபந்தத்தைத் தந்தருளினார் என்கிறது. உலகத்தில் விஷயாந்தரங்களில் ஈடுபட்டவர்கள்

தம் அபிமத விஷயத்தைப் பிரிந்து "𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑌣𑍍𑌡𑌕𑌰𑌾𑌯𑌤𑍇" [சந்த்ரச் சண்டகராயதே] என்று சந்திரனைக்கண்டு எப்படி தாபமெய்துவார்களோ, அப்படியே பகவத் விஷயத்தி லீடுபட்டவர்களும் எம்பெருமானாகிற தலைமகனைப் பிரிந்தகாலத்து, சந்திரனைக் கொள்ளியாகவே கருதித் தபிக்கப் பெறுவர்களென்பதை "போந்த வெண்திங்கள் கதிர்சுடமெலியும்" என்ற இவ்வாழ்வார் பாசுரத்தாலும், "மேவுதண்மதியம் வெம்மதியமாலோ" என்ற நம்மாழ்வார் பாசுரத்தாலும் அறிக. இங்கு முளைமதியமென்று சந்திரனை எடுத்துக்கூறியது—விரஹத்தில தாபத்தை விளைக்கவல்ல * மல்லிகை கமழ் தென்றல்முதலிய மற்றெல்லாப் பொருள்கட்கும் உபலக்ஷணமென்க. இனி நாம் எம்பெருமானைப் பிரிந்து சந்திரன் முதலிய பல பாதக (𑌬𑌾𑌧𑌕) பதார்த்தங்களினால் வருந்தவேண்டாதபடி ஆழ்வார் திருமடலை நமக்கு உபகரித்தார் என்றவாறு. எனவே, இத்திருமடலை ஒருகால் அநுஸந்தித்தவாறே எம்பெருமான் அஞ்சி நடுங்கி அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து முகங்காட்டியருள்வானாகையாலே பகவத் விரஹமும் விரஹதாபமும் ஒன்றும் நமக்கு நேரிட ப்ரஸக்தியில்லையென்றதாயிற்று.

திருமங்கையாழ்வாரைப்போலவே கனத்த பகவத்காமமுடையவரால் இப்பாசுரம் அருளிச் செய்யப்பட்டதாகக் கொள்க.

முள்ளிச் செழுமலரோர்தாரான்—கலியனுக்கு முள்ளிப்பூமாலை ஜாதிக்கு ஏற்ற மாலை போலும். இப்போது அர்ச்சாவதாரத்தில் (திருநகரியில்) முள்ளிச்செழுமலர்த்தார் வடிவமான திவ்யாபரணம் ஸ்வர்ணமயமாக உள்ளமை உணர்க.

தாமரை என்னும் பொருளதான முளரி என்னுஞ் சொல் முள்ளியென மருவிற்றென்று கொண்டு தாமரை மாலையை யணிந்துள்ளவரென்று பொருள் கூறுவாருஞ் சிலருளர்.

"மலரோதாரான்" "மலரோர்தாரான்" "மலரோன் தாரான்" என்பன பாட பேதங்கள்.

மதியம்=அம்—சாரியை. [கார்க்கலியை வெட்டி.] கார்—இருள்; அதாவது அஜ்ஞானம். வெட்டி என்பதை வினையெச்சமாகக் கொண்டு உரைத்தலு மொன்று.

தனியன் உரை முற்றிற்று.

ஸ்ரீ:

# இத்திருமடலின் தாத்பர்யஸங்க்ரஹம்.



[இத்திருமடல் மற்றப்பிரபந்தங்களைப்போல நாலடி கொண்ட பாட்டுடைத்தல்லாமல் மிக நீண்டதோர் பிரபந்தமாய் முழுதும் ஒரே வாக்கியார்த்தமாயிருப்பதனால், கண்டம் கண்டமாக நாம் உரையிட்டுக் கொண்டு போவதில் ஆங்காங்கு பதப் பொருள்கள் ஏற்பட்டாலும் அகண்ட வாக்கியார்த்தம் நெஞ்சிற் பதிவது அரிதாயிருக்கு மாகையாலே அக்குறை நீங்க, மூலத்தைப் பெரும்பான்மை தழுவி இப்பிரபந்தத்தின் ஸாரமான தாற்பரியம் இங்கே எழுதப்படுகின்றது—கற்போர்தம் மனம் தெளிய.]

*எம்பெருமானது பத்நியாகையாலே 'பூமிப்பிராட்டி' என வழங்கப் பெறுகின்ற இந்நிலமகள் ஸ்திரீகளுக்கு உரிய லக்ஷணங்களை நன்றாக வுடையளாயிருக்கின்றாள்; எங்ஙனே யெனில்;—நுனியில் கறுத்த இரண்டு கொங்கைகளை யுடையராயிருப்பர் மாதர்கள்; இந்நிலமகளும், மேகங்கள் படியப்பெறுவதனால் கறுத்த சிகரத்தை யுடையனவான திருமாலிருஞ்சோலை திருவேங்கடமெனும் இரண்டு சிறந்த திருமலைகளைக் கொங்கைகளாகக் கொண்டிருக்கின்றாள்; மாதர்கள் சிறந்த ஆடையை அணிவர்களே; இந்நிலமகளும் கடல் தன்னை வஸ்த்ரமாக அணிந்து கொண்டிரா நின்றாள்; மாதர்கள் ஒளிமிக்கதொரு சுட்டியை நெற்றிக்கு அணியாகக் கொள்வர்களே; இவளும் சூரியனைச் சுட்டியாக வுடையாள்; மாதர்கள் ரத்நஹாரங்களையணிந்த மார்பையுடையராயிருப்பர்களே; இவளும் கலக்கத்தாலும் மணிகளைக் கொழித்துக்கொண்டு வருதலாலும் செம்மை பொருந்திய வெள்ளநீரை யுடைய ஆறுகளை ஆரம் பூண்ட மார்பாக வுடையாள்; மாதர்கள் கரிய கூந்தல் முடியை யுடையராயிருப்பர்களே; இவளும் நீர் கொண்டெழுந்த காள மேகங்களைக் கூந்தலாக வுடையாள்; குலமாதர் கட்டுங் காவலுமாயிருப்பர்களே; இவளும் ஆவரண ஜலத்தையே தனக்குக் காப்பாகவுடையாள்.*

*ஆக இவ்வகைகளாலே ஸ்த்ரீகட்கு உரிய லக்ஷணங்கள் அமையப் பெற்றுள்ள இந்நில மகளிடத்து வாழ்கின்ற மனிசர்களால் சொல்லப்படுகின்ற புருஷார்த்தங்கள்—தருமம், அர்த்தம், காமம் என மூன்றேயாம். இவற்றுள் பிரதானமான காம புருஷார்த்தத்தைப் பெற்றவர்கட்கு மற்றையிரண்டு புருஷார்த்தங்களும் எளிதில் பெறப் பட்டன்வாம்.*

இம்மூன்றுதவிர மோக்ஷமென்றொரு நான்காவது புருஷார்த்த மிருப்பதாகச் சிலர் கூறுவது விவேகமற்ற கூற்றேயாம். விவேகமுள்ளவர்கள் மோக்ஷமென்றொரு பரோக்ஷ புருஷார்த்தமுள்ளதாகச் சொல்லவே மாட்டார்கள் இதனை நீங்களே நன்கு தெரிந்து கொள்ளுமாறு நான் விவரிக்கின்றேன், கேளுங்கள் ;—

மோக்ஷத்துக்குப் போகிறவர்கள் ஸூர்ய மண்டலத்தைப் பிளந்துகொண்டு அதனூடே போவதாம் ; அந்த ஸூர்யன் ஒற்றைச்சக்கரத் தேரிலிருப்பவனும் ; அத்தேருக்கு ஏழு குதிரைகள் பூட்டியுள்ளனவாம் ; அக்குதிரைகள் மேக மண்டலத்தில் ஸஞ்சரிப்பனவாம் ; மிகத்தாழ்ந்த நிலத்திலே இருந்துகொண்டு நம்மாற் கண் கூசாதே காணவுமொண்ணாத அந்த ஸூர்ய மண்டலத்தைப் பிளந்துகொண்டு ஒருவன் போவதென்பது எவ்வளவு பொருத்தமான வார்த்தையென்பதை நீங்களே விமர்சிக்கலாம் ;

அவ்வழியே போனவர்கட்கு மீட்சியில்லாத ஒரு வைகுந்த மாநகர் கிடைக்கின்றதாம் ; அதில் ஆராவமுதம் அநுபவிக்கப்படுகின்றதாம் ; இதுதான் மோக்ஷ புருஷார்த்தமாம். இத்தனையும் முழுப்பொய்யுரையேயன்றி இப்படியும் ஒன்று இருக்கக்கூடியதுண்டோ ?

அப்படிப்பட்ட மோக்ஷமொன்று உள்ளதாகவே வைத்துக் கொள்வோம். இருட்டறையில் விளக்குப்போலே ஸகல குணங்களும் நன்கு விளங்குமிடமான அர்ச்சாவதாரத்தை விட்டு "உண்டோ ? இல்லையோ ?" என்று ஸந்தேஹித்தற்கிடமான அம்மோக்ஷ நிலத்தைப் பற்றுவதும் ஒரு பொருளோ ? முயலை விட்டுக் காக்கையைத் தொடர்ந்து செல்வதோடொக்குமன்றோ அஃது.

[இதுவரையில் ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று அருளிச் செய்தது; இனி மேலுள்ளதெல்லாம்—க்ருஷ்ணாவதாரத்தில் குடக்கூத்திலே ஈடுபட்டு அன்னவனை அநுபவிக்கப்பெறுமையாலே மடலெடுக்கத் துணிந்த ஒரு பிராட்டியின் பாசுரத்தாலே தமது நிலைமையைப் பேசுகிறபடி.]

ஓ மங்கைமீர்! எனக்கு நேர்ந்ததொரு அவஸ்தையைச் சொல்லுகிறேன் கேளுங்கள் ; நான் உலகத்தில் ஸம்ஸாரவாழ்க்கைப் பெண்டுகள் செய்கிறபடியே தலைமயிர் முடியை எடுத்துக்கட்டிக் கச்சு அணிந்துகொண்டு அரையிலே மேகலை தரித்துக் கண்ணிலே மையிட்டு இப்படி அலங்காரங்கள் செய்துகொண்டு பந்தடிக்கும்

விளையாட்டிலே ஊன்றியிருந்தேன்; இருக்கையில், தாமரைக் கண்ணனென்று பேர்பெற்றதொருவன் அனைவரும் மகிழப் பறையறைந்துகொண்டு "இக்கூத்துக்குத் தப்பிப்பிழைக்கும் பெண்டிரும் இத்தெருவே உண்டோ?" என்று சொல்லிக்கொண்டு குடக்கூத்தாடா நின்றமைகண்ட பெண்டிர்களெல்லாரும் "அடி பரகால நாயகி! குடக்கூத்துக்காண நீயும் வரமாட்டாயோ?" என்றழைக்க, போராத காலம் வலிதாயிருந்தபடியால் நானும் சடக்கென வெழுந்து அங்கே சென்றேன்;

சென்றதும் மேனிநிறமிழந்தேன், கைவளைகள் கழன்றொழியப் பெற்றேன்; ப்ரியஹிதபரர்கள் சொல்லுமதைக் காதுகொடுத்துங் கேட்கமாட்டாத நிலைமையளாயினேன்; அறிவென்பது அடியோடே போயிற்று; சரீரம் ஒழிந்தால் ஆறியிருக்கலாமே; அதுவும் ஒழிந்ததில்லை; பேதைமை மிக்கது; இங்ஙனேயான என்னை என்தாய் கண்டு வருந்தி எப்படியாகிலுமென்னைத் தெளிவிக்க வேண்டி பாகவத ஸ்ரீபாததூளியைக்கொண்டு காப்பிட்டாள்; செங்குறிஞ்சிமாலையை நிரூபகமாகவுடைய சாஸ்தா என்னும் தேவதாந்தரத்திற்கு ஓர் அஞ்ஜலியும் செய்தாள்; அத்தனை செய்தும் என் மனோவியாதி தீரவில்லை; பிடித்த பைத்தியம் கழியவில்லை; போனா மேனிநிறம் மீண்டதில்லை;

இங்ஙனமாக நான் தளர்வுற்றிருக்கும்படியைக் கண்ட சில பழங்கதை யுணர்ந்த ப்ராட்டிமார்கள் வந்து சேர்ந்து 'ஐயோ, குறி சொல்லுங் குறத்தியை வரவழைத்துக் குறிகேட்கலாமே; நோய்க்கு நிதானம் வெளிப்படுமே; இது கைகண்ட உபாயமாயிற்றே!' என்று சொல்ல; அவ்வளவிலே ஒரு குறத்தி தானாகவே வந்து சேர்ந்து தைவாவிஷ்டையாகி ஒரு சிறு முறத்திலிருந்து சில நெற்களையெடுத்துக் குறிபார்த்து வேர்வையடைந்து விதிர்விதிர்த்து மயிர்க்கூச்செறிந்து கையைமோந்துபார்த்து நாமமாயிரமேத்த நின்ற நாராயணனைச் சிந்தித்து அவனது காளமேகத்திருவுருவையும் வலங்கையாழி யிடங்கைச்சங்கையும், தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையும் அபிநயித்துக்காட்டி, பிறகு வாய்திறந்து "அம்மனைமீர்! நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டா; ஏதோ வொரு புதுத்தெய்வம் உங்கள் பெண்ணைத் தீண்டி நோய்செய்யவில்லை; நோய்செய்த தெய்வத்தை நானறிந்தேன்; உங்கட்குந் தெரியச் சொல்லுகிறேன் கேளுங்கள்;

இவ்வுலகத்தை அளந்தவனும், இலங்கையைப் பாழ்படுத்தின வனும், குன்றமெடுத்துக் கல்மழை காத்தவனும், அமரர் அமுத முண்ணக் கடல் கடைந்தவனும் எவனோ அவன்—ஊரிலுள்ள பசுக் களையெல்லாம் மேய்த்தும் உலகங்களையெல்லாம் பிரளயங் கொள் ளாதபடி ஒருகால் திருவயிற்றிலே வைத்து நோக்கியும் பின்பு வெளியிட்டும் இத்தனை செய்தும் த்ருப்திபெறாதவனாய் இன்னும் தனது குணங்களை விளங்கச்செய்யவேண்டித் திருவாய்ப்பாடியிலே வெண்ணெய் களவுகண்டு அக்குற்றத்திற்காகக்கண்ணிக்குறுங்கயிற் றால் உரலோடே கட்டுண்டவனாயும், காளியநாகத்தின் கொழுப்பை யடக்கினவனாயும்; சூர்ப்பணகையின் காதையும் மூக்கையும் அறுத்து அவளது தமையனான கரனைப் போர்க்களத்திலே நரக வேதனையநுபவிக்குமாறு பங்கப்படுத்திக்கொன்றொழித்தவனாயும், பிராட்டிக்காக இராவணனது தலைகளை யறுத்தொழித்தவனாயும், நரசிங்கவுருக்கொண்டு இரணியனுடலைப் பிளந்தவனாயும், மாவலி கையில் நீரேற்று மூவுலகளந்தவனாயும், கூர்மரூபியாக மந்தரகிரி யைத்தாங்கி வாசுகியினால் கடலைக் கடைந்தவனாயும், திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனாயும், ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு முதலை யால் நேர்ந்த இடரைக்களைந்தவனாயும், ஆயிரம் திருநாமமுடைய னாயும் ப்ரஸித்தனாயிரா நின்றானன்றோ; அப்பெருமான்தான் உங்கள் பெண்ணை இப்பாடுபடுத்தினவன்" என்று கூறினள்;

அங்ஙன் சொல்லக்கேட்ட என் தாய் 'அம்மா! வேறு தேவ தாந்தரமொன்றுமன்றே இந்நோய் செய்தது; அவ்வெம்பெருமான் தானே; அவனேயாகில் தன்னடியாளான இவளுக்குத் திருத்து ழாய்ப் பிரசாதம் தந்தருளாதொழிவனோ; தந்தே தீருவன்' என்று சொல்லிவிட்டு விசாரமற்று ஸ்வகார்ய பரையாயொழிந்தாள்:

அவன் குடக்கூத்தாடும்போது அவனது காரார்ந்த திருமேனி யைக் கண்டதுமுதல் நான் நிலைதடுமாறி வாய்பிதற்றி விகாரமுற் றேன்; இந்நிலைமையிலே வாடைதானும் வந்து வீசி விரஹத்தால் மெலிந்து கிடக்குமென்னுடலைத் துன்பப்படுத்துந் திறம் சொல்லி முடியாது; கையிலே மடலைக்கொண்டு தெருவேறப் புறப்படத் துணிவுடையேனாயினும் யாரேனுஞ் சிலர் சிறக்கேடான வார்த்தை களைச் சொல்லிப் பழிப்பர்களேயென்றிட்டு அங்ஙன் புறப்படாது வாளா இருந்திட்டேன்;

இனி அவனுக்குத் தூது விடுவோமென்று பார்த்து வேறொரு அநுகூலரையுங் காணாமையாலே நெஞ்சுதன்னையே அழைத்து 'நெஞ்சே! நீ எனக்காக மணிவண்ணன் பக்கலிலே சென்று திருத்துழாய்ப் பிரசாதம் கேள்; தருகிறேன் தரமாட்டேன் என்பதில் ஏதாவது ஒரு பதில் வார்த்தையை அவன் சொல்லும்படி நான் சொல்லியனுப்புகிற சொல்லை அயலாருடைய காதில் படாதபடி ரஹஸ்யமாக நீ சொல்லு; அதுகேட்டு அவன் அன்புதோற்ற விசாரித்தாலும் சரி; அந்த ஸங்கதியே நமக்குத் தெரியாதென்று திரஸ்கரித்தாலும் சரி; ஏதோ ஒரு பதிலைத் தெரிந்துகொண்டு அவ்விடத்தில் தாமதித்து நில்லாமல் கடுகவந்து சேர்ந்திடு' என்று சொல்லிப் போகவிட்டேன். போன அந்நெஞ்சு என்னை மறந்து அக்கடல்வண்ணனிடத்தே ஆழ்ந்தொழிந்தது. என்னிடத்துப் பொறுமையுடையரான ஊராருடைய எண்ணமே பலித்ததாயிற்று. என் நெஞ்சே எனக்கு உதவாதிருக்க வேறு யார் எனக்குத் துணைபுரிவார்? என்னைப்பற்றிக் கவலை கொள்வாரே கிடையாது. நெருப்பினருகில் வைத்த மெழுகுபோலே இற்றுப்போகாநின்றது என் ஆத்மவஸ்து. ஊரெல்லாம் துஞ்சினாலும் இக்கண்கள் உறங்குகின்றில. அவனை மறந்தாகிலும் பிழைக்கலாமே நான், அப்படி மறக்கவும் மாட்டாதே அவனது நாமங்களையே வாய்வெருவிக் கொண்டிராநின்றேன்.

"நாயகன் தானேவந்து சேருகிறான்; சிறிது ஆறியிருக்கவேண்டாவோ? இப்படியும் பதறலாமோ?" என்கிறீர்களோ? நன்று சொன்னீர்கள்; கடல்போல வளர்ந்த காமத்தை யுடையவர்கள் நன்மை தீமைகளை யுணர்ந்து அடங்கியிருக்கக்கடவர்களோ? வாஸவதத்தை யென்று ப்ரஸித்தையான ஒருத்தி தனது தோழிமார்களையெல்லாம் விட்டொழிந்து விலங்கிட்டிருந்த வத்ஸராயன் பின்னே தெருவேறப் புறப்பட்டுப் போனாளே, அவளை இகழ்ந்தார் ஆரேனுமுண்டோ? அவளைப்போன்ற துணிவு உடையளான எனக்கு இத்துணிவுக்கு ப்ரதிகோடியாக ஸ்வரூபசிக்ஷை பண்ணுகிறவர்கள் எனக்குத் தலைவரல்லர்; அவர்களது சொல்லை நான் பேணமாட்டேன்; பின்னை என் செய்வேனென்றால்,

அவனுடைய திருமேனியை ஸேவித்துக் காதல் தீரவேண்டித் திருவேங்கடம் முதலிய திருப்பதிகள்தோறும் நுழைந்து அவனுடைய குணக்கேட்டை விளக்க வல்ல நூதன ஸஹஸ்ரநாமங்களைப் பேசிக்கொண்டு, இகழ்வாருடைய பேச்சுக்களை மதியாமல் தெருவேற மடலூர்ந்து செல்வேனத்தனை—என்று தலைக்கட்டிற்றாயிற்று.

---



ஸ்ரீ ஃ

திருமங்கை மன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# சிறிய திருமடல்.

[பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய திவ்யார்த்த தீபிகையென்னும் விரிவுரையுடன் கூடியது.]



நூற்றைம்பத்தைந்து அடிகள் கொண்ட

கலிவெண்பா.

காரார் வரைக்கொங்கை கண்ணார் கடலுடுக்கை
சீரார் சுடர்ச்சுட்டி செங்கலுழிப் பேராற்றுப்
பேராற மார்பிற் பெருமா மழைக்கூந்தல்
நீரார வேலி நிலமங்கை யென்னுமிப்
பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே அம்மூன்றும்
ஆராயில் தானே அறம்பொரு ளின்பமென்று—

பதவுரை.

கார் ஆர் வரை கொங்கை — மேகங்கள் நிறைந்து படியப் பெற்ற (திருமாலிருஞ்சோலையும் திருவேங்கடமுமாகிற) திருமலைகளை முலையாக உடையளாயும்,

கண் ஆர் கடல் உடுக்கை — இடமுடைத்தான [விசாலமான] கடலைச் சேலையாக வுடையளாயும்,

சீர் ஆர் சுடர் சுட்டி — (ப்ரகாசமாகிற) சிறப்புப் பொருந்திய ஸூர்யனைச் சுட்டியென்னும் ஆபரணமாக வுடையளாயும்,

செம் கலுழி பேர் ஆறு பேர் ஆரம் மார்பின் — சிவந்து கலங்கியுள்ள பெரிய ஆறுகளை சிறந்த ஹாரம்பூண்ட மார்பாக உடையளாயும்,

பெரு மா மழை கூந்தல் — பெருத்துக் கறுத்த மேகங்களைக் கூந்தலாக வுடையளாயும்,

ஆரம் நீர் வேலி — ஆவரண ஜலத்தைக் காப்பாகவுடையளாயுமிருக்கிற,

நிலம் மங்கை என்னும் இ பாரோர் — ஸ்ரீ பூமிப்பிராட்டி யென்று சொல்லப்படுகிற இந்நிலவுலகத்திலே உள்ளவர்களால்

| | |
|---|---|
| சொலப்பட்ட | கூறப்படுகின்ற (புருஷார்த்தங்கள்) |
| மூன்று அன்றே | மூன்றேயாம்; |
| அம்மூன்றும் ஆராயில் | அம்மூன்று புருஷார்த்தங்கள் எவை யென்று ஆராய்ந்தால், |
| அறம் பொருள் இன்பம் என்று | தர்மம் அர்த்தம் காமம் என்பனவாம்; |

* * *—"காரார்வரைக் கொங்கை" என்று தொடங்கி "நீராரவேலி" என்னுமளவும் பூமிப்பிராட்டியை வருணிப்பதாம். பூமிப்பிராட்டியின் வருணனைக்கு இப்போது இங்கே என்ன ப்ரஸக்தி என்னில்; புருஷார்த்தங்களைச் சொல்லக் கருதினாராகையாலே அப் புருஷார்த்தங்களைப் பரிக்ரஹித்த சேதநர்களைச்சொல்லவேண்டிற்றாகி, அச் சேதநர்கள் இருக்குமிடத்தைச் சொல்லவேண்டி அவர்கள் இருக்கப்பெற்ற பூமியைச் சொல்லப்புகுந்து அவ்வழியாலே அப்பூமிக்கு அபிமாநிநியான பூமிப்பிராட்டியை வர்ணிக்கிறாரென்க.

தான் வைவர்ணியப்பட்டு வருந்திக்கிடக்க, தனது சக்களத்தியாகிய பூமிப்பிராட்டி குறியழியாத அவயவங்களுடனே ஒழுங்காக இருக்கப்பெற்றாளே! என்ற உகவை தோன்ற வருணிப்பதாகச் சொல்லுவாருமுளர். இப்பரகால நாயகியும் பூமிப்பிராட்டியும் எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டவர்களாதலால் சக்களத்தி முறைமை யுண்டென்க.

பூமிப்பிராட்டி யென்றால் மங்கையர்க்கு உரிய ஸந்நிவேசங்கள் அவளுக்கு இருக்கவேணுமே யென்ன; அவ்வளவும் செவ்வனே உண்டு என்று மூதலிக்கிறார் ஆறு விசேஷணங்களினால். கறுத்த முலைக் கண்களையுடைய முலைகளின் ஸ்தானத்திலே மேகம்படிந்த மலைகள் உள்ளன வென்கிறார் முதல் விசேஷணத்தாலே. இங்கு வரை என்று பொதுப்படக்கூறி யிருந்தாலும் "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையுமென்னு மிவையே முலையா வடிவமைந்த" என்று இவ்வாழ்வார்தாமே பெரிய திருமடலில் அருளிச் செய்ததுகொண்டு திருமாலிருஞ் சோலைமலையும் திருவேங்கடமலையு

மென்று சிறப்பாகக் கொள்ளலாயிற்று. சிறந்த மேரு முதலிய மலைகளை நிலமங்கைக்குக் கொங்கையாகச் சொல்லலாமாயிருக்க அவற்றைவிட்டுத் தென் வடமலைகளைச் சொன்னது—நாயகன் விரும்பிப் படுகாடு கிடக்குமிடமே முலையாகத் தகுதலால்.

அழகிய சேலையின் ஸ்தானத்திலே கடல் உள்ளதென்கிறார் இரண்டாவது விசேஷணத்தால். "ஸமுத்ராம்பரா" [ஸமுத்ராம்பரா] என்று வடமொழியிலே பூமிக்குப் பெயர் வழங்குமாறறிக. நெற்றிச்சுட்டியின் ஸ்தானத்திலே ஸூர்யனுளனென்கிறார் மூன்றாம் விசேஷணத்தால். மார்பின் ஸ்தாநத்திலே பெரிய ஆறுகளும், அம்மார்பிலணியும் ரத்நமயமான ஆபரணங்களின் ஸ்தாநத்திலே அவ்வாறுகளின் கலங்கிய செந்நீர்ப் பெருக்குகளும் உள்ளனவென்கிறார் நான்காம் விசேஷணத்தால். மயிர்முடியின் ஸ்தானத்திலே நீர்கொண்டெழுந்த காளமேகங்கள் உள்ளனவென்கிறார் ஐந்தாம் விசேஷணத்தால். இனி, சிறந்த மஹிஷியென்றால் கட்டுங்காவலுமாயிருப்பளே, அஃது இவளுக்கு முண்டோவென்ன, ஆவரண ஜலமே இவளுக்குக் காப்பென்கிறார் ஆறாம் விசேஷணத்தால்.

**நீர் ஆரம் வேலி** = ஆரம் என்றது 'ஆவரணம்' என்ற வடசொல்லின் சிதைவு என்பர். அண்டத்துக்குப் புறம்பே பெருகிக் கிடப்பது ஆவரண ஜலம் என்றுணர்க. இப்படிகளாலே நிலமங்கை என்றற்கு உரிய இப்பூமியிலே வாழ்பவர்கள் புருஷார்த்தமென்று சொல்வது, அறம் பொருள் இன்பம் என்கிற தர்ம அர்த்த காமங்கள் மூன்றேயாம்.

ஆரா ரிவற்றி னிடையதனை யெய்துவார்
சீரா ரிருகலையு மெய்துவர் சிக்கனமற்று
ஆரானு முண்டேன்பா ரென்பது தானதுவும்
ஓராமை யன்றே உலகத்தார் சொல்லுஞ்சொல்
ஓராமை யாமா றதுவுரைக்கேன் கேளாமே
காரார் புரவியேழ் பூண்ட தனியாழித்
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா வமுதமங் கெய்தி அதில்நின்றும்
வாரா தொழிவதோன் றுண்டே அதுநிற்க
ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே—

பதவுரை.

| | |
|---|---|
| இவற்றி னிடை | இம்மூன்று புருஷார்த்தங்களுள் |
| அதனை எய்துவார் ஆர் ஆர் | அக்காம புருஷார்த்தத்தை அடைகின்றவர்கள் யாவரோ, |
| சீர் ஆர் இரு கலையும் எய்துவர் | (அவர்கள்) சீர்மை பொருந்திய தருமம் அர்த்தம் என்கிற மற்றை யிரண்டு அம்சங்களையும் அடைந்தவராவர்; |
| ஆரானும் | அறிவில் குறைந்த யாரோ சிலர் |
| சிக்கன மற்று உண்டு என்பார் | சாச்வதமான (மோக்ஷமென்று) மற்றொரு புருஷார்த்தமிருப்பதாகச் சொல்லுவர்கள்; |
| என்பதுதான் அதுவும் ஓராமை அன்றே | (அவர்கள் அப்படி) சொல்லுகிறதும் ஆராய்ச்சியில்லாமல் (மூடத்தனமாகச்) சொல்வதேயாம்; |
| உலகத்தார் சொல்லும் சொல் அது | உலகத்தவர்களாலே சொல்லப்படுகிற அந்த மோக்ஷவாதமானது |
| ஓராமை ஆம் ஆறு உரைக்கேன் | ஆராய்ச்சியற்றது என்னுமிடத்தை (உங்கட்குத் தெரியச்) சொல்லுகிறேன்; |
| கேள் ஆமே | (அதனை நீங்கள் காது கொடுத்துக்) கேட்கக் கூடுமே? (கேளுங்கள்;) |
| கார் ஆர் புரவி ஏழ் பூண்ட தனி ஆழி | மேக மண்டலத்தில் செல்லுவதும் ஏழு குதிரைகள் பூட்டப்பெற்றதும் ஒற்றைச் சக்கரத்தை யுடையதுமான |
| தேர் ஆர் | தேரிலே பொருந்தி யிருப்பவனும் |
| நிறை கதிரோன் | நிறைந்த கிரணங்களை யுடையவனுமான ஸூர்யனுடைய |
| மண்டலத்தை கீண்டு புக்கு | மண்டலத்தைக் கீண்டு கொண்டு அதன்வழியே போய் |
| அங்கு | ஒரு தேச விசேஷத்திலே [ஸ்ரீவைகுண்டத்திலே] |
| ஆரா அமுதம் எய்தி | பரம போக்யமான அம்ருதம் போன்ற பரம புருஷனைப் பெற்று |
| அதில் நின்றும் வாரா தொழிவது ஒன்று உண்டே | அப்பரமபதத்தில் நின்றும் என்றைக்கும் திரும்பி வாராமல் அங்கேயே கிடப்பதென்கிற ஒரு பொருள் பொருத்தமுடைத்தோ? |

| | | | |
|---|---|---|---|
| அது நிற்க | அவ்விஷயம் ஒரு புறமிருக்கட்டும்; | காக்கை பின் போவதே! | (உபயோகமற்ற) காக்கையின் பின்னே தொடர்ந்து போவாருண்டோ? |
| ஏர் ஆர் முயல் விட்டு | அழகிய முயலை விட்டு | | |

* * *—இனி, இம்மூன்று புருஷார்த்தங்களுள் காமபுருஷார்த்தமே சிறந்ததென்னும் தமது திருவுள்ளத்தை வ்யங்க்யமாக வெளியிடுகிறார்;—[இவற்றினிடை அதனை யெய்துவார் ஆரார், (அவர்) சீராரிருகலையுமெய்துவர்.] அதனை என்று தமக்கு உத்தேச்யமான காமபுருஷார்த்தத்தைச் சுட்டினபடி. காம புருஷார்த்தம் எவர்கட்குக் கைவந்ததோ, அவர்கட்கு அறம் பொருள்களும் கைவந்தனவேயாம் என்றபடி. இதன் உட்கருத்து யாதெனில்; காமமே ஸாத்யம், அதாவது பலன்; அதனைப் பெறுதற்கு அறமும் பொருளும் ஸாதநம்—(உபாயம்) என்பது இவர் திருவுள்ளம். எவர்கட்குப் பலன் கைபுகுந்ததோ, அவர்கள் அதற்கு வேண்டிய ஸாதநங்களையும் அநுஷ்டித்தவர்களாக ஆகக்கடவர்களாதலால், காமம் கைவந்தவர்கட்கு அறமும் பொருளும் கைவந்தனவேயாமென்பது அர்த்தாத் ஸித்தமாயிற்றென்க. அறம் பொருள்களை இருகலை என்றது—காமமே ப்ரதாந அங்கியாய், அவை அதன் கலாமாத்திரமாய் இருத்தல் பற்றியாம். கலையாவது ஏகதேசம்.

சிலர், “ஆரார் இவற்றின் இடையதனை எய்துவார்” என்று பிரித்து—தர்மார்த்த காமங்களுள் நடுப்பட்டதாகிய பொருள் கைவந்தவர்களுக்கு, முன்னும் பின்னுமுள்ள மற்றைப் புருஷார்த்தங்களிரண்டும் கைவந்தனவாம் என்பதாக ஆபாத ப்ரதீதிகொண்டு பொருள் சொல்லக்கூடும். அது ப்ரகரணத்தோடு பொருந்தாது; ஆழ்வார் திருவுள்ளத்துக்கும் சேராது. காமத்தைக் கடைப்பிடித்துச் சிறப்பித்துப் பேசுகிற ப்ரகரணமிறே இது. ஆழ்வார்க்குக் காமத்திலேயிறே இப்போது நோக்கு. காமம் நிஷித்தமன்றோ, அதனை ஆழ்வார் கடைப்பிடிக்கலாமோ? எனின்; விஷயாந்தர காமமென்றும், பகவத் விஷய காமம் என்றும் காமம் இருவகைப்படும்; பகவத் விஷய காமம் வேதாந்தங்களிலும் விதிக்கப்பட்டுள்ளது. அதனையே இங்கு ஆழ்வார் கடைப்பிடித்தாராதலால் குற்றமொன்று மில்லையென்க.

இனி, நான்காவதாக மோக்ஷ புருஷார்த்தமென்று ஒன்று உண்டென்பாருடைய ஸித்தாந்தத்தைத் தூஷிக்கிறார். இதுவென்? ஆழ்வார் நாஸ்திகரன்றே; ஆஸ்திகராயிருந்துவைத்து மோக்ஷத்தை இல்லைசெய்யலாமோ எனின்; உட் கருத்து அறிகின்றிலீர்கள். "நீள்விசும்பருளும்" என்றும் "இறந்தால் தங்குமூர் $ அண்டமே கண்டுகொண்மின்" என்றும் தமது பலபல திவ்ய ஸூக்திகளாலே பலச்ருதிகளிலே மோக்ஷத்தை அருளிச்செய்கின்ற இவ்வாழ்வார் மோக்ஷதூஷகராக எங்ஙனேயாவர்? பின்னை இந்நூலில் மோக்ஷத்தை இல்லைசெய்வானேன்? என்னில்; இங்கு * நஹி நிந்தாநியாயம் அநுஸந்திக்கத்தக்கது. மோக்ஷதூஷணம் இங்கு விளங்க நின்றாலும் அர்ச்சாவதார ப்ராவண்யத்தைச் சிறப்பித்துச் சொல்லுவதில் ஆழ்வார்க்கு முக்கிய நோக்கமென்று கொள்ள வேணுமேயல்லது மோக்ஷதூஷணத்தில் நோக்காகக் கொள்ளக் கூடாது. நஹிநிந்தா நியாயத்தின் கருத்து இதுவேயாம்.

மோக்ஷமுண்டென்பது அவிவேகிகள் சொல்லும்சொல் என்றதை நிரூபிக்கிறார்—காரார் புரவியேழ் என்று தொடங்கி. மேக மண்டலத்திலே ஸஞ்சரிக்கின்ற ஏழு குதிரைகள்பூட்டின ஒற்றைச் சக்கரமுடைய தேரிலே கதிராயிரமுடையனாய் விளங்குகின்ற ஸூர்யனுடைய மண்டலத்தைப் பிளந்துகொண்டு அவ்வழியே போய் ஒரு பரமபதமென்னும் தேசத்தை அடைவதாகவும் அங்கே ஆராவமுதத்தை அநுபவிப்பதாகவும் அவ்விடத்தை விட்டு ஒருநாளும் திரும்பி வருவதில்லையாகவும் இப்படிப்பட்ட கட்டுக்கதைகளைக் கூறுகின்றார்களே; விவேகிகள் இப்படி அஸம்பத்தப்ரலாபம் பண்ணுவர்களாவென்று நீங்கள் ஆராயமாட்டீர்களோ வென்கிறார். மேகமண்டலத்தில் குதிரைகள் ஓடுவதென்பது அஸம்பாவிதம்; ஒற்றைச் சக்கரமுடைய தேர் உள்ளதும் அஸம்பாவிதம்; அந்தத் தேரை ஏழுகுதிரைகள் இழுக்கவேண்டியதும் அப்ரஸக்தம்; நெடுந் தூரத்தினின்றும் கண்ணைச் செம்பளித்துப் பார்க்கவும் முடியாத ஸூர்யனைப் பிளந்துகொண்டு போவதென்பது ஸர்வாத்மநா அஸம்பாவிதம். இந்நிலத்திலே அர்ச்சாவதாரத்திலே ஆராவமுதம் ப்ராப்

$ அண்டம்—பரமபதம்.

தமாயிருக்க, பரோக்ஷமான வொரு தேசத்திலே ஆராவமுதமிருப்பதாகச் சொல்லுவதும் அதனை யநுபவிப்பர் என்ஞான்றும் மீளாதே அங்கேயே நித்யராயிருப்பரென்பதும் பொய்களினும் விஞ்சிய பொய் என்று அங்வாருஹ்யவாதம் பண்ணினாராயிற்று. [அங்வாருஹ்யவாதமாவது—உண்மையில் தனக்கு அபிமதமல்லாத பொருளை ஒரு கார்யார்த்தமாக ஏன்று கொண்டு சொல்லுகை; ஜைமிநிமஹர்ஷி பூர்வமீமாம்ஸையில் நிரீச்வரவாதம் பண்ணியிருப்பதை இதற்கு த்ருஷ்டாந்தமாகக் கூறலாம்.]

ஓராமை=ஓர்தல்—ஆராய்ச்சி; ஓராமை—ஆராய்ச்சியில்லாமை, விவேகமின்மை. கேளாமே=கேள் ஆமே என்று பிரிக்க: கேள்—முதனிலைத் தொழிற்பெயர்; கேட்கல் ஆமோ என்றபடி: கேளுங்களென்கை. புரவி—குதிரை.

அதுநிற்க =மோக்ஷமென்ப தொன்று இருக்கவாவது இருக்கட்டும்; இல்லாமலாவது போகட்டும்; அதைப்பற்றி விவாதப்படுகை அநாவச்யகம் என்றபடி

மோக்ஷமுண்டென்றே கொண்டாலும் அர்ச்சாவதாரத்திற்காட்டிலும் அது மிகவும் அஸாரம் என்கிறார் ஏரார் முயல்விட்டு என்பதனால். நிலத்திலே ஓடுவதுமுயல்; மரங்களின்மேலே பறந்து திரிவது காக்கை; மாம்ஸம் வேண்டியவன் கைப்பட்ட முயலைவிட்டுக் கைப்பட அரிதாயும் கைப்பட்டாலும் உபயோகப்படாததுமான காக்கையைப் பின்பற்றித்திரிதல் எப்படி அவிவேகிக்ருத்யமோ, அப்படியே எளிதாயும் ரஸவத்தரமாயுமுள்ள அர்ச்சாவதார போகத்தைவிட்டு அரிதாயும் அஸாரமாயுமுள்ள மோக்ஷ போகத்தைப்பெற விரும்புகையும் பேதைமையின் பணி என்றாராயிற்று.

ஆக இதுவரையில் ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று பேசினதென்றும் மேலுள்ளதெல்லாம் தலைமகள்நிலைமை யெய்திப் பேசுவதென்றும் நிர்வஹிப்பதுண்டு. அன்றி, ஆதி முதலாகவே முற்றும் நாயகி ஸமாதியாலே பேசுகிற பாசுரமென்றும் யோஜிப்பதுண்டு; இதுவே பெரிய வாச்சான் பிள்ளை திருவுள்ள மென்னத் தகும். இரண்டு படியும் ஏற்றதேயாம். ... ... ... ...

ஏரா ரிளமுலையீர் என்றனக் குற்றதுதான்
காரார் குழலெடுத்துக் கட்டிக் கதிர்முலையை
வாரார வீக்கி மணிமே கலைதிருத்தி
ஆரா ரயில்வேற்க ணஞ்சனத்தின் நீறணிந்து
சீரார் செழும்பந்து கொண்டடியா நின்றேன்நான்
நீரார் கமலம்போற் செங்கண்மா லென்றொருவன்
பாரோர்க ளெல்லாம் மகிழப் பறைகறங்கச்
சீரார் குடமிரண் டேந்திச் செழுந்தெருவே
ஆரா ரெனச்சொல்லி யாடு மதுகண்டு
ஏரா ரிளமுலையா ரன்னையரு மெல்லாரும்
வாராயோ வென்றார்க்குச் சென்றேனென் வல்வினையால்
காரார் மணிநிறமுங் கைவளையுங் காணேன்நான்
ஆரானுஞ் சொல்லிற்றுங் கொள்ளேன்—

## பதவுரை.

ஏர் ஆர் இள முலையீர் — அழகிய இள முலைகளையுடைய மாதர்காள்!

என் தனக்கு உற்றது தான் — எனக்கு நேர்ந்த ஸம்பவம் (யாதெனில் சொல்லுகிறேன் கேளுங்கள்—;)

கார் ஆர் குழல் எடுத்து கட்டி — கரிய நிறமுடைய கூந்தலை (அலைய வொண்ணாதபடி) மேலே தூக்கிமுடித்து

கதிர் முலையை வார் ஆர வீக்கி — ஒளிமிக்க முலைகளைக் கச்சு நிறையும்படி நெருக்கிக் கட்டி

மணி மேகலை திருத்தி — ரத்னங்களிழைத்த அரை நூல் மாலையை ஒழுங்குபட அணிந்து

ஆர் ஆர் அயில் வேல் கண் — அழகு பொருந்திய கூரிய வேல் போன்ற கண்

அஞ்சனத்தின் நீறு அணிந்து — மை சுண்ணத்தா அலங்கரித்து

சீர் ஆர் செழு பந்து கொண்டு — மிகவும் அழகிய ஒரு பந்தைக் கையிற் கொண்டு

நான் அடியா நின்றேன் — நான் அடித்துக் கொண்டிருந்தேன் (அப்படியிருக்கையில்)

நீர் ஆர் கமலம் போல் செம் கண் — தண்ணீரை விட்டுப் பிரியாத தாமரைப் பூப் போன்ற சிவந்த திருக்கண்களையுடையனான

மால் என்ற ஒருவன் — திருமால் என்று சொல்லப்படுகிற, ஒரு புருஷன்

| | |
|---|---|
| பாரோர்கள் எல்லாம் மகிழ | உலகத்தாரனைவரும் மகிழும்படி |
| பறை கறங்க | பறையென்ற வாத்யம் முழங்க |
| சீர் ஆர் குடம் இரண்டு ஏந்தி | சிறந்த இரண்டு குடங்களைக் கையிலேந்திக் கொண்டு |
| செழும் தெருவே | "இப்பெரிய வீதியிலே |
| ஆர் ஆர் என சொல்லி | (எனது குடக்கூத்துக்குத் தப்பிப் பிழைக்கும் மாதர்) ஆரேனுமுண்டோ? ஆரேனுமுண்டோ?" என்று சொல்லிக் கொண்டு |
| ஆடும் அது கண்டு | குடக்கூத்தாடின படியைக்கண்டு |
| ஏர் ஆர் இள முலையார் | அழகிய இள முலைகளையுடைய மாதர்களும் |
| அன்னையரும் எல்லாரும் | தாய்மார்களும் (ஆகிய) பெண்டிர்களெல்லாரும் |

| | |
|---|---|
| வாராயோ என்றார்க்கு | "அடி! நீயுங்காண வரமாட்டாயோ?" என்றழைக்க, அவர்கட்கு (உடன்பட்டு) |
| என் வல் வினையால் | எனது கொடிய பாவத்தினால் |
| சென்றேன் | அவர்களுடன் கூடி அவ்விடத்தேறப் போனேன்; (போனதும்) |
| கார் ஆர் மணி நிறமும் | (முன்பு அவனோடு கலந்ததனால் பெற்றிருந்த) நீல மணி நிறத்தையும் |
| கை வளையும் | கையில் தங்கியிருந்த வளைகளையும் |
| நான் காணேன் | நான் இழந்தவளானேன்; |
| ஆரானும் சொல்லிற்றும் | (உற்றாருறவினர்களில்) ஆராவது எதையாவது ஹிதமாகச்சொன்னால் அதையும் |
| கொள்ளேன் | உதறித்தள்ளுபவளாயினேன்; |

* * *—இனி ஆழ்வார் பரகால நாயகி என்ற திருநாமத்தால் நிர்த்தேசிக்கப்படுவர். தன்னை வினவவந்த சில மங்கைமார்களை நோக்கித் தனது அவஸ்தையைக்கூறத்தொடங்குகின்றாள் பரகால நாயகி. இது தானும் பரகாலநாயகியான தன்மையாலே சொல்லுவதல்ல; க்ருஷ்ணாவதாரத்தில் குடக்கூத்திலே ஈடுபட்டு மெலிந்த ஒரு ஆய்ச்சியின் தன்மையை அடைந்து சொல்லுவதாம். "காரார் குழலெடுத்துக்கட்டி" என்று தொடங்கி "அஞ்சனத்தின் நீறணிந்து" என்னுமளவும் பந்தடிப்பதற்குத் தான் செய்துகொண்ட அலங்காரங்களைக் கூறுகிறபடி. எனது அலங்காரத்தின் அமைதியைக்

கண்டு ஈடுபட்டு என்னைப் புணரவேண்டி அவன்றான் மடலெடுக்க வேண்டியிருக்க, நானன்றே மடலெடுக்க நேர்ந்தது! என்பது ஸூசனை. வார்—ரவிக்கை. மேகலை—மேகலா என்ற வடசொல் திரிபு; அரையிலணியும் ஆபரணம். அயில்—கூர்மை. அஞ்சனம்— வடசொல்.

இங்கே பந்து விளையாட்டு ஆடிக்கொண்டிருந்ததாகச் சொல்லுகிறவிதற்கு உள்ளுறை பொருள் யாதெனில்; நான் பகவத் விஷயமே அறியாமல் ப்ராக்ருத பதார்த்தங்களிலே மண்டிப் போது போக்கிக்கொண்டு சுகமாகக்கிடந்தேன்; அங்ஙனே கிடந்த என்னை அநியாயமாக பகவத் விஷயத்திலே கொண்டு மூட்டித் துன்பப் படுத்தினார்கள் என்றுசொல்லிக்கொள்ளுகிறபடி. பந்தானது செந்நூல் வெண்ணூல் கருநூல்களாலே கட்டப்பட்டிருப்பது போல் ப்ராக்ருதியும் “అజామేకాం లోహితశుక్ల కృష్ణామ్” [அஜாமேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம்] என்று ஸத்வரஜஸ்தமோ குணங்களோடே விசித்திரமான கர்ம ஸூத்ரத்தாலே கட்டப்பட்டிருக்கும். பந்து கீழே விழுவதும் மேலே எழுவதுமாயிருக்கிறாப்போலே ப்ராக்ருதியும்—அஜ்ஞனாய் அசக்தனான சேதநன் தான் செய்த கருமங்களுக்கேற்ப மேலுலகங்களில் போவதும் திரும்புவதுமாம்படி ஈச்வரன் தன் விளையாட்டுக்காகத் தன் ஸங்கல்பத்தாலே ப்ரேரிக்கத் தாழ விழுந்தும் உயரவெழுந்தும் சக்ரப்ரமம் போலே சுழன்றும் போருகிற ஆத்மாவோடுண்டான ஸம்பந்தத்தினாலே தானும் விழுந்தெழுகை முதலான ஸ்வபாவங்களோடு கூடியதாயிருக்கும். ஆகவே ஸ்வாபதேசத்தில் பந்து என்று ப்ராக்ருதியைச் சொல்லக் குறையில்லை.

இப்படி அந்யபரையாய்க் கிடந்த என்னைச் சில பெண்டுகள் அழைத்துக் கொண்டுபோய்ப் படாதபாடு படுத்தினார்களென்கிறாள் மேல். தன்னிலத்தில் செழுமை மாறாது விளங்குகின்ற தாமரை போன்ற திருக்கண்களாலே எல்லாரையும் மதிமயக்கவல்லனாய், மால் என்றே திருநாமமுடையனான ஒருவிலக்ஷண மஹா புருஷன் எல்லாரும் மனமகிழும்படியாகப் பறைகொட்டிக் குடக் கூத்தாடிக் கொண்டு “பெண்களே! எனது கோலத்தைக் கண்டீர்களா? இனி

உங்களுடைய நாண்மடமச்சம் முதலிய குணங்களைக் காத்துக் கொள்ள முடியுமானால் நன்கு காத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லுவான் போன்று வீதியார வருகின்றமையைக்கண்ட என் தாய்மார்களும் மற்றுமுள்ள பெண்களும் கடுக என்பால் ஓடிவந்து 'அடீ! ஈதென்ன விளையாட்டு!; எழுந்து ஓடிவா' என்றழைக்க, எனக்குப் போராத காலம் வலிதாயிருந்தபடியால் அவர்களது வார்த்தையை அலக்ஷியம் செய்திருக்க மாட்டாமல் பதறியெழுந்து ஓடிச் சென்றேன்; அங்குச் சென்று சேர்ந்த க்ஷணத்தில் தானே நான் நிறமிழந்தேன்; கையில் வளைகள் கழன்று விழுந்து போம்படி உடல் ஒரு துரும்பாக இளைக்கப் பெற்றேன்; "இப்படிப்பட்ட காம நோய் உனக்கு உரியதன்று" என்று நன்மை சொல்ல வந்தவர்களுடைய பேச்சையும் ஒரு பொருளாக மதியாமல் உதறித் தள்ளி விடும்படியான நிலைமையில் நின்றேன்.

[என் வல்வினையால்] இங்கு வல்வினையென்று பக்தியைச் சொல்லுகின்றதென்பர்.

... ... ... ... அறிவழிந்து
தீரா வுடம்பொடு பேதுறுவேன் கண்டிரங்கி
ஏரார் கிளிக்கிளவி யெம்மனைதான் வந்தென்னைச்
சீரார் செழும்புழுதிக் காப்பிட்டுச் செங்குறிஞ்சித்
தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான்பின்னும்
நேரா தனவொன்று நேர்ந்தா ளதனாலும்
தீராதென் சிந்தைநோய் தீராதென் பேதுறவு
வாராது மாமை அதுகண்டு மற்றாங்கே
ஆரானும் மூதறியு மம்மனைமார் சொல்லுவார்
பாரோர் சொலப்படுங் கட்டுப் படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவே னென்றார்......—

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| அறிவு அழிந்து | மதி கெட்டு | பேது உறுவேன் | பைத்தியம் பிடித்தவள் போன்றிருந்த என்னை |
| தீரா உடம் பொடு | ஒழிய மாட்டாத உடம்போடு கூடி | | |

| | |
|---|---|
| ஏர் ஆர் கிளி கிளவி எம் அன்னை கண்டு இரங்கி | அழகிய கிளியின் பேச்சுப் போன்ற பேச்சையுடையளான என் தாயானவள் கண்டு இரக்கங் கொண்டு |
| தான் வந்து | தானே (என்னருகில்) வந்து |
| என்னை | எனக்கு |
| சீர் ஆர் செழு புழுதி காப்பு இட்டு | அழகிய சிறந்த பாகவத ஸ்ரீபாததூளியைக் கொண்டு ரக்ஷையிட்டு |
| செம் குறிஞ்சி தார் ஆர் நறு மாலை சாத்தற்கு | செங்குறிஞ்சிமலர்கள் நிறைந்த மணம் மிக்க மாலையை அணிந்துள்ள 'சாஸ்தா' என்கிற தேவதாந்தரத்திற்கு |
| தான் பின்னும் நேராதன ஒன்று நேர்ந்தாள் | தான் இதுவரை ஒருநாளும் செய்தறியாத ஒரு அஞ்சலியைச் செய்தாள்; |
| அதனாலும் என் சிந்தை நோய் தீராது | அப்படி செய்ததனாலும் எனதுமனோவியாதியானது தீர்ந்ததில்லை; |
| என் பேதுறவு தீராது | எனது அறிவுகேடும் தீரவில்லை; |

| | |
|---|---|
| மாமை வாராது | (இழந்த) மேனி நிறமும் மீண்டு வரவில்லை; |
| மற்று | அதற்குமேல் |
| ஆங்கே ஆரானும் மூது அறியும் அம்மனைமார் | அங்கிருந்த யாரோ சில பழம் பாட்டுகளறிந்த பாட்டிமார்கள் |
| அது கண்டு | அப்படிப்பட்ட எனது நிலைமையைக் கண்டு |
| சொல்லுவார் | (நோய்தீர உபாயம்) சொல்லத் தொடங்கினர்; (என்ன சொன்னார்களென்னில்;) |
| பாரோர் சொலப் படும் கட்டுப் படுத்திர் ஏல் ஆரானும் மெய்ப்படுவன் என்றார் | "குறி கேட்பதென்று உலகத்தார் ஒன்று சொல்வதுண்டு; அதைச்செய்தீர்களாகில் (இந்நோயை உண்டுபண்ணினவன்) யாராயிருந்தாலும் உண்மையாக வெளிப்பட்டு விடுகிறான்" என்று சொன்னார்கள்; |

***—சைதந்யம் என்பது அடியோடே போயிற்று; பைத்தியம் பிடித்தவள் போன்று வாயில் வந்ததைப் பிதற்றிக்கொண்டு கிடந்தேன்; இப்படி கிடந்த என்னை எனது நற்றாய் கண்டு 'ஐயோ! நம் மகளுக்கு இப்படிப்பட்ட நோய் நேர்ந்து விட்டதே! இஃது எங்ஙனே தீரப்போகிறது!' என வருந்தி, இதற்கு ஏதேனும் நல்ல பரிஹாரம் செய்வோமென்று சிந்தித்து "மாயன் தமரடி

நீறுகொண்டு அணிய முயலில் மற்றில்லை கண்டீர் இவ்வணங்குக்கே" "தவளப் பொடிக்கொண்டு நீர் இட்டிடுமின் தணியுமே" என்ற திருவாய்மொழியில் வாஸனையாலே பாகவதர்களின் ஸ்ரீபாதரேணுவைக் கொணர்ந்து ரக்ஷையிட்டாள். ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்திற்குத் தகுந்த இதனைச் செய்தும் பர்யாப்தி பெறமாட்டாத ப்ரேமாதிசயத்தாலே கலக்கமுற்று ஒரு தேவதாந்தரத்தின் காலிலும் கும்பிட்டாள். இப்பிறவியில் இன்றளவும் செய்தறியாத தொன்றாகிய இவ்வரிய செயலைச் செய்தவிடத்தும் என் நோய் தீரவில்லை; என் பைத்தியம் நீங்கவில்லை; போன மேனி நிறமும் மீண்டதில்லை; இப்படிப்பட்ட அவஸ்தையைக்கண்ட அங்குள்ள-பழங்கதைகளறியும் பாட்டிமார் சிலர் வந்து, 'அந்தோ! நீங்கள் நோயின் நிதானமறியாது மனம் போனபடி செய்யப்பார்ப்பது தகுதியன்று; 'கட்டுவிச்சி' என்று சொல்லப்படுகிற குறி சொல்லுங் குறத்தியர் சிலருண்டு; அவர்களை வரவழைத்துக் குறி கேளுங்கள்; இந்நோயை விளைவித்தவன் இன்னானென்று தெற்றெனவிளங்கும்; இங்ஙனே செய்யாமல் நீங்கள் தாந்தோன்றியாகச் செய்யும் பரிஹாரங்கள் எதுக்கு?' என்று சொன்னார்கள்.

[தீராவுடம்போடு] ஆபத்து மிருந்தால் உடம்பு ஒழியலாமே; ஒழியாமல் ஆத்ம வஸ்துவைப்போலே அழியாததா யிருந்து கொண்டு துன்பப்படுத்துகின்றதே! என்ற வருத்தம் விளங்கும். பேதுறுவேன் = இரண்டாம் வேற்றுமைத்தொகை: பேதுறுவேனை என்றபடி.

செங்குறிஞ்சித்தாரார் என்ற வாக்கியத்தில், "நறுமாலைச்சாத்தற்கு" என்ற பாட மோதவேண்டியதை விட்டு "நறுமாலைசாத்தற்கு" என்று தப்பான பாடம் ஓதிவந்தனராகையால் இவ்வாக்கியத்தின் பொருளை உள்ளபடி அறியாதொழிந்தனர் பலர்; शास्ता = 'சாஸ்தா' என்கிற வடசொல் சாத்தன் எனத்திரிந்து கிடக்கிறதென்பதையறியாமல் "செங்குறிஞ்சித்தாரார் நறுமாலை சாத்திக்கொள்ளுகிறவனுக்கு" என்று கற்றறிந்த பல பெரியோர்களும் பொருள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அங்ஙனன்று; செங்குறிஞ்சித்தாரார் நறுமாலையையுடைய, [சாத்தற்கு] சாஸ்தா என்று ப்ரஸித்தமான தேவதாந்தரத்திற்கு என்று உண்மைப் பொருள்

உணர்க. சாத்தன் + கு = சாத்தற்கு. இவ்வகைப் பொருளில் "மாலைச்சாத்தற்கு" என்றே பாடமோதவேண்டும். அமரகோசத்தில் "సర్వజ్ఞస్సుగతో బుద్ధః" [ஸர்வஜ்ஞஸ் ஸுகதோ புத்தஃ] என்று தொடங்கி, "మునీంద్రః శ్రీఘనశ్శాస్తా" [முநீந்த்ரஃ ஸ்ரீகநச் சாஸ்தா] என்று புத்த தேவதைக்குப் பெயர்கள் படிக்கப்பட்டுள்ளமை காண்க.

[தான் பின்னும் நேராதன ஒன்று நேர்ந்தாள்.] "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்னுங் குடிப்பிறப்பின் உறைப்பு உள்ளமையால் தேவதாந்தரத்தைத் தொழுதாளென்று சொல்வதற்கும் இத்தலைமகள் அருவருத்து இங்ஙனே மறைத்துச் சொல்லுகிறாள். இதுவரையில் செய்யாத ஒரு காரியத்தைச் செய்தாளென்கிறாள். "வகுத்த விஷயத்திலே ஓர் அஞ்ஜலி பண்ணினால் அது ஸாதநத்தில் அந்வயிக்கில் செய்வதென்? என்றிருக்கக்கடவ தான், திருத்துழாய் பரிமாறுதவொரு தேவதைக்கு ஓர் அஞ்ஜலியுமகப்படப் பண்ணினாள் போலே காணும்" என்ற பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்திக்கத்தகும்.

[முதறியு மம்மனைமார் சொல்லுவார்.] இவ்விடத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளையருளிச்செயல்:—"'இந்திரன்படிகளிருக்கும்படியென்?' என்று ஒருத்தி ஒருத்தியைக் கேட்க; 'தொண்ணூற்றெட்டு இந்த்ராதிகளை ஸேவித்தேன், இந்த்ரன்படி கேட்கிறாய், வேணுமாகில் சொல்லுகிறேன்' என்றாளிறே: அப்படியே பழையராய், நோய்களுமறிந்து நோய்க்கு நிதாநமுமறிந்து பரிஹாரமும் பண்ணுவித்துப் போரும் முதிறிவாட்டிகள் சொல்லுகிறார்கள்"—என்று.

[கட்டேப்படுத்திரேல்.] கட்டுப்படுத்துதலாவது— குறி கேட்பது. ... ... ... ... ... ... ... ... ...

... ... ... ... அதுகேட்டுக்
காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவாப்
பேரா யிரமுடையா னென்றாள் பேர்த்தேயும்

காரார் திருமேனி காட்டினாள் கையதுவும்
சீரார் வலம்புரியே யென்றாள் திருத்துழாய்த்
தாரார் நறுமாலை கட்டுரைத்தாள் கட்டுரையா
நீரேது மஞ்சேன்மின் நும்மகளை நோய்செய்தான்
ஆரானு மல்ல னறிந்தே னவனைநான்
கூரார் வேற்கண்ணீ ருமக்கறியக் கூறுகேனே—

பதவுரை.

அது கேட்டு — அவர்கள் சொல்லிக் கொண்டிருந்த அந்த வார்த்தையையே கேட்டு

கார் ஆர் குழல் கொண்டை — கறுத்த மயிர் முடியை யுடையளான

கட்டுவிச்சி — குறிசொல்லுங் குறத்தியானவள் (ஒருவரும் அழையாதிருக்கத் தானாகவே வந்து)

கட்டேறி — தெய்வ ஆவேசங்கொண்டு

சீர் ஆர் சுளகில் சில நெல் பிடித்து எறியா — அழகியதொரு சிறு முறத்தில் நின்றும் சில நெற்களைப் பிடித்தெடுத்து முன்னே வீசியெறிந்து (குறிபார்த்து)

வேரா — வேர்வைவிட்டு

விதிர்விதிரா — சுழன்று

மெய் சிலிரா — மயிர்க்கூச்செறிந்து

கை மோவா — கையை மோந்து பார்த்து

பேர் ஆயிரம் உடையான் என்றாள் — ஆயிரந் திருநாமங்களை யுடையனான எம்பெருமானே (இந்நோய் செய்தவன்) என்று எண்ணினாள்;

பேர்த்தேயும் — அதற்கு மேல்

கார் ஆர் திருமேனி காட்டினாள் — (அவனது) காள மேகம் போன்ற திருமேனியைப் படியெடுத்துக் காட்டினாள்;

கையதுவும் — (அவனது) திருக்கையிலே யுள்ளதும்

சீர் ஆர் வலம்புரியே என்றாள் — அழகிய வலம்புரிச் சங்கமே யென்று அபிநயித்துக் காட்டினாள்;

திரு துழாய் தார் ஆர் நறுமாலை கட்டுரைத்தாள் — திருத்துழாய் மலர்கள் நிறைந்த மணம் மிக்க மாலையையும் அபிநயித்துக் காட்டினாள்;

கட்டுரையா — ஆக இவ்வளவும் அங்க சேஷ்டைகளாலே காட்டின பின்பு (வாய்விட்டுச் சொன்னதாவது)

நீர் ஏதும் அஞ்சேல்மின் — "நீங்கள் சிறிதும் பயப்பட வேண்டா;

நும்மகளை நோய் செய்தான் — உங்கள் பெண்ணை (இப்படி) நோவு படுத்தினவன்

| | | | |
|---|---|---|---|
| ஆரானும் அல்லன் | யாரோ ஒரு க்ஷுத்ர புருஷனல்லன்; (தேவதாந்தரங்களினால் வந்த நோய் அல்ல இது;) | கூர் ஆர் வேல் கண்ணீர் | கூரிய வேல் போன்ற கண்களையுடைய மங்கைமீர்களே! |
| அவனை நான் அறிந்தேன் | நோவுபடுத்தின புருஷனை (இன்னானென்று) நான் தெரிந்து கொண்டேன்; | உமக்கு அறிய கூறுகேனோ | உங்களுக்கு (அவனைத்) தெரியச் சொல்லட்டுமோ? |

* * *—இதுமே சில கிழவிமார்கள் "குறி கேட்டால் நோய்க்கு நிதாநம் தெரியும்" என்றார்களே; அவ்வளவில், குறி சொல்லுங் குறத்தி பொருத்தி தன்னை யழையாதிருக்கச் செய்தே,

"கொங்குங் குடந்தையுங் கோட்டி யூரும் பேரும்
எங்குந்திரிந்து இன்றே மீள்வேனை யாரிங் கழைத்ததூஉ!!!
கண்டியூ ரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று
மண்டிப் திரிவேனை யாரிங் கழைத்ததூஉ!!!
விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடமும்
மண்ணகரம் மாமாட வேளுக்கை தென்குடந்தை
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங் கழைத்ததூஉ!!!
நாகத் தணைக்குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
நாகத் தணையரங்கம் பேரன்பில் நாவாயும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங் கழைத்ததூஉ!!!
வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவு மஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் பூதூரும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங் கழைத்ததூஉ!!!

என்று தெருவேறக் கூவிக்கொண்டு தானாகவே வந்து சேர்ந்து செய்த காரியங்களையும் சொன்ன வார்த்தைகளையும் சொல்லுகிறது மேல். கட்டுவிச்சி வந்தவுடனே தைவாவேசங்கொண்டு ஒருமுறத்தில் நின்றும் சில நெல்லுகளை ஒரு முஷ்டியெடுத்து எறிந்தாள்; ஏதுக்காக வென்னில்; குறி பார்க்கும் வகைகளில் இதுவு மொன்று. கண்களை மூடிக்கொண்டு ஒரு பிடி நெல் எடுத்து அவற்றை எண்

ணிப்பார்த்து, ஒற்றைப்பட்ட எண் வருகிறதா, இரட்டைப்பட்ட எண் வருகிறதா என்று பரீக்ஷித்துப் பார்த்து அதனால் தேவதாந்தர ஸம்பந்தமான நோயோ அல்லது பகவத் விஷயமான நோயோ இரண்டத்தொன்றை நிச்சயிப்பது—என்ற ஒரு ஸங்கேத முள்ளதாகக் கொள்க.

உலகத்தில் முறமானது மணியையும் பதரையும் பிரித்து பதரை நீக்கி மணியைத் தாங்கிக்கொள்ளுங் கருவியாயிருப்பது போல் இங்கும் பதராகிய தேவதாந்தரங்களை நீக்கி "மணியே மணிமாணிக்கமே மதுசூதா" என்னப்பட்ட நன்மணியாகிய எம்பெருமானை ப்ரகாசிப்பித்த சுளகு ஆகையாலே "சீரார் சுளகு" என்று சிறப்பித்துக் கூறப்பட்டது.

நெல்லுகளை எண்ணிப் பார்த்து இவளுக்கு பகவத் விஷயமான நோய்தானென்று குறத்தி தானறிந்தவாறே "கடல் வண்ணரிது செய்தார்" என்று சொல்ல நினைத்தாள்; எம்பெருமானை வாய்விட்டுச் சொல்லுவதென்றால் எளிதானகாரியமோ? "மொய்த்துக் கண்பனி சோரமெய்கள் சிலிர்ப்ப ஏங்கி இளைத்து நின்று" என்றபடி சில விகாரங்கள் விளையுமே; அவை விளைந்தன. (அதாவது) வேர்வையடைந்தாள்; உடல் நடுங்கினாள்; மயிர்க்கூச்செறிந்தாள்;

இப்படி வாய்விட்டுச் சொல்ல முடியாமல் நிலைதடுமாறி எம்பெருமானுடைய அநுஸந்தாநம் முற்றவே தந்மயமாயிருக்குந் தன்மையை அடைந்தாள்; "விரை குழுவு நறுந்துளவம் மெய்ந்நின்று கமழுமே" என்றாற்போலத் திருத்துழாய் மணம் மணக்கத்தொடங்கிற்று; கையை மோந்து பார்த்தாள்; திருந்துழாய்ப் பரிமளம் நன்றாகத் தோன்றிற்று; ஸஹஸ்ரநாமங்களை யுடையனான எம்பெருமானே (இவளது நோய்க்கு நிதாநம்) என்று நிச்சயித்தாள். எந்தத் திருமேனியைக் கண்டு நான் இந்நோய் பெற்றேனோ அந்தத் திருமேனியை அபிநயித்துக் காட்டினாள். வலங்கையாழி இடங்கைச் சங்கமுடைய பெருமானென்று அபிநயித்தாள். ("கையதுவும் சீரார் வலம்புரி" என்று சங்கை மாத்திரம் சொல்லியிருந்தாலும் இது சக்கரத்துக்கும் உபலக்ஷணமாமென்க.) "தோளிணை

மேலும் நன் மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடை யம்மான்" என்பதாக அபிநயித்தாள். அதற்குமேல், வாய்விட்டுச் சிலவார்த்தைகள் சொல்லத்தொடங்கி, "அம்மனைமீர்! நீங்கள் இந்நோய்க்குச் சிறிதும் அஞ்சவேண்டா; நும்மகளன்றோ இவள்; உங்கள் வயிற்றிற் பிறந்த இவளை க்ஷுத்ர தேவதைகள் தீண்டுமோ? எந்த நாயும் தீண்டிற்றில்லை; தீண்டின மஹாபுருஷனை நானறிந்தேன்; இப்போது நான் அபிநயித்துக்காட்டின வகைகளாலே நீங்கள் தெரிந்துகொண்டிருக்கக் கூடுமாயினும் ஸுஸ்பஷ்டமாக நீங்கள் தெரிந்துகொள்ளுமாறு அன்னவனை குண சேஷ்டிதாதிகளுடன் விளங்கச் சொல்லுகிறேன். கேளுங்கள்— என்று நோய் செய்த எம்பெருமானைப்பற்றி விரிவாக எடுத்துரைக்கத் தொடங்கினாள்.

எறியா, வேரா, விதிர்விதிரா, சிலிரா, மோவா என்பன— செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சங்கள்; எறிந்து, வேர்த்து, விதிர்விதிர்த்து, சிலிர்த்து, மோந்து என்றபடி.

"என்றாள்" என்றும் "கட்டுரைத்தாள்" என்றும் உள்ளவை—கட்டுவிச்சி தன் நெஞ்சினுள்ளேயே சொல்லிக்கொண்டதைச் சொல்வன. "கீழ்ச் சொன்ன நடைய ஸ்வகதமாகச் சொன்னாள்" என்றார் பெரியவாச்சான் பிள்ளையும். கட்டுரையா = இதுவும் இறந்தகால வினையெச்சம்; உரைத்து என்றபடி.

ஆரா லிவ்வைய மடியளப் புண்டதுதான்
ஆரா லிலங்கை பொடிபொடியா வீழ்ந்ததுமற்று
ஆராலே கன்மாரி காத்ததுதா னாழிநீர்
ஆரால் கடைந்திடப் பட்ட தவன்காண்மின்
ஊரா நிரைமேய்த் துலகெல்லா முண்டுமிழ்ந்தும்
ஆராத தன்மையனா யாங்கொருநா ளாய்ப்பாடிச்
சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய்
வாசார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு
ஏரா ரிடைநோவ எத்தனையோர் போதுமாய்ச்
சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை
வேரார் நுதல்மடவாள் வேறோர்கலத்திட்டு
நாரா ருறியேற்றி நன்கமைய வைத்ததனைப்

போரார் வேற்கண்மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம்
ஓரா தவன்போல் உறங்கி யறிவுற்றுத்
தாரார் தடந்தோள்க ளுள்ளளவுங் கைநீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி அருகிருந்த
மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே
ஓரா தவன்போல் கிடந்தானைக் கண்டவளும்
வாராத்தான் வைத்தது காணாள் வயிறடித்திங்கு
ஆரார் புகுதுவா ரைய ரிவரல்லால்
நீரா மிதுசெய்தீ ரென்றோர் நெடுங்கயிற்றால்
ஊரார்க ளெல்லாருங்காண வுரலோடே
தீரா வெகுளியளாய்ச் சிக்கென ஆர்த்தடிப்ப
ஆரா வயிற்றினோ டாற்றாதான்......—

பதவுரை.

| | |
|---|---|
| இவ்வையம் ஆரால் அடி அளப்புண்டது | யாவனொருவனாலே இப்பூமியானது அளக்கப்பட்டதோ, |
| இலங்கை ஆரால் பொடி பொடி ஆ வீழ்ந்தது | இலங்காபுரியானது யாராலே பொடியாக்கப்பட்டு நசித்தொழிந்ததோ, |
| ஆராலே கல் மாரி காத்தது | யாவனொருவனாலே கல்மழையானது தடுக்கப்பட்டதோ, |
| ஆழி நீர் ஆரால் கடைந்திடப்பட்டது | கடலானது யாவனொருவனாலே கடையப்பட்டதோ, |
| அவன் | அக்காரியங்களெல்லாஞ் செய்த ஒரு விலக்ஷண புருஷன் |
| ஊர் ஆ நிரை மேய்த்து | ஊரிலுள்ள பசுக்கூட்டங்களை யெல்லாம் மேய்த்தும் |
| உலகு எல்லாம் உண்டு உமிழ்ந்தும் | உலகங்களை யெல்லாம் (பிரளய காலத்திலே) அமுது செய்தும் (ஸ்ருஷ்டி காலத்திலே) வெளிப்படுத்தியும் |
| ஆராத தன்மையன் ஆய் | (இத்தகைய பல செயல்களாலே தனது திருக்குணங்களை வெளிப்படுத்தினவளவிலும்) த்ருப்தி பெறாமல் (ஸௌலப்ய குணத்தை நன்கு விளக்க வேண்டி) |
| ஒரு நாள் | ஒரு நாளில் |
| ஆங்கு ஆய்ப்பாடி | அந்தத் திருவாய்ப்பாடியிலே |

| | |
|---|---|
| சீர் ஆர் கலை அல்குல் சீர் அடி செம் துவர் வாய் வார் ஆர் வனம் முலையாள் | அழகிய சேலையை யணிந்த அல்குலை யுடையவளும், அழகிய கால் களையுடைய வளும் மிகவுஞ் சிவந்த அதரத்தை யுடையவளும் கச்சணிந்த அழகிய முலை களையுடையவளு மான யசோதை |
| மத்து ஆர பற்றிக் கொண்டு | மத்தை அழுந்தப் பிடித்துக் கொண்டு |
| ஏர் ஆர் இடை நோவ | அழகிய இடுப்பு நோகும்படி |
| எத்தனையோர் போதும் ஆய் | வெகு காலமாக |
| சீர் ஆர் தயிர் கடைந்து | சிறந்த தயிரைக் கடைந்து |
| திரண்ட வெண்ணெய் தனை | (அதில்) திரண்ட வெண்ணெயை |
| வேர் ஆர் நுதல் மடவாள் | (கடைந்த ச்ரமத் தாலே) வேர்வை மிக்க நெற்றியை யுடையளான அவ் யசோதை |
| வேறு ஓர் கலத்து இட்டு | வேறொரு பாத்திரத் திலே இட்டு |
| அதனை | அந்த வெண்ணெய்க் கலத்தை |
| நார் ஆர் உறி ஏற்றி | (விரல்கூட நுழைக்க வொண்ணாதபடி) நார்நெருக்கத்தை யுடைய உறியின் மேலேற்றி |
| நன்கு அமைய வைத்து | ஸுரக்ஷிதமாம்படி வைத்துவிட்டு |
| போர் ஆர் வேல் கண் மடவாள் | யுத்தத்திற்கு ஸந் நத்தமான வேல் போன்ற (கூர்மை யான) கண்களை யுடையளான அவ் யசோதை யானவள் |
| போம் தனையும் | வெளியில் போகிற வரைக்கும் |
| ஓராதவன் போல் பொய் உறக்கம் உறங்கி | ஒன்று மறியாதவன் போலே திருட்டுத் தூக்கம் தூங்கி |
| அறிவு உற்று | (அவள் போன வுடனே) கண் விழித்தெழுந்து போய் |
| தார் ஆர் தட தோள்கள் உள் அளவும் கை நீட்டி | மாலையணிந்த பெரிய திருத் தோள்களைத்தாழி யின் அடிவரை யில் புகவிட்டு |
| ஆராத வெண்ணெய் விழுங்கி | (எவ்வளவு உண்டா லும் திருப்தியைத்) தரமாட்டாத வெண்ணெயை அமுது செய்து |
| அருகு இருந்த | (அந்த வெண் ணெய்த்தாழியின்) பக்கத்தில் இருந்த |
| மோர் ஆர் குடம் | மோர் நிறைந்த குடத்தை |
| உருட்டி | (அதில் அநாதரம் தோற்ற) உருட்டி |
| முன் கிடந்த தானத்தே | முன்னே படுத் திருந்த இடத்தி லேயே |

| | |
|---|---|
| ஓராதவன் போல் | ஒரு ஸமாசாரமும் தெரியாதவன் போன்று |
| கிடந்தானை | படுத்துக் கொண்டிருந்த கண்ணனை |
| அவளும்வாரா கண்டு | அவ் யசோதையும் வந்து கண்டு |
| தான் வைத்தது காணாள் | தான் (உறியிலே சேமித்து) வைத்த வெண்ணெயைக் காணாதவளாய் |
| வயிறு அடித்து | (இத்தனையும் தின்றால் ஜரிக்குமோ வென்று) வயிற்றிலே மோதிக் கொண்டு |
| ஐயர் இவர் அல்லால் | இந்த மஹாநுபாவர் தவிர |
| இங்கு புகுதுவார் ஆர் ஆர் | இங்கே வந்தவர் வேறுயார்? (யாருமில்லை; இவரே தின்றிருக்க வேண்டுமென்று நிச்சயித்து) |
| இது செய்தீர் நீராம் என்று | 'இந்தக்காரியம் செய்தவர் நீர்தான்' என்று சொல்லி |
| தீரா வெகுளியள் ஆய் | அடங்காத கோபத்தையுடையளாய் |
| ஓர் நெடு கயிற்றால் | கையிலகப்பட்டதொரு குறுங் கயிற்றால் |
| ஊரார்கள் எல்லாரும் காண | ஊரிலுள்ளாரனைவரும் (இந்தஎளிமையைக்) காணும்படியாக |
| உரலோடே சிக்கன ஆர்த்து அடிப்ப | ஒரு உரலோடே அழுந்தக் கட்டி அடிக்க |
| ஆரா வயிற்றினோடு ஆற்றாதான் | மிகவும்வயிறெரிந்து வருந்திநிற்பவன்; |

* * *—"உமக்கறியக் கூறுகேனோ" என்ற கட்டுவிச்சி அங்ஙனமே விரிவாகக் கூறுகின்றாள்; "ஆராலிவ்வைய மடியளப்புண்டதுதான்" என்று தொடங்கி, "பேராயிர முடையான் பேய்ப்பெண்டீர் நும்மகளைத் தீராநோய் செய்தான்" என்னுமளவும் கட்டுவிச்சியின் வார்த்தை. இதில், எம்பெருமான் உலகமளந்தது, இலங்கையைப் பாழ்படுத்தியது, கோவர்த்தனமலையெடுத்துக் கல்மழைகாத்தது, கடல கடைந்தது, பசு மேய்த்தது, உலகமெல்லாமுண்டுமிழ்ந்தது, வெண்ணெய் களவு செய்து தாம்பினால் கட்டுண்டது, காளியநாகத்தைக் கொழுப்படக்கியது, சூர்ப்பணகையின் அங்கபங்கம் செய்தது, கரனைக் கொன்றது, இராவணனைக் கொன்றது, இரணியனை முடித்தது, கஜேந்திராழ்வானைக் காத்தருளியது—ஆகிய சரித்திரங்கள் கூறப்பட்டுள்ளன. இவ்வரிய பெரிய காரியங்

களைச் செய்தருளின பரம புருஷன் தான் உங்கள் மகளைத் தீரா நோய்க்கு ஆளாக்கினன் என்று சொல்லி முடித்தாளென்க.

மாவலியைப் பாதாளத்தில் சிறை வைத்தும், குளவிக்கூடு போலே அசுர ராக்ஷஸர்கள் மிடைந்து கிடந்த இலங்கையை நீறுக்கியும், கடல் கடைந்து அமுதமளித்தும், குன்றெடுத்துக் கோநிரை காத்தும், பிரபஞ்சங்களை ப்ரளயங் கொள்ளாதபடி நோக்கியும் இவ்வகைகளாலே அடியார்களுக்குப் பலவிதங்களான நன்மைகளைப் புரிந்து தனது திருக்கல்யாண குணங்களை நன்கு விளங்கச் செய்துங்கூட த்ருப்தி பெறாத எம்பெருமான் தனது ஸௌலப்யமாகிற பெருங்குணத்தை வெட்ட வெளிச்சமாக்குவதற்காகவே வெண்ணெய் களவுசெய்த வியாஜத்தாலே உரலோடு கட்டுண்டதாகச் சொல்லுகிற அழகைப் பாருங்கள்.

ஆராத தன்மையனாய்="ரக்ஷ்ய வர்க்கத்தை யெல்லாம் ரக்ஷித்தாலும் தானொன்றுஞ் செய்யாதானா யிருக்கிறபடி." என்பது பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி.

யசோதைப்பிராட்டியானவள் இடுப்பு நோகவும், நெற்றி வேர்க்கவும் மிக்க பரிச்ரமப்பட்டு நெடும்போது தயிர் கடைந்து, திரண்ட வெண்ணெயை ஒரு கலத்திலே வைத்து உறியின்மேல் ஸுரக்ஷிதமாக்கிவிட்டு ஏதோ காரியமாக அப்பால் சென்றாள்; நன்றாகத் தூங்குகின்றவன்போல் கள்ள நித்திரை செய்துகொண்டு, தாய் சேமித்து வைப்பவற்றைக் கண்டுகொண்டிருந்த கண்ணபிரான் உடனே எழுந்து வெண்ணெய்த் தாழியில் தனது இரண்டு கைகளையும் முழுக்க அமிழ்த்தி வெண்ணெயைவாரி அமுது செய்துவிட்டு அருகே மற்றொரு குடத்தைக் கண்டான்; அது நிறைய மோராயிருக்கவே அந்த மோர்க்குடத்தை உருட்டிவிட்டு உடனே முன்பு தான் கிடந்த படுக்கையிலே போய்ப்படுத்து "இந்தப் பூனையா இந்தப் பாலைக் குடித்தது!" என்ன வேண்டும்படி தான் ஒன்று மறியாதவன் போன்று நெடுங்குறட்டை விட்டுக்கொண்டு உறங்குவானாயினன்; மீண்டுவந்த யசோதை உறியின்மேலே நோக்காகவே வந்து பார்த்தாள்; கையை இட்டாள்; எந்தப்படி வைத்தாளோ அந்தக் குறிப்படியே கண்டிலள். 'அத்தனை வெண்ணெயையும் தின்றுவிட்டானே, ஜரிக்குமோ' என்று வருத்தமுற்று

வயிற்றிலே மோதிக்கொண்டு 'இந்த மாஹாநுபாவர் தவிர வேறு இங்குவந்தார் ஆருமில்லை; இப்பெரியவர்தாம் இத்தனையும் எடுத்து அமுது செய்திருக்கவேணும்' என்று நிச்சயித்துக் கண்ணபிரானை நோக்கி 'ஸ்வாமிந்! நீர்தாம் இக்களவு செய்தீர், நானறிவேன்' என்று சொல்லிக் கையைப் பிடித்து, உறங்குகிறவனைத் தூக்கியெடுத்து, கையிலகப்பட்டதொரு கயிற்றாலே அவனை உரலோடே இணைத்து ஊரிலுள்ளா ரெல்லாருங் காண நெருக்கிக்கட்டி, அடங்காத கோபத்தையுடையவள் போன்று அடிக்க, அஸஹிஷ்ணு வாய் ஏங்கி வருந்திக் கிடந்தபடியைச் சொல்லிற்றாயிற்று.

"சீரார் கலையல்குல்" இத்யாதி வாக்கியத்தில், யசோதை என்ற பெயரைச் சொல்லாமல் விசேஷணங்களை மாத்திரம் இட்டது—"ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை" என்று அவள் தானே சொல்லிக்கொள்ளும்படியாகவும் "என்ன நோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்று பிறரும் சொல்லும்படியாகவும் அமைந்த ஒப்புயர்வற்ற ஸௌபாக்கியம் அவளுக்கு அஸாதாரணமா யிருத்தலால் பரம விலக்ஷணர்களைப் பெயர் சுட்டிச் சொல்லலாகாதென்கிற முறைமை பற்றியென்க.

"தாரார் தடந்தோள்க ளுள்ளளவுங் கை நீட்டி"="ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடல் நீர், நாழி முகவாது நானாழி" என்பதையுங்கூட அறியான் போலும்; அந்தோ! அறிவில்லாச் சிறு பிள்ளைத்தனத்தை நன்கு விளக்கினபடி. வெண்ணெய்த் தாழியில் ஆழ ஆழக் கையிட்டாலும் கை கொள்ளுமளவுக்குமேல் வெண்ணெய் வாராது என்றறியாமல் தோள்பட்டை வரைக்கும் தாழியினுள்ளே அமிழ்த்தினனும்.

தோள்களுள்ளளவும் கையை நீட்டினனென்பது யசோதைப் பிராட்டிக்கு எங்ஙனே தெரிந்தது? என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க, "கோயிற்சாந்தைக் குடத்தின் விளிம்பிலே கண்டாள் கொலோ" என்று ரஸோக்தியாக பட்டர் அருளிச்செய்தா ரென்பர்.

தானத்தே=தானம்—ஸ்தாநம் என்ற வடசொல் விகாரம். ஓர்தல்—அறிதல். வாரா—இறந்தகால வினையெச்சம்; வந்து.

வயிறடித்து=நெடுங்காலம் ச்ரமப்பட்டுத் திரட்டின வெண்ணெய் போயிற்றே யென்கிற வருத்தத்தாலல்ல; இத்தனை தின்றது இவனுக்கு ஜரிக்காதே என்கிற வருத்தத்தினால் வயிற்றிலே மோதிக்கொண்டாளென்க.

ஐயரிவரல்லால் = 'இந்தப்பயலல்லால்' என்ன வேண்டுமிடத்து, ஐயர் என்றும் இவர் என்றும் நீர் என்றும் சொன்னது கோபத்தின் மிகுதியா லென்க. ஆகவே, இங்கு, பால்வழுவமைதி. "உவப்பினு முயர்வினும் சிறப்பினும் செறலினும், இழிப்பினும் பால்திணை இழுக்கினு மியல்பே" என்ற நன்னூற் சூத்திரமறிக; (செறல்—கோபம்.)

நெடுங்கயிற்றால்—"கண்ணிநுண் சிறுத்தாம்பினால்" என்றும் "கண்ணியார் குறுங்கயிற்றால் கட்ட" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளோடு ஐககண்டியம் பண்ணவேண்டுதலால், இங்கு நெடுங்கயிறு என்றதை விபரீத லக்ஷணையாகக்கொண்டு சிறிய கயிறென்றே உரைத்தல் பொருந்தும். 'அடிக்கடி இவள் நம்மைக் கயிற்றினால் கட்டி நலிகின்றாளே'! என்று கண்ணபிரான் க்ருஹத்திலுள்ள கயிறுகளை யெல்லாம் துண்டு துண்டாக அறுத்துப் போட்டு விடுவது வழக்கமாம். ஆகவே நீண்ட கயிறு யசோதைக்குக் கிடைப்பதரிது. அன்றியே, நெடுங்கயி றென்பதற்குப் பெரு மேன்மை பொருந்திய கயிறென்றும் பொருள் கொள்ளலாம்; கண்ணபிரானுடைய திருமேனியிலே ஸம்பந்திக்கப் பெறுதல் கயிற்றுக்கு மேன்மை யென்க.

[ஊரார்களெல்லாருங்காண] இவன் உரலோடு கட்டுண்டு படுகிற பரிபவத்தை எல்லாருங் காண—என்று பொருள் கொள்வர் ஸாமாந்ய ஞானிகள்; அதுவன்று பொருள்; இவன் இப்படி கட்டவு மடிக்கவு மெளியனாய் வாய்த்திருக்கும் இந்த ஸௌலப்யத்தை எல்லாருங் காணவேணுமென்றாய்த்து யசோதை கருதிற்று. இங்ஙனொத்த ஸௌலப்யத்தை வெளியிட வேணுமென்றுதானே கண்ணபிரான் இங்கே வந்து பிறந்தது. தாய் தாம்பாலே கட்டும் போது தாம்பு எட்டம் போராவிடில் இவன் தனது உடலைச் சிறுக்

கடித்து அந்தச் சிறிய தாம்பினால் கட்டுண்டானும்படி பண்ணிக் கொள்ளுமவனிறே ; "கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்" என்ற விடத்தில் இதுவேயிறே கருத்து.

தீராவெகுளியளாய்=வெகுளி—கோபம் ; இது அபிநயமாத் திரமென்க. "அஞ்சவுரப்பாளசோதை ஆணாட விட்டிட்டிருக்கும்" என்னப்பட்ட யசோதைக்குக் கோபம் மெய்யே உண்டாகமாட்டா திறே.

ஆரா வயிற்றினோடாற்றாதான் = உரலோடு பிணைத்ததற்கும் அடித்ததற்குமாக வருந்தினானன்று; வெண்ணெயையும் பெண்களையும் களவு செய்கிற தொழிலைச் சற்றுப்போது விட்டிருக்க நேர்ந்ததே ! என்று வருந்தினனென்க. அளவற அமுது செய்த வெண்ணெய் வயிற்றிலே ஜீர்ணமாகாமல் வருந்தினனென்னவுமாம். ... *

... ... ... ... அன்றியும்
நீரார் நெடுங்கயத்தைச் சென்றலைக்க நின்றுரப்பி
ஓரா யிரம்பண வெங்கோவிய நாகத்தை
வாரா யெனக்கென்று மற்றதன் மத்தகத்துச்
சீரார் திருவடியால் பாய்ந்தான்.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| அன்றியும் | மேலும் | உரப்பி | அதட்டி |
| நீர் ஆர் நெடு கயத்தை சென்று | நீர் நிறைந்த பெரியதொரு பொய்கைக்குப் போய் | எனக்கு வாராய் என்று | என்னோடு போர் செய்ய வா என்றழைத்து |
| அலைக்க நின்று | அப்பொய்கையின் வெள்ளம் வெளி வழியும்படி (தன்னோராயிரம் பின்னைகளும் தானுமாகத்) திளைத்து | மற்றதன் மத்தகத்து | அதன் தலைமீது |
| ஓர் ஆயிரம் பணம் வெங்கோ இயல் நாகத்தை | ஆயிரம் படங்களையுடையதும் யமன் போலக் கொடிய ஸ்வபாவத்தை யுடையதுமான காளிய நாகத்தை | சீர் ஆர் திரு அடியால் பாய்ந்தான் | (தனது) அழகிய திருவடியால் பாய்ந்து நர்த்தனம் செய்தவன் ; |

* * *—யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியினால் கொதிப்படைந்த நீருள்ள தாய்ப் பானத்துக்கு யோக்கியமாகாதபடி செய்த காளியனென்னும் கொடிய நாகத்தை ஸ்ரீக்ருஷ்ணன் தண்டிக்க வேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்ப மரத்தின்மேலேறி அம்மடுவிற் குதித்து அப்பாம்பின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ் செய்து நசுக்கி வலி யடக்குகையில், மாங்கலிய பிக்ஷை யிட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாக கன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது.

கயம்—கசம்; தடாகம். அலைக்கநின்று உரப்பி=நாலுபக்கத்தாலும் கரைக்குமேலே நீர்வழியும்படி கலக்கி என்றவாறு. ஓராயிரம் பணம்=“காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு, அவன் நீண்முடியைந்திலும் நின்று நடஞ்செய்து” என்று பெரியாழ்வார் திருமொழியில் ஐந்து படங்களாகச் சொல்லியிருக்க ஆயிரம் படங்களென்று இங்குச் சொன்னது—பயங்கரத்வத்தின் மிகுதியை விளக்குதற்கு அதிசயோக்தியாகச் சொன்னது என்னலாம்; கல்பபேதத்தாலே பொருத்தவுமாம்.

வெங்கோவியல்=‘வெங்கோ’ என்று யமனுக்குப் பெயர்; வெம்மை—கொடுமை; அதனையே ஸ்வபாவமாகக் கொண்ட, கோ—ப்ரபு; அப்படிப்பட்ட யமனைக் காளியநாகத்திற்கு உவமைகூறினர். மற்று அதன் என்று பிரித்து, மற்று என்பதை அசைச்சொல்லாக்கவுமாம். மத்தகம்—மஸ்தகம் என்ற வடசொல்விகாரம். சீரார் திருவடி=மேலைத்தலைமறையோர்களது சென்னிக்கு ஆபரணமாக அமையவேண்டிய சிறப்புப் பொருந்திய திருவடியை ஒரு துஷ்ட நாகத்தின் தலையிலேகொண்டு வைப்பதே! என்ற வயிற்றெரிச்சல் தோன்றும். ... ... ... ... ... ... ...

... ... ... ... தன் சீதைக்கு
நேராவ னென்றோர் நிசாசரிதான் வந்தாளைக்
கூரார்ந்த வாளால் கோடிமூக்குங் காதிரண்டும்
ஈரா விடுத்தவட்கு மூத்தோனை வெந்நரகம்

சேரா வகையே சிலைகுனித்தான் செந்துவர்வாய்
வாரார் வனமுலையாள் வைதேவி காரணமா
ஏரார் தடந்தோ ளிராவணனை ஈரைந்து
சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்—

பதவுரை.

தன் சீதைக்கு நேர் ஆவன் என்று — தனது தேவியான பிராட்டியோடே நான் ஸமானமாவேனென்று நினைத்து

ஓர் நிசாசரி வந்தாளை — (என்னை மணந்து கொள் என்று சொல்லிக் கொண்டு) ஓடி வந்த சூர்ப்பணகையென்னும் ராக்ஷஸியை

கூர் ஆர்ந்த வாளால் — கூர்மை பொருந்திய கத்தியினால்

கொடி மூக்கும் காது இரண்டும் ஈரா விடுத்து — கொடிபோன்ற மூக்கையும் காதையும் அறுத்துத் தூரத்தி விட்டு,

அவட்கு மூத்தோனை — அவளுடைய தமையனை கரனை

வெம் நரகம் சேரா வகையே சிலை குனித்தான். — ‘இனி இவன் வேறொருகொடிய நரகம் போய் வேதனையநுபவிக்க வேண்டியதில்லை’யென்னும்படியாக ஸகல நரக வேதனைகளையும் போர்க்களத்திலே அவனுக்குத் தந்து வில்லை வளைத்துக்கொன்றொழித்தவன் ;

செம் துவர் வாய் — மிகவும் சிவந்த அதரத்தையுடையவளும்

வார் ஆர் வனம் முலையாள் — கச்சு அணிந்த அழகிய முலையையுடையவளுமான

வைதேவி காரணம் ஆ — ஸீதாபிராட்டிக்காக

ஏர் ஆர் தட தோள் இராவணனை — அழகியபெரிய புஜங்களையுடையவனை இராவணனை

சீர் ஆர் ஈர் ஐந்து சிரம் அறுத்து செற்று — சிறந்த பத்துத் தலைகளையும் அறுத்துக் கொன்று

உகந்த — (முனிவர்களுடைய விரோதியைத் தீர்த்தோமென்று) திருவுள்ள முகந்த

செம் கண் மால் — புண்டரீகாக்ஷன்;

* * *—சூர்ப்பணகை யென்பவள் இராவணனுடைய தங்கை. தண்டகாரணியத்தில் குடியேறி அங்குள்ள வநவாஸிகளை வருத்திக்கொண்டு உல்லாஸமாகத் திரியுந் தன்மையுள்ள இவள், ஸ்ரீராம லக்ஷ்மணர் ஸீதையோடு கோதாவரிக்கரையில் பஞ்சவடியாச்ரமத்தில் வஸித்து வருகிறபொழுது ஒருநாள் இராமபிரானது திருமேனியழகைக் கண்டு பெருங்காதல் கொண்டு அழகிய வடிவமெடுத்து அருகில் வந்து தன்னைக் கூடும்படி பலவாறுவேண்டவும், அதற்கு அப்பெருமான் உடன்படாது பல கூறி மறுத்திட்டதனால் மிக வருந்தி மீண்டு 'ஒப்புயர்வில்லாத ஸௌந்தரியமுடைய மனைவி உடனிருத்தலால் அவளுள்ளளவும் என்னை இவன் விரும்பான்; அவளை வஞ்சனையால் எடுத்துப்போய் மறைத்து வைத்துவிட்டால் நான் இவனுடன் கூடி வாழக்கூடும்' என்றெண்ணி மற்றுநாளுதயத்தில் வந்து இராமன் காலைக்கடன் கழிப்பதற்குத் தடாகம் நோக்கிச் சென்ற ஸமயம் பார்த்துச் சீதையைப் பிடிக்கத் தொடர்கையில், அப்பிராட்டிக்குக் காவலாக அருகிற் சோலையிலிருந்த லக்ஷ்மணன் கண்டு விரைந்துவந்து இவளது கூந்தலை ஒரு கையாற் பற்றிக்கொண்டு மற்றொரு கையால் உடைவாளையெடுத்து அதனால் இவளது மூக்கையுங் காதையும் முலையையும் அறுத்துத் துரத்திவிட்டானென்ற வரலாறு அறியத்தக்கது. இச்செயல் செய்தது இளையபெருமாளாயினும் இதனைப் பெருமாள் செயலாகவே கூறுதலும் உண்டு; "சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு அவளார்க்க அரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப் பாடிப்பற" என்றார் பெரியாழ்வார்; "மலைபோலுருவத் தொரிராக்கதி மூக்கு அரிந்திட்டவன் காண்மின் இன்றாய்ச்சியரால் அளை வெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே" என்றார் இத் திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில். இளையபெருமாளைச் சொல்லுமிடத்து வால்மீகி முனிவர் "రామస్య దక్షిణో బాహుః" [ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:] என்றார்; அதாவது—லக்ஷ்மணனை ஸ்ரீராமபிரானது வலக்கையாகக் கூறினர். ஆகையால் சூர்ப்பணகா பங்கத்தைப் பெருமாளது செயலாகக் கூறுவது பொருந்துமென்க. தன் கையாலேயே ஏற தண்டித்தது.

அவட்கு மூத்தோனை=பூர்விக ராக்ஷஸ ச்ரேஷ்டனான ஸுமாலியின் மகளும், இராவணன் தாயான கேகஸியின் தங்கையும், இராவணனது தந்தையான விச்ரவமுனிவரையே கொழுநனாக அடைந்தவளும், (இங்குக் காட்டிய இருமுறையாலும்) இராவணனுக்குச் சிறியதாயுமாகிய கும்பீநஸியின் குமாரனாய், இராவணனுக்குத் தம்பிமுறையில் நிற்பவனான கரன், கேகஸியின்வயிற்றில் இராவண கும்பகர்ணர்கட்குப்பின் விபீஷணனுக்கு முன்பிறந்தவளான சூர்ப்பணகைக்குச் சிறியதாயின் மகனான முறையில் அவட்கு மூத்தோனெனப் பட்டானென்க. இவன், தண்டகாரணியத்திலே ஜநஸ்தானத்தில் சூர்ப்பணகை வஸிப்பதற்கென்று ஏற்படுத்திய ராஜ்யத்தில் அவளுக்குப் பாதுகாவலாகவும் அவளிட்ட கட்டளைப்படி நடப்பதற்காகவும் இராவணனால் நியமித்து வைக்கப்பட்ட பெரிய அரக்கர் சேனைக்கு முதற்றலைவன்.

ஸ்ரீராம லக்ஷ்மணர்களிடத்துக் கறுக்கொண்டு சென்ற சூர்ப்பணகை கரன் காலிலே விழுந்து புலம்பி முறையிட்டுத் தான் அங்கபங்கம் அடைந்த வரலாற்றைச் சொல்லி அழ, கரன் மிகப் பெரிய சேனையோடும் அறுபது லக்ஷம் படைவீரர்களோடும் சேனைத் தலைவர் பதினால்வரோடும் தூஷணன் த்ரிசிரஸ் என்னும் முக்கிய சேனாபதிகளோடும் புறப்பட்டு, அப்பொழுது ஸம்பவித்த துர்நிமித்தங்களை அகம்பநன் என்ற அறிவாளன் வந்து சொல்லித் தடுக்கவுங் கேளாமல் செருக்கி விரைந்துவந்து போர் தொடங்குகையில், இராமன் பர்ணசாலையினின்று வெளிப்பட்டு, போர்க்கோலங் கொண்ட லக்ஷ்மணனை விலக்கிச் சீதைக்குக் காவலாக வைத்துவிட்டுத் தான் தனியே எதிர்த்துச்சென்று பெரும் போர்செய்து பலரையுமழித்து, முடிவில் கரனைக் கொல்லும் பொருட்டு ஓர் அம்பு தொடுக்கத் தொடங்குகையில் இராமனது வில் முறிந்துவிடவே, இராமன் தன் கையைப் பின்னே நீட்டி வருணன் தந்த விஷ்ணு தநுஸ்ஸைப் பெற்று அதனை வளைத்து நாணேற்றி அம்பு தொடுத்து முன்பு கரனது வலக்கையைத் துணித்துப் பின்பு கரனையும் துணித்து வெற்றிகொண்டானென்ற வரலாறு அறியத்தக்கது.

"வெந்நரகஞ் சேராவகையே சிலை குனித்தான்" என்றவிதற்கு ஸாமாந்யமாகப் பலரும் பொருள் சொல்லக்கூடும்—கரனை நரகத்துக்குப் போக வொட்டாமல் வீர ஸ்வர்க்கத்துக்குப் போகச் செய்தார் பெருமாள்—என்று. இப்பொருளை மறந்து விடுங்கள்; இங்ஙனல்ல பொருள். வளைந்த வில்லுங் கையுமாய் நின்ற பெருமாளைக் கண்ட கரன் 'நாம் மேலேபோய் வேறொருநரகயாதனை அநுபவிக்க வேண்டா; எல்லா நரக வேதனையும் நமக்கு இங்கே அநுபவித்தாயிற்று' என்று குடல் மறுகும்படி போர்க்களத்திலே அவனைப் படாதபாடுபடுத்தினன் என்று பட்டர் அருளிச்செய்யும்பொருள். நஞ்சீயர் பட்டரை ஆச்ரயிப்பதற்கு முன்னே மேல் நாட்டில் வாழுங்காலத்து பட்டருடைய சிஷ்யரொருவரை ஸந்தித்து வார்த்தையாடும்போது 'எங்களுடைய திவ்ய ப்ரபந்தத்தில் அவட்கு மூத்தோனை வெந்நரகஞ் சேராவகையே சிலை குனித்தான் என்றிருக்கிறது, இதற்கு வேதாந்திகளே! நீங்கள் என்னபொருள் சொல்லுவீர்கள்?' என்று கேட்க, அவர் ஸாமாந்யமாக நெஞ்சிற்பட்ட பொருளைச் சொல்லிவிட்டு, 'உங்களுடைய பட்டர் இங்ஙனே சொல்லுவர்?' என்று கேட்க, இங்ஙனே சொல்லுவர் என்று அவர் கூற, இப்பொருள் கூறவல்ல பட்டரை நாம் ஸேவிக்கவேணுமென்று அவருக்குக் காதல் கிளர்ந்ததாகப் பெரியோர் கூறுவர். பட்டருடைய அருளிச் செயலாக நஞ்சீயர் கேட்டு விஸ்மயப்பட்ட அர்த்த விசேஷங்கள் பலவற்றுள் இதுவுமொன்றென்க.

சிலை குனித்தா னென்றது—கொன்றா னென்றபடி: மங்கல வழக்கு. பிராட்டிக்காக இராவணனைக் கொன்றொழித்தபடியை மேல் கூறுகின்றாள் சேந்துவர்வா யென்று தொடங்கி.... ...

போரார் நெடுவேலோன் பொன்பெயரோ னாகத்தைக்
கூரார்ந்த வள்ளுகிரால் கீண்டு குடல்மாலை
சீரார் திருமார்பின் மேற்கட்டிச் செங்குருதி
சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி
ஆரா வெழுந்தா னரியுருவாய்......—

## பதவுரை

| | |
|---|---|
| போர் ஆர் நெடு வேலோன் பொன் பெயரோன் ஆகத்தை | (எப்போதும்) யுத்தத்திலே பொருந்தியிருக்கிற நீண்ட வேலாயுதத்தையுடையனான ஹிரண்யனுடைய உடலை |
| அரி உரு ஆய் | நரஸிம்ஹரூபியாகி |
| கூர் ஆர்ந்த வள் உகிரால் கீண்டு | கூர்மை மிக்கு நெருங்கின திருநகங்களாலே பிளந்து |
| குடல் | அவ்வசுரனுடைய குடலை (பிடுங்கியெடுத்து) |
| சீர் ஆர் திரு மார்பின் மேல் மாலை கட்டி | அழகிய பிராட்டிக்கு இருப்பிடமான மார்பிலே வெற்றி மாலையாக அணிந்து கொண்டு |
| செம் குருதி சோரா கிடந்தானை | சிவந்த ரக்தவெள்ளம் பெருகக்கிடந்த அவ்வசுரனை |
| குங்குமம் தோள் கொட்டி | குங்குமச் சேற்றினாலே அலங்கரிக்கப்பட்டுள்ள தனது திருத்தோளின் மேல் அறைந்து கொண்டு |
| ஆரா எழுந்தான் | ஆரவாரஞ் செய்து கொண்டு எழுந்தவன்; |

* * *—தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமில்லாதபடி வரம்பெற்றவனும் ஹிரண்யாக்ஷனது உடன் பிறந்தவனுமான ஹிரண்யகசிபு, தேவர்முதலிய யாவர்க்கும் கொடுமைகளியற்றித் தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்து வருகையில், அவனது மகனான ப்ரஹ்லாதாழ்வான் இளமை தொடங்கி மஹாவிஷ்ணு பக்தனாய், தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயர்சொல்லிக் கல்வி கற்காமல் நாராயணநாமஞ் சொல்லி வரவே, கடுங்கோபங்கொண்ட ஹிரண்யன் ப்ரஹ்லாதனைத் தன் வழிப்படுத்துதற்குப் பலவாறு முயன்றபின் அங்ஙனம் வழிப்படாதஅவனைக் கொல்லுதற்கு என்ன உபாயஞ் செய்தும் அவன் பகவான் அருளால் இறந்திலனாக ஒருநாள் சாயங்காலத்தில் தந்தை மைந்தனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கு உளன்? காட்டு' என்ன, அப்பிள்ளை "தூணிலு முளன், துரும்பிலு முளன், எங்கு முளன்" என்று உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ?' என்று சொல்லி எதிரில்

நின்ற தூணைப் புடைக்க, அதிலிருந்து திருமால் உடனே மனித ரூபமும் சிங்கவடிவமுங்கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக் கொண்டு தனது திருக்கை நகங்களால் அவன் மார்பைப் பிளந்து குடலைப் பறித்து விஜயலக்ஷ்மி விளங்குகிற திருமார்பிலே மாலை யிட்டு, ரக்தவெள்ளம் கொழிக்கும்படி கிழிக்கப்பட்ட அவனை, பிராட்டிமாரோடே ஸம்ச்லேஷிப்பதற்கு அலங்கரித்த திருத் தோளின்மேலே எடுத்து அறைந்துகொண்டு 'ஆச்ரிதவிரோதி ஒழிந்தான்' என்று ஆரவாரஞ் செய்து ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்தமை அறியத்தக்கது.

பொன் பெயரோன்= இது லக்ஷித லக்ஷணை; ஹிரண்யம் என்ற வடசொல் பொன் எனப் பொருள்படும்.

ஆரா—செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம் : ஆர்த்து என்றபடி; ஆரவாரஞ் செய்து. ... ...

... ... ... அன்றியும்
பேர்வாம னாகிய காலத்து மூவடிமண்
தாரா யெனக்கென்று வேண்டிச் சலத்தினால்
நீரேற் றுலகெல்லாம் நின்றளந்தான் மாவலியை—

பதவுரை

| | |
|---|---|
| அன்றியும் | அது தவிரவும், |
| பேர் வாமன் ஆகிய காலத்து | மிகச்சிறிய வாமநனாகத் திருவவதரித்த காலத்தில் |
| மா வலியை | மஹாபலியினிடத்து |
| மூ அடி மண் எனக்கு தாராய் என்று வேண்டி | 'மூவடி நிலம் எனக்குக் கொடு' என்று யாசித்து |
| நீர் ஏற்று | அவன் தாரை வார்த்து தததம் பண்ண அதனைப் பெற்று |
| சலத்தினால் | சிறிய அடியைக் காட்டிப் பெரிய அடியாலே அளப்பதாகிய கபடத்தினாலே |
| நின்று | நிமிர்ந்து |
| உலகு எல்லாம் அளந்தான் | லோகங்களையெல்லாம் அளந்து ஸ்வாதீனப் படுத்தி கொண்டவன் |

* * *—மஹாபலி யென்னும் அஸுரராஜன் தன் வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும் வென்று மூன்று உலகங்களையும் தன் வசப்படுத்தி அரசாட்சி செய்துகொண்டு செருக்குற்றிருந்தபொழுது அரசிழந்த தேவர்கள் திருமாலைச்சரணமடைந்து வேண்ட, அப்பெருமான் குள்ளவடிவான வாமநாவதாரங்கொண்டு காச்யபமாமுனிவனுக்கு அதிதி தேவியினிடந் தோன்றிய ப்ராஹ்மண ப்ரஹ்மசாரியாகி,—வேள்வி யியற்றி யாவர்க்கும் வேண்டிய அனைத்தையுங் கொடுத்துவந்த அந்த மாவலியிடஞ் சென்று, தவஞ் செய்தற்குத் தன் காலடியால் மூவடிமண் வேண்டி, அது கொடுத்தற்கு இசைந்து அவன் தாரை வார்த்துத் தத்தஞ்செய்த நீரைக் கையிலேற்று உடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியாற் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையு மளந்து, தானமாகப் பெற்ற மற்றோரடிநிலத்திற்கு இடமில்லையாகவே அதற்காக அவன் வேண்டுகோளின்படி அவனது முடியில் அடியை வைத்து அவனைப் பாதாளத்தி லழுத்தி அடக்கின வரலாறு அறியத்தக்கது.

"பேர் வாமனாகிய காலத்து" என்ற பாடம் வெண்டளைக்குச் சேராதாகையாலும் ப்ராசீனபாடமன்றாகையாலும் மறுக்கத்தக்கது. வாமனாகிய என்பதே பாடம். வாமன்—வாமநன்; சிதைவு. "சீராற் பிறந்து சிறப்பால் வளராது, பேர் வாமனாகாக் கால் பேராளா" என்ற பெரிய திருவந்தாதியும் நோக்கத்தக்கது. பேர் வாமன்=வாமநர்களுக்குள்ளே பெருமை பெற்றவன் என்றாய், மிகச்சிறிய வாமநனென்றதாயிற்று.

சலத்தினால்=ச்லலம் என்ற வடசொல் க்ருத்ரிம மெனப் பொருள்படும்; கபடமாக என்றபடி. ... .. ... *

ஆராத போரி லசுரர்களுந் தானுமாய்க்
காரார் வரைநட்டு நாகங் கயிறாகப்
பேராமல் தாங்கிக் கடைந்தான் திருத்துழாய்த்
தாரார்ந்த மார்வன் ... ... ...—

பதவுரை

| | |
|---|---|
| ஆராத போரில் | முடியமாட்டாத தேவாஸுர யுத்தத்திலே |
| அசுரர்களும் தானும் ஆய் | அசுரர்களும் தானுமாக |
| கார் ஆர் வரை நட்டு | மேகம் படிந்த மந்தர மலையைக் கொண்டுவந்து (மத்தாக) நாட்டி |
| நாகம் கயிறு ஆக | வாசுகி நாகத்தைக் கடை கயிறாகச் சுற்றி |
| பேராமல் தாங்கி | அம்மலையானது மேலே கிளம்பாதபடி முதுகில் தரித்துக்கொண்டு |
| திரு துழாய் தார் ஆர்ந்த மார்வன் கடைந்தான் | திருத்துழாய் மாலையணிந்த திருமார்பையுடையனுய்க் கொண்டு கடைந்தவன்; |

* * *—முன் ஒரு காலத்தில், இவ்வண்ட கோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணு லோகத்துச் சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப் பெற்ற ஒரு வித்தியாதர மகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு ப்ரஹ்மலோக வழியாய் மீண்டு வருகையில், துர்வாஸ மஹாமுநி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க அவ்விஞ்சை மங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையை யுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் கை நீட்டிக்கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின் மேல் வைத்த வளவில் அம் மதவிலங்கு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முநிவரன் கடுங்கோபங் கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச் செருக்குற்ற நினது ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக் கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம் யாவும் ஒழிந்தன; ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர்; பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி, அசுரர்களையுந் துணைக்

கொண்டு மந்தர மலையை மத்தாக நாட்டி வாஸுகி யென்னும் மஹா நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்கள் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமை வடிவமெடுத்து அம்மலையின் கீழே சென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்தி விடாமற் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன் என்ற வரலாறு அறியத் தக்கது.

கடலைக் கடைகிறபோது தோளுந் தோள் மாலையுமாய் நின்று கடைந்தருளினதனால் அதனை அநுபவித்துச் சொல்லுகிறாள் திருத்துழாய்த் தாரார்ந்த மார்வன் என்று. கடைகிறபோது தேவர்கள் 'அமுதம் எப்போது கிளரப்போகிறது!' என்று அதில் நோக்காகக் கவிழ்ந்து பார்த்துக்கொண்டிருந்தார்களேயன்றி எம்பெருமானது தோளுந் தோள்மாலையுமான திவ்யாலங்காரத்திலே கண் வைத்து ஸேவிக்கப் பெற்றிலர் என்ற குறை தீர, தான் அதில் ஈடுபட்டுப் பேசுகிறாள் போலும். ... ... ... ... *

... ... ... தடமால் வரைபோலும்
போரானை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி
நீரார் மலர்க்கமலங் கொண்டோர் நெடுங்கையால்
நாரா யணா! மணிவண்ணா நாகணையாய்!
வாராய் என்றிடரை நீக்கா யெனவெகுண்டு
தீராத சீற்றத்தாற் சென்றிரண்டு கூறாக
ஈரா வதனை யிடர்கடிந்தா னெம்பெருமான்
பேரா யிரமுடையான் பேய்ப்பெண்டீர் நும்மகளைத்
தீரா நோய்செய்தா னெனவுரைத்தாள்......—

பதவுரை

| | | | |
|---|---|---|---|
| தடம் மால் வரை போலும் போர் ஆனை | மிகப் பெரிய மலை போன்ற மத்தகஜமானது | பொய்கை வாய் கோள் பட்டு நின்று அலறி | நீர் நிலத்திலே முதலையின் வாயிலகப்பட்டு நின்று வருந்தி |

ஓர்நெடு கை யால் நீர்ஆர் கமலம் மலர் கொண்டு — நீண்ட ஒரு துதிக் கையினால் அப்போ தலர்ந்த தாமரைப் பூக்களை எடுத்துக்கொண்டு

ஓ நாராயணா! மணிவண்ணா நாக அணை யாய் வாராய் என் ஆர் இடரை நீக்காய் என — "நாராயணனே! நீல மணிவண்ணனே! சேஷசயனனே! வந்தருளவேணும், எனது பெருந்துக் கத்தைப் போக்கி யருளவேணும்" என்று கூவ, (அக் கூக்குரலைக் கேட்டு)

வெகுண்டு — (கஜேந்திர விரோதி யின் மேல்) கோபித்து

தீராத சீற்றத் தால் சென்று — அடங்காத அக்கோ பத்தோடே (பொய்கைக் கரைக்கு) எழுந் தருளி

இரண்டு கூறு ஆக ஈரா — (முதலையை) இரு துண்டமாகப் பிளந்து

அதனை இடர் கடிந்தான் எம் பெரு மான் — அந்த கஜேந்திர னுடைய துன்பத் தைப் போக்கடித்த எம்பெருமான்

பேர் ஆயிரம் உடையான் — (இப்படிப்பட்ட அள வற்ற காரியங்க ளுக்கு வாசக மான) ஸஹஸ்ர நாமங்களை யுடை யவன்; (அவ்வெம் பெருமான் தான்)

பேய் பெண் டீர் நும் மகளை தீரா நோய் செய் தான் என உரைத் தாள் — அறிவு கெட்ட பெண்டுகளே! உங் கள் மகளுக்கு (இப்படிப்பட்ட) தீராத நோயை உண்டு பண்ணி னான் காண்மின் என்று சொல்லி முடித்தாள் (கட்டு விச்சி);

* * *—மிக்க விஷ்ணுபக்தியுடையனான இந்த்ரத்யும்ந னென்னும் அரசன் வழக்கப்படி ஒரு நாள் விஷ்ணுபூஜை செய்துகொண்டிருந்தபோது அகஸ்திய மஹா முனிவன் அவனிடமெழுந்தருள; அப்பொழுது அவன் தன் கருத்து முழுவதையும் பகவதாராதநத்தில் செலுத்தியிருந்ததினால் அம் மஹர்ஷியின் வருகையை அறிந்திடானாய் அவனுக்கு உபசார மொன்றுஞ் செய்யாதிருக்க, அம் முனிவன், தன்னை அரசன் அலக்ஷியஞ் செய்தானென்று மாறாகக் கருதிக் கோபித்து 'நீ யானை போலச் செருக்குற்றிருந்ததினால், யானையாகக் கடவை' என்று சபிக்க அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும் முன் செய்த விஷ்ணு பூஜையின் மஹிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அர்ச்சித்துப் பூஜித்து வருகையில், ஒரு நாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்

சனைக்காகப் பூப் பறித்தற்குப் போய் இறங்கிய பொழுது, அங்கே முன்பு நீர்நிலையில் நின்று தவஞ் செய்து கொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றி யிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க் கிடந்த ஹூஹூவென்னுங் கந்தர்வன் அவ் யானையின் காலைக் கௌவிக்கொள்ள அதனை விடுவித்துக் கொள்ள முடியாமல் கஜேந்திரன் 'ஆதி மூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அங்கு எழுந்தருளித் தனது சக்ராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன் வாயினின்று விடுவித்து அதன் கையிலிருந்த தாமரைப் பூவையும் தனது திருவடிகளிலே சாத்தப்பெற்று இறுதியில் அதற்கு முக்தியை அருளினான் என்ற வரலாறு அறிக.

போரானை = "யுத்தோந்முகனாய்த் திரிகிறானன்றிறே; செருக்காலே மலைகளோடே பொருது திரிகிறபடி" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க.

"நாராயணா ஓ — வாராய்" = பெரியாழ்வார் திருமொழியில் "பதக முதலைவாய்ப்பட்டகளிறு, கதறிக் கைகூப்பி என் கண்ணா கண்ணா வென்ன" என்ற விடத்து வியாக்கியான மருளிச் செய்கின்ற மணவாளமாமுனிகள்—" 'நாராயணா ஓ மணிவண்ணா நாகணையாய் வாராய்' என்று கூப்பிட்டானாக அருளிச்செய்தார் திருமங்கையாழ்வார்; இவர் 'என் கண்ணா கண்ணா' என்று கூப்பிட்டானாக அருளிச்செய்தார்; "మూలేతి ముక్తపద మాలపతి ద్విపేంద్రే" [மூலேதி முக்தபத மாலபதி த்விபேந்த்ரே] என்று கொண்டு 'மூலமே' என்று கூப்பிட்டானாகப் பௌராணிகர் சொன்னார்கள்; இவை, தன்னில் சேரும்படி என்னென்னில்; மூலம் என்கிற விடத்தில் அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனான ஆகாரத்தை நினைத்துக் கூப்பிட்டானாகையாலே அதுக்குப் பர்யாய சப்தங்களை யிட்டு ஆழ்வார்களருளிச் செய்தார்களாகையால் எல்லாம் தன்னில் சேரக் குறையில்லை" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்திக்கத்தகும்.

ஆரிடரை நீக்காய்=முதலைவாயிலகப்பட்டுப் படுகிற துக்கத்தை நீக்க வேண்டுகின்றானல்லன் கஜேந்திராழ்வான். கையில் பறித்து வைத்துக்கொண்டிருக்கிற செந்தாமரைப்பூ செவ்வியழிவதற்கு முன்னே எம்பெருமானது திருவடிகளில் சாத்தப்பெறவேணு மென்பதே அவனது அபிநிவேசமாதலால் அவ்வபிநிவேசம் நிறைவேறப்பெறாமையால் வந்த துக்கத்தை நீக்கச் சொல்லுகிற வித்தனை. “ నాహం కళేబరస్యాస్య త్రాణార్థం మధుసూదన। కరస్థ కమలాన్యేవ పాదయోరర్పితుం హరేః” [நாஹம் கனேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந—கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பி தும் ஹரே:] என்றது காண்க. இவ்வுடம்பைக் காப்பாற்றிக் கொள்ள நான் கரையவில்லை; கையிலுள்ள தாமரைப்பூவைத் திருவடிகளில் ஸமர்ப்பிக்க வேணுமே என்றே கரைகின்றேனென் றவாறு.

ஈரா=இறந்த கால வினையெச்சம்; ஈர்ந்து என்றபடி. அதனை இடர் கடிந்தான்=அந்த ஸ்ரீகஜேந்திராழ்வான் கையிலிருந்த தாம ரைப்பூக்களைத் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப் பெற்றுக்கொண்டா னென்றபடி.

இப்படி சில திவ்ய சேஷ்டிதங்களைச் சொல்லி, இப்படிப் பட்ட பல்லாயிரம் திவ்ய சேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்களையுடைய பெருமான் உங்கள் மகளை நோவுபடுத்தின வன் காண்மின் என்று கட்டுவிச்சி கூறித் தலைக்கட்டினாளாயிற்று. இந்நோய் தீருவதற்கு உபாயமென்னவென்று விசாரிக்கிறவர்களை நோக்கித் “தீரா நோய் செய்தான்” என்று சொல்லுகிறபடி பாருங் கள். வேறுவிதமான நோயாகிலன்றோ அது தீரவேணுமென்று அவர்கள் சிந்திப்பர்கள்; ஸர்வேச்வரனடியான நோயென்று தெரிந் தவாறே அவர்கள் ‘இந்நோய் தீராமல் நித்யமாய்ச் செல்ல வேணும்’ என்று மநோரதிப்பர்களாதலால் அவர்களது கருத் துக்கு இணங்கத் தீரா நோய் என்றானென்க. தீராத நோயாவது பக்தி. இது ஆத்மாவுள்ளவரையில் தொடர்ந்து செல்லக் கடவது; ப்ராப்தி தசையிலும் அநுவர்த்திக்குமிறே. [கட்டுவிச்சியின் பேச்சு முற்றிற்று. இனி பரகாலநாயகியின் நிர்வேதம்.]

*

... ... ... சிக்கனமற்று
ஆரானு மல்லாமை கேட்டெங்க ளம்மனையும்
போரார்வேற் கண்ணீ ரவனாகில் பூந்துழாய்
தாரா தொழியுமே தன்னடிச்சி யல்லளேமற்று
ஆரானு மல்லனே யென்றொழிந்தாள்......—

பதவுரை

எங்கள் அம்மனையும் — (அதற்குமேல்) என்னுடைய தாயானவள்

மற்று ஆரானும் அல்லாமை சிக்கன கேட்டு — வேறு எந்த தேவதாந்தரமும் இந்த நோய்க்குக் காரணமல்ல வென்பதை த்ருடமாகக் கேட்டுக்கொண்டு

போர் ஆர் வேல் கண்ணீர்! — யுத்தத்திலே பொருந்தின வேல் போன்ற கூரிய கண்களையுடைய தோழிமார்களே!

அவன் ஆகில் — (இந்நோய் செய்தவன்) அந்த எம்பெருமானே யாகிற பக்ஷத்தில்

பூ துழாய் தாராது ஒழியுமே — (இவளுக்கு உத்தேச்யமான) திருத்துழாய்ப் பிரஸாதத்தைத் தந்தருளாமற் போவனோ;

தன் அடிச்சி அல்லளே — (இவள்) அவன்றனக்கு அடிமைப்பட்டவளன்றோ;

மற்று ஆரானும் அல்லனே என்று ஒழிந்தாள் — (தைவாதீனமாக) வேறொருவனும் இந்நோய் செய்தவனன்றே என்று சொல்லிவிட்டு விசாரமற்றொழிந்தாள் (என்தாய்)

* * *—இங்ஙனே கட்டுவிச்சி சொல்லி முடித்தவுடனே என் தாயானவள் "அடி குறத்தி! இந்நோய் செய்தது அந்த பரதேவதைதானே, வேறொரு தேவதாந்தரமு மன்றே, இது ஸத்யந்தானா?" என்று பலதடவை கேட்டு அவனே தானென்பதை த்ருடமாகத் தெரிந்துகொண்டு "புவனியெல்லாம் நீரேற்றளந்த நெடிய பிரானருளாவிடுமே" என்கிற விச்வாஸந்தோற்ற "இனி நாம் இவள் திறத்துக் கவலைப்படக் காரணமில்லை; இந்நோய் செய்தவன் அப்பெருமானேயாயிருக்கிற பக்ஷத்தில், தனது தாஸபூதையான இவளை ஒருகாலும் கைவிடமாட்டான்; "தன் மன்னு நீள்கழல்

மேற்றண்டுழாய் நமக்கன்றி நல்கான்" என்றபடி திருத்துழாய்ப் பிரசாதந் தந்து அருள் செய்தே தீருவன்; மற்ற தேவதாந்தரமாகி லன்றோ நாம் அஞ்சவேண்டுவது; எம்பெருமானே யென்று நமக்கு ஸத்யமாகத் தெரிந்தபின்பு இனி என்ன கவலை?" என்று சொல்லி விட்டு விசாரமற்றுப் போய்விட்டாள்.

"போரார் வேற்கண்ணீர்" என்றது—அசற் பெண்டுகளைப் பார்த்துத் தாய் பண்ணின ஸம்போதநம். ... ... *

... ... ... நானவனைக்
காரார் திருமேனி கண்டதுவே காரணமாப்
பேராப் பிதற்றாத் திரிதருவன் பின்னையும்
ஈராப் புகுதலு மிவ்வுடலைத் தண்வாடை
சோரா மறுக்கும் வகையறியேன் சூழ்குழலார்
ஆரானு மேசுவ ரென்னு மதன்பழியை
வாராமல் காப்பதற்கு வாளா விருந்தொழிந்தேன்—

பதவுரை

| | |
|---|---|
| நான் | நானோவென்றால் |
| அவனை கார் ஆர் திருமேனி கண்டதுவே காரணம் ஆ | அவனது கரிய திருமேனியை ஸேவித்தது முதலாக |
| பேரா பிதற்றா திரிதருவன் | உருமாறி வாய் வெருவிக் கொண்டு திரியாநின்றேன்; |
| பின்னையும் | அதற்குமேல், |
| தண் வாடை | குளிர்ந்த காற்றானது |
| இ உடலை ஈரா புகுதலும் | (எனது) இவ்வுடம்பைப் பிளந்து கொண்டு உள்ளே புகுந்து |
| சோரா மறுக்கும் | தளர்த்தியை யுண்டாக்கித் துன்பப்படுத்துகின்றது; |
| வகை அறியேன் | ஹிம்ஸிக்கும் ப்ரகாரங்களைப் பகுத்துச் சொல்ல அறிகின்றிலேன்; |
| சூழ் குழலார் ஆரானும் | நிறைந்த கூந்தலையுடைய பெண்கள் யாராகிலும் |
| ஏசுவர் என்னும் அதன் பழியை | அலர் தூற்ற, அதனால் வரும் அபவாதத்தை |
| வாராமல் காப்பதற்கு | தடுத்துக் கொள்வதற்காகவே |
| வாளா இருந்தொழிந்தேன் | (இதுவரை) ஒன்றும் செய்யாமலிருந்துவிட்டேன்; |

* * *—எனது தாய் மாத்திரம் கவலையற்றுக் கையொழிந்தாளே யொழிய, நான் கவலை தீரப்பெற்றிலேன்; என் துக்கம்

தொலையப் பெற்றிலேன் என்கிறாள் பரகால நாயகி. ஸகல தாபங்களையும் தணிக்குமதான அவனுடைய திவ்ய திருமேனியை அன்றொரு நாள் நான் காணப்பெற்றது முதலாக, நிலைகுலைந்து வாய் வந்தபடி கண்டவா பிதற்றிக்கொண்டு திரிபவளாயினேன். கள் குடித்த குரங்குக்குத் தேள்கடியும் நேர்ந்தாற்போலே குளிர்ந்த வாடைக்காற்றும் பாவியேனுடலை அறுத்துக்கொண்டே உள்ளே புகுந்து துன்பப்படுத்தாநின்றது; சித்ரவதை பண்ணுகின்றது; அது செய்கிறவகைகள் வாசாமகோசரம்.

அன்றைக்கே நான் மடலூரப் புறப்பட்டிருக்கவேண்டும்; ஸஜாதீயைகளான ஸ்த்ரீகள் யாராவது நிறக்கேடான வார்த்தைகளைச்சொல்லி நம்மை ஏசுவார்களே என்று லோகாபவாதத்துக்கு அஞ்சி இதுவரையில் மடலூராதே வீணே காலங் கழித்தேன்.... *

வாராய் மடநெஞ்சே வந்து மணிவண்ணன்
சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளித்
தாரான் தருமென் றிரண்டத்தி லொன்றதனை
ஆரானு மொன்றுதார் கேளாமே சொன்னக்கால்
ஆராயு மேலும் பணிகேட் டதன்றெனிலும்
போரா தொழியாதே போந்திடுநீ யென்றேற்குக்
காரார் கடல்வண்ணன் பின்போன நெஞ்சமும்
வாராதே யென்னை மறந்ததுதான் வல்வினையேன்
ஊரா ருகப்பதே யாயினேன்......—

பதவுரை

| | |
|---|---|
| மட நெஞ்சே | "அறிவு கெட்டுக் கிடக்கிற மனமே! |
| வாராய் | (தூது போக) எழுந்திரு; |
| வந்து | அவ்வெம்பெருமான் பக்கலிலே சென்று |
| மணி வண்ணன் | நீலமணிபோன்ற வடிவையுடையனான அவ்வெம்பெருமான் |
| நமக்கு அருளி | நம்மேல் க்ருபை பண்ணி |
| சீர் ஆர் திரு துழாய் மாலை | சிறந்த திருத்துழாய் மாலையை |
| தரும் தாரான் என்ற இரண்டத்தில் ஒன்றதனை | தருவன் தரமாட்டான் என்ற இரண்டு வார்த்தைகளில் ஏதாவதொரு வார்த்தையை (அவன் சொல்லும்படி நான் சொல்லியனுப்புகிற சொல்லை) |

| | | | |
|---|---|---|---|
| ஒன்ருதார் ஆரானும் கேளாமே சொன்னக்கால் | அவனை யுகவாதவர்கள் எவரும் கேளாதபடி நீ சொன்னுயாகில், | என்றேற்கு | என்று சொன்ன என் பேச்சுக்கு உடன்பட்டு |
| பணி கேட்டு | அவ் வார்த்தையைக் கேட்டு | கார் ஆர் கடல் வண்ணன் பின் போன நெஞ்சமும் | கரிய கடல் வண்ணன் பக்கலிலே சென்ற எனது மனந்தானும் |
| ஆராயு மேலும் | (அன்புடன்) விசாரித்தாலுைம் சரி; | வாராதே | திரும்பி வருதலின்றியே |
| அது அன்று எனிலும் | அந்த ஸங்கதியே நமக்குத் தெரியாதென்று திரஸ்கரித்தாலும் சரி, | என்னை மறந்ததுதான் | என்னை மறந்து அங்கேயே தங்கிவிட்டது ஐயோ! |
| நீ போராதொழியாதே போந்திடு | நீ இங்கே வாராது அங்கேயே தங்கிவிடாமல் உடனே வந்து சேர்ந்துவிடு” | வல்வினையேன் | கொடும் பாவியாகிய நான் |
| | | ஊரார் உகப்பதே ஆயினேன் | ஊரார் ஸந்தோஷிக்கும்படியாகவே நிலைகுலைந்தேன்; |

* * *—பரகாலநாயகி தனது நெஞ்சைத் தூதுவிட்டுப் பட்ட பரிபவத்தைப் பேசுகின்ருள்.—“அறிவு மாண்டுகிடக்கிற நெஞ்சே! எழுந்திரு; தன்னைப் பிரிந்தார் மடலெடுக்கவேண்டும்படியான வடிவு படைத்த அவன் பக்கல் சென்று ‘திருத்துழாய் ப்ரஸாதம் நமக்குக் கொடுக்க முடியுமா? முடியாதா? இரண்டத்தொன்று சொல்லிவிடு’ என்று ஏகாந்தமாகக்கேள்; அதற்கு அப்பெருமான் ஆதரவு தோற்ற விசாரித்து நல்ல மறுமாற்றம் சொன்னுலும் சரி, ‘அவளாரோ எனக்குத் தெரியாது’ என்று அநாதரமாகச் சொல்லிவிட்டாலும் சரி; ஏதோ வொரு கருத்தைத் தெரிந்து கொண்டு அங்கு விளம்பித்து நிற்காதே கடுக என்பால் மீண்டுவா” என்று சொல்லி எனது நெஞ்சை அவனிடத்துப் போகவிட்டேன்; சர்க்கரைப் பந்தலில் தேன்மழை பொழிந்ததென்று மகிழ்ந்து அந்தப் படுபாவி நெஞ்சு சடக்கெனப் புறப்பட்டுப் போயிற்று. அதுதான் கடல் வண்ணன் பின்னே போயிற்ருகையாலே ‘கடல் புக்கது திரும்பாது’ என்றபடி என்னை மறந்து அங்கேதானே படுகாடு கிடக்கின்றது! என வருந்துகின்ருள். என் நெஞ்சமே எனக்குத் துணையாகப் பெருத யான் வேறு யாரை வெறுப்பேனென்றதாம்.

நெஞ்சை லௌகிக பதார்த்தங்களிற் செலுத்தி ஒருவாறு போதுபோக்க வொண்ணாதபடி அவ்வெம்பெருமான்றனை இடைவிடாது சிந்தாவிஷயமாகிறதென்று இதனாற் குறிப்பிட்டபடி. "నపుంసకమితి జ్ఞాత్వా తాం ప్రతి ప్రేషితం మనః। తత్తు తత్రైవ రమతే హతాఃపాణినినా వయమ్." [நபும்ஸகமிதி ஜ்ஞாத்வா தாம் ப்ரதி ப்ரேஷிதம் மந:-தத்து தத்ரைவ ரமதே ஹதா: பாணிநிநா வயம்] என்ற ஒரு கவியின் சமத்காரத்தை இங்கே நினைக்க.

பிள்ளைப்பெருமாளையங்கார் திருவரங்கக் கலம்பகத்தில், "நீரிருக்க மடமங்கைமீர்! கிளிகள் தாமிருக்க மதுகரமெலாம் நிறைந்திருக்க மடவன்ன முன்ன நிரையாயிருக்க வுரையாமல் யான், ஆரிருக்கினு மென்னெஞ்ச மல்லதொரு வஞ்சமற்ற துணையில்லையென்றாதரத்தினொடு தூதுவிட்ட பிழையாரிடத் துரைசெய்தாறுவேன், சீரிருக்கு மறைமுடிவு தேடரிய திருவரங்கரை வணங்கியே திருத்துழாய்தரில் விரும்பியே கொடிதிரும்பிபே வருதலின்றியே, வாரிருக்கு முலைமலர் மடந்தையுறை மார்பிலே பெரிய தோளிலே மயங்கி யின்புறமுயங்கி யென்னையுமறந்து தன்னையுமறந்ததே" என்ற பாசுரமும் இங்கே அநுஸந்திக்கத்தகும்.

ஆராலு மொன்னாதார் கேளாமே சொன்னக்கால்=சத்துருக்களுடைய காதிலே விழாதபடி ரஹஸ்யமாகச் சொல்லவேணுமென்று நெஞ்சோடே சொல்லியனுப்பினளாம். எம்பெருமானுடைய குணபூர்த்தியைப் பொறுக்ககில்லாத சிலர், நம்முடைய காரியத்தை ஆகவொட்டாமல் கெடுக்கிற முகத்தாலே எம்பெருமானுடைய தயாவாத்ஸல்யாதி குணங்களை அழித்துவிடக்கூடுமென்று அஞ்சுகின்றாள் போலும். ஒன்னாதார் — ஒன்றாதார்; (தம்மோடு மனம்) பொருந்தாதவர்; எனவே பகைவராவர்.

பணிகேட்டு ஆராயுமேலும் அதன்றேனிலும் = இவ்விடத்திலே பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி—"உன்னைக் கண்டபோதே 'அவள் என்பட்டாள்? அவள் உளளோ? அவ்வாச்ரயம் இன்னும் நமக்குக் கிடைக்குமோ?' என்று திருவுள்ளமானானே யாகிலும்; அங்ஙனன்றியே துஷ்யந்தனைப்போலே 'அங்ஙனைக் கொப்பாளொருத்தியை அறியோம்' என்றானாகிலும்" என்று.

வல்வினையேன்=என் நெஞ்சும் எனக்கு உதவாதபடியான மஹா பாபத்தைப் பண்ணினேனென்கை. ஊராருகப்பதேயாயினேன் =' ஒரு ஸாதநத்தை அநுஷ்டித்தாலன்றிப் பலன் ஸித்திக்க மாட்டாது ' என்று ஊரார் சொல்லுவது; ' ஸாதநாநுஷ்டாநமெல்லாம் கால்கட்டு; அவனாலேதான் பேறு ' என்று நான் சொல்லிக்கொண்டிருப்பது; இப்படி சொல்லிக்கொண்டிருந்த நானே ' மடலூரக்கடவே ' னென்று இன்று சொல்ல நேர்ந்தபடியால் என்னுடைய அத்யவஸாயம் பழுதாகி ஊராருடையகொள்கையே பலித்ததாயிற்று என்பது கருத்து. மடலூர்வேனென்றபோதே ஸித்தோபாய நிஷ்டை குலைந்ததாமிறே. ... ... ... ... *

... ... ... மற்றேனக்கிங்கு
ஆராய்வா ரில்லை அழல்வாய் மெழுகுபோல்
நீரா யுருகுமென் னாவி நெடுங்கண்கள்
ஊரா ருறங்கிலுந் தானுறங்கா வுத்தமன்றன்
பேரா யினவே பிதற்றுவன் பின்னையும்
காரார் கடல்போலுங் காமத்த ராயினார்
ஆரே பொல்லாமை யறிவார்......—

பதவுரை

| | |
|---|---|
| எனக்கு இங்கு ஆராய்வார் மற்று இல்லை | என்னைப்பற்றிக் கவலை கொண்டு விசாரிப்பவர்கள் இங்குயாருமில்லை |
| என் ஆவி | எனது ஆத்மவஸ்து |
| அழல் வாய் மெழுகு போல் நீர் ஆய் உருகும் | நெருப்பினருகே வைத்த அரக்குப் போல்நீர்ப்பண்டமாக உருகா நின்றது, |
| நெடு கண்கள் தான் | நீண்ட கண்களும் |
| ஊரார் உறங்கிலும் உறங்கா | எல்லாரும் உறங்கும் போதிலும் உறங்கமாட்டா; |
| உத்தமன் தன் | அப்புருஷோத்தமனுடைய |
| பேர் ஆயினவே | திருநாமங்களாயுள்ளவற்றையே |
| பின்னையும் | மேன்மேலும் |
| பிதற்றுவன் | வாய்வந்தபடி சொல்லிக்கொண்டிரா நின்றேன்; |
| கார் ஆர் கடல் போலும் காமத்தர் ஆயினார் | அகாதமான கடல் போல அளவு கடந்த காமத்தையுடையவர்கள் |
| ஆரே பொல்லாமை அறிவார் | ஆர்தான் ஸ்வரூப விரோதமறிவர்கள்? |

* * *—ஆற்றாமை கரைபுரண்டால் சிலபேரோடே ஸல்லாபங்கள் செய்து ஒருவாறு தரித்திருக்க வேண்டாவோ? இப்படி பதறலாமோ? என்று சிலர் சொல்ல, அவர்கட்கு மறுமொழி கூறுகின்றாள் பரகாலநாயகி. என் வார்த்தைகள் யாருக்கும் பிடிக்க மாட்டாவாகையால் என்னோடு உசாவ ஆரும் வரமாட்டார்கள்; என்பேரைச் சொன்னாலும் காதை மூடிக்கொள்வர்கள்; * உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத்துக்கும் * உண்ணுஞ்சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணனென்றிருக்கு மெனக்கும் என்ன சேர்த்தியுண்டு? என்னெஞ்சம் எனக்கு உதவாதிருக்க வேறு உசாத்துணை யாவருண்டோ? நெருப்பினருகே வைத்த மெழுகுபோலே சிதிலமாகாநின்றது ஆத்மவஸ்து; உபேக்ஷித்தாரைப்போலே உறங்கியாகிலும் ஆற்றலாமென்று பார்த்தாலு எல்லாரு முறங்கினாலும் என் கணகள் உறங்குகின்றில. இவ்வளவு ஆபத்காலத்திலே வந்து முகங்காட்டி உதவாதவனை மறந்திருக்க வேணுமே, அதுவும் மாட்டாதபடி அவனது திருநாமங்களையே வாய்வெருவா நின்றேன்.

இப்பரகாலநாயகி இப்படி சொல்லச் செய்தேயும் சிலர் ஸ்வரூபசிக்ஷைபண்ணத் தொடங்கினர்; அவர்களை நோக்கிச் சொல்லுகின்றாள்—"ஸ்ரீஜநகராஜன் திருமகள் பத்து மாஸம் ஆறியிருந்தாப்போலே நீயும் ஆறியிருக்கவேண்டாவா? அப்படியிராமல் பதறினால் ஸ்வரூபஹாநியன்றோ" என்றுதானே நீங்கள் சொல்லுவது; ஸ்வரூபஹாநியை நினைத்து ஆறியிருப்பவர்கள் மட்டமான காமமுடையவர்களென்று கொள்ளுங்கள்; காரார்ந்த திருமேனியைக் காணவேணு மென்னுமாசை கரைபுரண்டிருப்பார்க்கு ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ஆறியிருக்கப்போமோ? அப்படி ஆறியிருந்தவர்களுண்டாகில் அவர்களுடைய காதல் அல்பம் என்றன்றோ கொள்ளவேண்டும்—என்கிறாள். ... ... ... ... ... *

... ... ... அது நிற்க
ஆரானு மாதானு மல்ல ளவள்காணீர்
வாரார் வனமுலை வாசவ தத்தையென்று
ஆரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன்

வேமெனவழங்கெழுத்தே, கொத்துறுபவத்தைக்கூறும் கடவெனக் கூறிரண்டாகு, சுத்தவக்கரம் கொளுத்தப் படுமெனச் சொல்வர் மேலோர்” என்றும், “வெங்கொடும்பவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல், மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கடமலையான தென்று” என்றுமுள்ள புராணச் செய்யுள்கள் காண்க. அன்றி, **வேம்** என்பது அழிவின்மை; **கடம்** என்பது ஐச்வர்யம்; அழிவில்லாத ஐச்வரியங்களைத் தன்னையடைந்தார்க்குத் தருதலால் வேங்கடமெனப்பெயர் கொண்ட தென்றலுமுண்டு. ... ...

மன்னனை மாலிருஞ் சோலை மணாளனைக்
கொன்னவிலு மாழிப் படையானைக் கோட்டியூர்
அன்ன வுருவி னரியைத் திருமெய்யத்து
இன்னமுத வெள்ளத்தை யிந்தளூ ரந்தணனை
மன்னு மதிட்கச்சி வேளுக்கையாளரியை
மன்னிய பாடகத்தெம் மைந்தனை வெஃகாவில்
உன்னிய யோகத் துறக்கத்தை......—

| | |
|---|---|
| மன்னனை | ஸர்வேச்வரனாய் |
| மாலிருஞ் சோலை மணாளனை | திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளியிருக்கிற மணவாளப் பிள்ளையாய் |
| கொல் நவிலும் ஆழி படையானை | பகைவரைக் கொல்ல வல்ல திருவாழியை ஆயுதமாகவுடையனாய் |
| கோட்டியூர் | திருக்கோட்டியூரில் |
| அன்ன உருவின் அரியை | அப்படிப்பட்ட [விலக்ஷணமான] திருமேனியையுடைய நரஸிம்ஹமூர்த்தியாய் |
| திரு மெய்யத்து | திருமெய்ய மலையில் |
| இன் அமுதம் வெள்ளத்தை | இனிதான அம்ருத ப்ரவாஹம் போல் பரம போக்யனாய் |
| இந்தளூர் | திருவிந்தளூரில் |
| அந்தணனை | பரமகாருணிகனாய் |
| மன்னு மதிள் | பொருந்திய மதிள்களையுடைய |
| கச்சி | காஞ்சீநகரத்தில் |
| வேளுக்கை ஆளரியை | வேளுக்கை யென்கிற தலத்திலுள்ள ஆளழகியசிங்கராய் |
| பாடகத்து மன்னிய எம் மைந்தனை | திருப்பாடகத்தில் நித்யவாஸம் பண்ணுகிற எமது யுவாவாய், |
| வெஃகாவில் | திரு வெஃகாவில் |
| உன்னிய யோகத்து உறக்கத்தை | ஜாகரூகனுகவே யோகநித்ரை செய்பவனாய். |

* * *—மாலிருஞ்சோலை="ஆயிரம்பூம் பொழிலுமுடை மாலிருஞ் சோலையதே" என்றபடி மிகப்பெரிய பல சோலைகளையுடைய மலையாதலால் மாலிருஞ்சோலை யென்று திருநாமம். உயர்ந்து பரந்த சோலைகளையுடைய மலை. வநகிரி எனப்படும் கோட்டியூர்=ஹிரண்யாஸுரன் மூவுலகத்தையும் ஆட்சி செய்த காலத்தில் தேவர்கள் அவ்வஸுரனை யொழிப்பதற்கு உபாயத்தை ஆலோசிப்பதற்கு ஏற்றதாய் அஸுரர்களின் உபத்ரவமில்லாததான இடத்தைத் தேடுகையில் கதம்ப முனிவரது சாபத்தால் 'துஷ்டர் ஒருவரும் வரக்கூடாது' என்று ஏற்பட்டிருந்த இந்த க்ஷேத்ரம் அவர்கள் கூட்டமாக இருந்து ஆலோசிப்பதற்கு ஏற்ற இடமாயிருந்த காரணம் பற்றி இத்தலத்திற்கு கோஷ்டீபுரம் என்று வடமொழியில் திருநாமம்; அதுவே கோட்டியூரெனத் தமிழில் வழங்குகிறது. அன்னவுருவினரியை="வண்கையினார்கள் வாழ்திருக்கோட்டியூர் நாதனை நரசிங்கனை" என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரங்காண்க. தெக்காழ்வாரைக் குறித்தபடி.

திருமெய்யம்=ஸத்ய தேவதைகள் திருமாலை நோக்கித் தவஞ் செய்த தலமானது பற்றி இத்திருமலை ஸத்யகிரி யென்றும் எம்பெருமான் ஸத்யகிரிநாத ரென்றும் பெயர் பெறுவர். ஸத்யகிரி யென்ற அச் சொல்லே திருமெய்யமலை யென்றும், அத்திருப்பதி திருமெய்ய மென்றும் வழங்கப் பெறும்.

இந்தளூர்=சந்திரன் தனது சாபம் நீங்கப்பெற்ற தலமாதலால் திருவிந்தளூரென்று திருநாமமாயிற்றென்பர். இந்துபுரீ எனப்படும். ஸுகந்தவநம் என்றொரு திருநாமமும் வழங்குகின்றது. அந்தணனை="அந்தணரென்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" (திருக்குறள்) என்றபடி அழகிய தண்மையையுடையவனென்று பொருளாய், பரமகாருணிகனென்றதாம். "அறவனை ஆழிப்படை அந்தணனை" என்றார் நம்மாழ்வாரும்.

வேளுக்கை=காஞ்சிபுரத்திலுள்ள திருப்பதிகளில் ஒன்று. 'வேள் இருக்கை' என்பது மருவிற்றுப் போலும். வேள்—ஆசை; எம்பெருமான் தனது ஆசையினாலே வந்திருக்கும் தலம் என்றவா

ரும். இத்திவ்ய தேசத்தைப்பற்றி ஸ்ரீ வேதாந்த தேசிகன் அருளிச் செய்த காமஸிகாஷ்டகம் என்ற ஸ்தோத்ரத்தில் "காமாத் அதி வஸந் ஜீயாத் கச்சித் அத்புத கேஸரீ" என்றமையால் வேளுக்கை யென்பதற்கு இங்ஙனே பொருளாமென்று தோன்றுகிறது. 'காமா ஸிகா' என்பதன் அர்த்தமும் இதுவேயாம்; காமேந ஆஸிகா = தன் ஆசையினாலே இருக்குமிடம். ஆளரியை = ஆளழகியசிங்கர்ஸந்நிதி என்று வ்யவஹரிக்கப்படும்.

பாடகம் = பெரியகாஞ்சீபுரத்திலுள்ள பாண்டவ தூதர் ஸந் நிதி. 'பாடு அகம்' என்று பிரிக்க. பெருமைதோற்ற எழுந்தருளி யிருக்கும் தலம் என்கை. கண்ணன் பாண்டவதூதனாய்த் துரி யோதனனிடஞ் சென்றபொழுது துர்யோதனன் ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறை யொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள் ளேயிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற்பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸந மொன்றை அமைத்து அவ்வாஸனத்தில் கண்ணனை வீற்றிருக்கச் சொல்ல, அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணன் அதன்மேல் ஏறின மாத்திரத் திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆசனம் உள்ளிறங்கிப் பிலவ றையிற் செல்லுமளவில், அப்பெருமான் மிகப்பெரிதாக விச்வரூப மெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங் கொண்டு எதிர்க்கவே அப் பிலவறையிலிருந்த மல்லர்கள் அழிந்தனர். அப்போது கொண்ட விச்வரூபத் திருக்கோலத்திற்கு ஸ்மாரகமாகப் பெரிய திருமேனி யோடே ஸேவை ஸாதிக்குமிடம் பாடகம். பாடு—பெருமை. ("அரா வுநீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை அஞ்சிடாதேயிட வுதற்குப், பெரியமாமேனி அண்டமூடுருவப் பெருந்திசை அடங் கிட நிமிர்ந்தோன்" என்ற பெரியதிருமொழிப் பாசுரத்தில் அநுஸந் திக்கப்பட்ட திருமேனிவளர்த்தியோடே ஸேவை ஸாதிக்குமாறு காண்க.)

வெஃகா = கச்சியில் ஸ்ரீ யதோக்தகாரி ஸந்நிதி. இவ்வெம் பெருமான், பிரமன் செய்த வேள்வியை அழிக்க வந்த வேகவதிநதி யைத் தடுக்கும்பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கில் பள்ளி

கொண்டருளினவனாதலால், அப்பிரானுக்கு, வடமொழியில் 'வேகாஸேது' என்று பெயர்; அது தமிழில் 'வேகவணை' என்று மொழிபெயர்ந்து, அது பின் (நாகவணை யென்பது நாகணையென விகாரப்படுதல்போல) வேகணை என விகாரப்பட்டு, அது பின்னர் 'வெஃகணை' எனத்திரிந்து, தானியாகு பெயராய்த் தலத்தைக் குறித்து, அது பின்பு 'வெஃகா' என மருவி வழங்கிற்றென நுண்ணிதின் உணர்க. ... ... ... ... ... ...

... ... ... ஊரகத்துள்
அன்னவனை யட்ட புயகரத்தெம் மானேற்றை
என்னை மனங்கவர்ந்த வீசனை வானவர்தம்
முன்னவனை மூழிக் களத்து விளக்கினை
அன்னவனை யாதனூ ராண்டளக்கு மையனை
நென்னலை யின்றினை நாளையை நீர்மலைமேல்
மன்னு மறைநான்கு மானானைப் புல்லாணித்
தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில்
மன்னு மணிமாடக் கோயில் மணாளனை
நன்னீர் தலைச்சங்க நாண்மதியை நான்வணங்கும்
கண்ணனைக் கண்ண புரத்தானைத் தென்னறையூர்
மன்னு மணிமாடக் கோயில் மணாளனைக்
கன்னவில்தோள் காளையைக் கண்டாங்குக் கைதொழுது
என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான்
தன்னருளு மாகமும் தாரானேல் தன்னைநான்
மின்னிடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்விடத்தும்
தன்னடியார் முன்பும் தரணி முழுதாளும்
கொன்னவிலும் வேல்வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்
தன்னிலைமை யெல்லா மறிவிப்பன்......—

ஊரகத்துள் அன்னவனை { திருவூரகத்தில் விலக்ஷணனாய்

அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை { அட்டபுயகரதலத்திலுள்ள அஸ்மத் ஸ்வாமி சிகாமணியாய்

என்னை மனம் கவர்ந்த ஈசனை { எனது நெஞ்சைக் கொள்ளை கொண்ட தலைவனாய்

வானவர் தம் முன்னவனை { தேவாதிராஜனாய்

| | |
|---|---|
| மூழிக்களத்து விளக்கினை | திருமூழிக்களத்தில் விளங்குபவனாய் |
| அன்னவனை | இப்படிப்பட்டவனென்று சொல்ல முடியாதவனாய் |
| ஆதனூர் | திருவாதனூரில் |
| ஆண்டு அளக்கும் ஐயனை | ஸகல காலங்களுக்கும் நிர்வாஹகனான ஸ்வாமியாய் |
| நென்னலை இன்றினை நாளையை | நேற்று இன்று நாளை என்னும் முக்காலத்துக்கும் ப்ரவர்த்தகனாய், |
| நீர்மலை மேல் மன்னும் | திருநீர்மலையிலெழுந்தருளியிருக்கிற |
| மறை நான்கும் ஆனானை | சதுர்வேத ஸ்வரூபியாய் |
| புல்லாணி | திருப்புல்லாணியிலெழுந்தருளியிருக்கிற |
| தென்னன் தமிழை வடமொழியை | உபயவேத ப்ரதிபாத்யனாய் |
| நாங்கூரில் | திருநாங்கூரில் |
| மணிமாடக் கோயில் மன்னு மணாளனை | மணிமாடக் கோயிலில் நித்யவாஸம் பண்ணுகிற மணவாளப் பிள்ளையாய் |
| நல் நீர் தலைச் சங்கம் நாண்மதியை | நல்ல நீர்சூழ்ந்த தலைச்சங்கநாட்டிலுள்ள நாண்மதியப் பெருமாளாய் |
| நான் வணங்கும் கண்ணனை | நான் வணங்கத்தக்க கண்ணனாய் |

| | |
|---|---|
| கண்ணபுரத்தானை | திருக்கண்ணபுரத்துறைவானாய் |
| தென் நறையூர் மணிமாடக் கோயில் மன்னு மணாளனை | திருநறையூர் மணிமாடமென்று ப்ரஸித்தமான ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கிற மணவாளனாய் |
| கல் நவில் தோள் காளையை | மலையென்று சொல்லத்தக்க தோள்களையுடைய யுவாவாயுள்ள ஸர்வேச்வரனை |
| ஆங்கு கண்டு கை தொழுது | அவ்வவ்விடங்களில் கண்டு ஸேவித்து |
| என் நிலைமை எல்லாம் அறிவித்தால் | எனது அவஸ்தைகளை யெல்லாம் விண்ணப்பஞ் செய்து கொண்டால் |
| (அது கேட்டு) | |
| எம் பெருமான் | அப்பெருமான் |
| தன் அருளும் ஆகமும் தாரான் எல் | தனது திருவருளையும் திருமார்பையும் எனக்குத் தந்தருளானாகில் |
| தன்னை | அவ்வெம்பெருமானை |
| நான் | (அவனது செயல்களையெல்லாமறிந்த) நான் |
| மின் இடையார் சேரியிலும் | ஸ்த்ரீகள் இருக்கும் திரள்களிலும் |

| | | | |
|---|---|---|---|
| வேதியர்கள் வாழ்வு இடத்தும் | வைதிகர்கள் வாழு மிடங்களிலும் | | |
| தன் அடியார் முன்பும் | அவனது பக்தர்கள் முன்னிலையிலும் | நாடு அகத்தும் | மற்றும் தேசமெங்கும் |
| தரணி முழுது ஆளும் கொல் நவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும் | பூ மண்டலம் முழு வதையும் ஆள் கின்றவராயும் கொடிய படை களை யுடையவ ராயுமிருக்கிற அரசர்களுடைய ஸபைகளிலும் | தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன் | அவன் படிகளை யெல்லாம் பிரகாசப்படுத்தி விடுவேன். |

* * *—ஊரகம்=பெரியகாஞ்சீபுரத்திலுள்ள உலகளந்த பெருமாள் ஸந்நிதி. இத்தலத்தில் திருமால் உரக ரூபியாய் ஸேவை ஸாதிப்பதுபற்றி இத்திருப்பதிக்கு ஊரகம் என்று திருநாமமென் பர்; உரகம்—பாம்பு வடசொல்.

அட்டபுயகரம்—இத்தலத் தெம்பெருமானுக்கு எட்டுத் திருக் கைகள் உள்ளதுபற்றி அஷ்டபுஜன் என்று திருநாமமாய் அவன் எழுந்தருளியிருக்கின்ற கரம்—க்ருஹம் ஆதல்பற்றி அட்டபுயகர மென வழங்கப்படும். அட்டபுயவகரம் என்பதன் மரூஉ வென் பாருமுளர்.

என்னை மனங்கவர்ந்த வீசனை வானர்தம் முன்னவனை=வான வர்தம் முன்னவனென்று தேவாதிராஜனை பேரருளாளப் பெருமானைச் சொல்லுகிறதென்றும், "என்னை மனங்கவர்ந்த வீசனை" என்கிற விசேஷணம் இவ்வர்த்தத்தை ஸ்திரப்படுத்து கின்றதென்றும் பெரியோர் கூறுவர். திருமங்கையாழ்வாருடைய மனத்தைப் பேரருளாளன் கவர்ந்தானென்னுமிடம் இவரது வைபவத்திலே காணத்தக்கது. கனவிலே காட்சிதந்து வேகவதி யில் நிதியைக் காட்டித் துயர் தீர்த்த வரலாறு.

மூழிக்களம்=மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; நம்மாழ் வாராலும் போற்றப் பெற்ற தலம் "மூழிக்களத்து வளத்தினை" என்றும் பாடமுண்டாம்; வளமாவது ஸம்பத்து; ஸம்பத் ஸ்வ ரூபனை யென்றபடி. ஆதனூர்=ஆ தன் ஊர்—காமதேநுவுக்குப் பிரத்யக்ஷமான தலமாதல்பற்றி வந்த திருநாமமென்பர்; ஆ—பசு.

ஆண்டு அளக்குமையனை = ஆண்டு—வருஷம்; இது காலத்துக்கெல்லாம் உபலக்ஷணம்; ஸகல காலங்களையும் பரிச்சேதித்த ஸ்வாமி என்றபடி. காலசக்ரநிர்வாஹகனென்கை. நென்னல்—நேற்றுக் கழிந்தநாள்; இறந்த காலத்துக்கெல்லாம் உபலக்ஷணம். "ஆண்டளக்குமையன்" என்றதை விவரிக்கின்றார் மூன்று விசேஷணங்களாலே. பூத வர்த்தமாந பவிஷ்யத் காலங்களுக்கு நிர்வாஹகனென்றவாறு.

நீர்மலை = நீரானது அரண் போலச் சூழப்பெற்ற மலையானது பற்றித் திருநீர்மலை யெனப்படும். புல்லாணி = புல்லணை யென்பதன் மரூஉ; ஸீதையைக் கவர்ந்து சென்ற இராவணனைக் கொல்லும் பொருட்டு ஸ்ரீராமபிரான் வாநரஸேனையுடனே புறப்பட்டுச் சென்று தென்கடற்கரையை யடைந்து கடல்கடக்க உபாயஞ் சொல்லவேண்டுமென்று அக்கடலரசனான வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பத்தில் பிராயோபவேசமாகக் கிடந்த ஸ்தலமாதலால் புல்லணை யெனப்பட்டது. தர்ப்பசயந க்ஷேத்ரமெனவும் படும்.

தலைச்சங்க நாண்மதியை—சிறந்த சங்கத்தை யேந்திய நாண்மதியப் பெருமானையுடைய தலமாதல்பற்றித் தலைச்சங்க நாண்மதியமென்று திவ்யதேசத்தின் திருநாமம்.

கன்னவில் தோள்காளையை = கீழே "இதுவிளைத்த மன்னன்' என்று தொடங்கி இவ்வளவும் எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைப்பற்றிப் பேசினாராயிற்று. கீழே இரண்டாம் வேற்றுமையாக வந்த அடைமொழிகளெல்லாம் இங்கு அந்வயித்து முடிந்தன. இப்படிப்பட்ட எம்பெருமானை ஆங்காங்குச் சென்று ஸேவித்து "ஸ்வாமிந்! இப்படிதானோ என்னைக் கைவிடுவது? விரஹம் தின்றவுடம்பைப்பாரீர்" என்று என் அவஸ்தையை விண்ணப்பஞ் செய்வேன்; அதுகேட்டுத் திருவுள்ள மிரங்கித் திருமார்போடே என்னை அணைத்துக் கொள்ளாவிடில் மாதர்களும் வைதிகர்களும் பக்தர்களும் அரசர்களும் திரண்டுகிடக்குமிடங்கள்தோறும் புகுந்து அவனது ஸமாசாரங்களை யெல்லாம் பலரறிய விளம்பரப்படுத்துவேனென்றாராயிற்று.—ஆண்டாள் ஆய்ச்சிமார்போன்ற பெண்ணரசிகளும், பெரியாழ்வார் வ்யாஸர் பராசரர்போன்ற வைதிகர்களும்,

இளையபெருமாள் ப்ரஹ்லாதன்போன்ற பக்தர்களும், குலசேகரப் பெருமாள் தொண்டைமான் சக்ரவர்த்திபோன்ற அரசர்களும் இவனுடைய பெருமேன்மைகளைச் சொல்லிக்கொண்டு ப்ரமித்துக்கிடப்பர்களே; அங்கங்கெல்லாம் நான் சென்று அவனைப்போன்ற நிர்க்குணன் இவ்வுலகில் எங்குமில்லை" என்று பறையடித்து எல்லாரும் அவனைக் கைவிடும்படி பண்ணிவிடுகிறேன் பாருங்களென்கிறார்.

"லோகமடங்கத் திரண்டவிடங்களிலே சென்று 'ஸேச்வரம் ஜகத்து' என்று ப்ரமித்திருக்கிறவர்களை 'நிரீச்வரம் ஜகத்து' என்றிருக்கும்படி பண்ணுகிறேன்" என்ற வியாக்கியான ஸூக்தியுங் காண்க. ... ... ... ... ... ✲

... ... ... தான்முனநாள்
மின்னிடை யாய்ச்சியர்தம் சேரிக் களவின்கண்
துன்னு படல்திறந்து புக்குத் தயிர்வெண்ணெய்
தன்வயி றார விழுங்கக் கொழுங்கயல்கண்
மன்னு மடவோர்கள் பற்றியோர் வான்கயிற்றால்
பின்னு முரலோடு கட்டுண்ட பெற்றிமையும்

| | |
|---|---|
| முனம் நாள் | முற்காலத்தில் [கிருஷ்ணாவதாரத்தில்] |
| மின் இடை ஆச்சியர்தம் சேரி | மின்போல் நுண்ணிய இடையையுடைய இடைச்சிகளின் சேரியிலே |
| துன்னு படல் திறந்து | நெருக்கமாகக் கட்டிவைத்த படலைத்திறந்து |
| களவின்கண் புக்கு | திருட்டுத்தனமாகப் புகுந்து |
| தயிர் வெண்ணெய் | தயிரையும் வெண்ணெயையும் |
| தன் வயிறு ஆர தான் விழுங்க | தனது வயிறு நிறையும்படி வாரி யமுதுசெய்த வளவில் |
| கொழு கயல் கண் மன்னு மடவோர்கள் | நல்ல கயல்மீன் போன்ற கண்களையுடைய அவ்வாயர்மாதர் |
| பற்றி | பிடித்துக்கொண்டு |
| ஓர் வான் கயிற்றால் | ஒரு குறுங்கயிற்றால் |
| உரலோடு | உரலோடே பிணைத்து(க் கட்டிவிட) |
| கட்டுண்ட பெற்றிமையும் | (கட்டை யவிழ்த்துக்கொள்ளமாட்டாமல்) கட்டுண்டு கிடந்ததன்மையென்ன. |

* * *—என்னினைவைத் தலைக்கட்டாவிடில் அவனுடைய ஸமாசாரங்களையெல்லாம் தெருவிலே எடுத்து விடுகிறேனென்று கீழ்ப் பிரதிஜ்ஞை பண்ணினபடியே சிலஸமாசாரங்களை யெடுத்து விடத் தொடங்குகிறாள் பரகாலநாயகி.—“ கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப்பெற்றான், பற்றியுரலிடை யாப்புமுண்டான் பாவிகாளுங்களுக்கு ஏச்சுக்கொலோ? கற்றன பேசி வசவுணாதே” என்று—எம்பெருமானுடைய சரிதைகளை இழிவாகக் கூறி ஏசுமவர்களை வாய்புடைக்கவேண்டிய இவ்வாழ்வார் தாமே ஏசத்தொடங்குவது ப்ரணயரோஷத்தின் பரம காஷ்டையாகும். “ஏசியே யாயினும் ஈன்துழாய் மாயனையே பேசியே போக்காய் பிழை” என்பாருமுண்டே. குணகீர்த்தனங்களில் இதுவும் ஒரு ப்ரகாரமேயாகும். இவ்வாழ்வார்தாமே பெரியதிருமொழியில் பதினோராம்பத்தில் மானமருமென்னோக்கி என்னுந் திருமொழியில், இரண்டு பிராட்டிகளின் தன்மையை ஏககாலத்தில் அடைந்து முன்னடிகளால் இகழ்ந்துரைப்பதும் பின்னடிகளால் புகழ்ந்துரைப்பதுமாக அநுபவித்ததும் அறியத்தக்கது.

[தான்முனநாள் இத்யாதி.] இடைச்சிகளின் சேரியில் பிரவேசித்து, படல்மூடியிருந்த மனைகளிலே திருட்டுத்தனமாகப் படலைத் திறந்துகொண்டு புகுந்து தயிரையும் வெண்ணெயையும் வயிறு நிறைய விழுங்கினவளவிலே அவ்வாயர்மாதர் கண்டு பிடித்துக் கொண்டு உரலோடே இணைத்துக் கயிற்றாலே கட்டிப்போட்டு வைக்க ஒன்றுஞ் செய்யமாட்டாமல் அழுது ஏங்கிக்கிடந்தானே, இது என்றைக்கோ நடந்த காரியமென்று நான் விட்டுவிடுவேனோ? இவ்விழிதொழிலை இன்று எல்லாருமறிந்து ‘கள்ளப்பையலோ இவன்’ என்று அவமதிக்கும்படி செய்துவிடுகிறேன் பாருங்கள்—என்கிறாள். பெற்றிமையும், தேற்றேனவும், சென்றதுவும் என்கிற இவையெல்லாம் மேலே “மற்றிவைதான் உன்னி யுலவா” என்றவிடத்தில் அந்வயித்து முடிவுபெறும். இப்படிப்பட்ட இவனுடைய இழிதொழில்கள் சொல்லி முடிக்கப் போகாதவை என்றவாறு.

“தன் வயிறார” என்றவிடத்து “திருமங்கையாழ்வாரைப் போலே பரார்த்தமாகக் களவு காண்கிறதன்று” என்ற பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்க.

வான்கயிறு என்றது எதிர்மறையிலக்கணையினால் குறுங்கயிறு என்று பொருள்படும்; * கண்ணிநுண் சிறுத்தாம்பினாலிறே கட்டுண்டது. ... ... ... ... ... ...

அன்னதோர் பூதமா யாயர் விழவின்கண்
துன்னு சகடத்தால் புக்கபெருஞ்சோற்றை
முன்னிருந்து முற்றத்தான் துற்றிய தெற்றெனவும்.

| | | | |
|---|---|---|---|
| ஆயர் விழவின் கண் | இடையர்கள் (இந்திரனுக்குச்செய்த) ஆராதனையில் | முன் இருந்து | கண் முன்னே யிருந்துகொண்டு |
| துன்னு சகடத்தால் புக்க பெரு சோற்றை | பலபல வண்டிகளால் கொண்டு சேர்த்த பெருஞ் சோற்றை | முற்ற | துளிகூட மிச்சமாகாதபடி |
| | | தான் | தானொருவனாகவே |
| அன்னது ஓர் பூதம் ஆய் | வருணிக்க முடியாதவொரு பெரும் பூதவடிவு கொண்டு | துற்றிய | உட்கொண்ட |
| | | தெற்றெனவும் | வெட்கக்கேடென்ன. |

* * *—திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங் கூடி வழக்கப்படி இந்திரனை ஆராதிப்பதற்கென்று சமைத்துப் பல வண்டிகளிற் கொணர்ந்து பெருந்திரளாகக் குவித்த சோற்றை ஒருகால் கண்ணபிரான் அவனுக்கு இடவொட்டாமல் விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடச் சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அமுதுசெய்தருளினன் என்பது கதை. "ஆயிரங் கண்ணுடையிந்திரனுக்கென்று ஆயர்விழவெடுப்பப், பாசன நல்லன பண்டிகளாற் புகப்பெய்தவதனை யெல்லாம், போயிருந்தங்கொரு பூதவடிவுகொண்டு உன் மகனின்று நங்காய், மாயனதனை யெல்லாம் முற்றும் வாரிவளைத்துண்டிருந்தான்போலும்" (பெரிய திருமொழி 10—7—7.) என்ற பாசுரங்காண்க. "அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமுந் தயிர் வாவியும் நெய்யளறு மடங்கப் பொட்டத் துற்று" என்றார் பெரியாழ்வாரும்.

துன்னு சகடத்தால்புக்க = சிலர் தலைமேலே சுமந்துகொண்டு போய்க் கொட்டின சோறன்று; பல்லாயிரம் வண்டிகளில் ஏற்றிக் கொண்டுபோய்ப் பெரிய மலைபோலே கொட்டிவைத்த பெருஞ்

சோறு; இவற்றையெல்லாம் ஒரு திரை வளைத்துக்கொண்டாவது உண்டானோ? இல்லை; முன்னிருந்து உண்டான்; அதிலே சிறிது சோறு மிச்சமாம்படி உண்டானோ? இல்லை; முற்றத்துற்றினான்; உற்றாருறவினர்க்கும் சிறிது கொடுத்து உண்டானோ? அதுவுமில்லை; முற்றவும் தானே துற்றினான்; இப்படி வயிறுதாரித்தனம் விளங்கச் செய்த செயலுக்குச் சிறிது வெட்கமாவது பட்டானோ? அதுவுமில்லை; இப்படிப்பட்ட வெட்கக்கேடான செய்தியைத் தெருவேறச் சொல்லிக்கொண்டுபோய் "வயிறுதாரிப் பையலோ இவன்!" என்று எல்லாரும் அவமதிக்கும்படி செய்துவிடுகிறேன் பாருங்கள்—என்கிறாள்.

பூதம், சகடம்—வடசொற்கள் தேற்றெனவு=தெளிவு; அதாவது வெட்கமில்லாமையென்று இங்கே விவக்ஷிதம். ... *

மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதனாய்
தன்னை யிகழ்ந்துரைப்பத் தான்முனநாள் சென்றதுவும்.

| | | | |
|---|---|---|---|
| முனம் நாள் | முன்னொரு காலத்தில் | மன்னர் பெரு சவையுள் சென்றதுவும் | (துரியோதநாதி) அரசர்களுடைய பெரிய ஸபையிலே சென்றதென்ன. |
| வாழ் வேந்தர் தூதன் ஆய் | பாண்டவர்களுக்குத் தூதனாய் | | |
| தன்னை இகழ்ந்து உரைப்ப | (கண்டாரடங்கலும்) இழிவாகச் சொல்லும்படியாக | | |

* * *—கண்ணபிரான், பாண்டவர்களையும் துர்யோதநாதிகளையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதநாதியரிடம் தூது சென்ற வரலாறு ப்ரஸித்தமேயாம். "கோதைவேல் ஐவர்க்காய் மண்ணகலங் கூறிடுவான், தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான்" என்கிற இவ்விழிதொழிலை நாடறியச்சொல்லி 'ஒரு வேலைக்காரப் பையலோ இவன்' என்று எல்லாரும் அவமதிக்கும்படி செய்துவிடுகிறேன் பாருங்கள்—என்கிறாள். ... ... *

மன்னு பறைகறங்க மங்கையர்தம் கண்களிப்பக்
கொன்னவிலும் கூத்தனாய்ப் போர்த்தும் குடமாடி
என்னிவ னேன்னப் படுகின்ற வீடறவும்

| | | | |
|---|---|---|---|
| மங்கையர் தம் கண் களிப்ப | (இடைப்) பெண்களின் கண்களிக்கும்படி | பேர்த்தும் | மேன்மேலும் |
| மன்னு பறை கறங்க | (அரையிலே) கட்டிக்கொண்ட பறை ஒலிக்க | குடம் ஆடி | குடங்களை யெடுத்து ஆடி |
| கொல்நவிலும் கூத்தன் ஆய் | (பெண்களைக்) கொலை செய்கின்ற கூத்தை யாடுபவனாய் | என் இவன் என்னப் படுகின்ற ஈடறவும் | "இப்படியும் கூத்தாடுவா னொருவ னுண்டோ!" என்னும்படி பெற்ற சீர்கேடென்ன |

* * *—கண்ணபிரான் அரையிலே பறையைக் கட்டிக்கொண்டு குடக்கூத்தாடுவது சாதிவழக்கத்தை அநுஸரித்த ஒரு காரியம். அந்தணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகம் செய்வதுபோல இடையர்க்குச் செல்வம் மிகுந்தால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாகக் குடக்கூத்தாடுவர்கள். கண்ணபிரானும் சாதி மெய்ப்பாட்டுக்காக "குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்ல எங்கோவே" என்றபடி அடிக்கடி குடக்கூத்தாடுவது வழக்கம். தலையிலே அடுக்குக்குடமிருக்க, இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க, இருகையிலுங் குடங்களை ஏந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து இது என்பர். இதனைப் பதினோராடலிலொன்றென்றும் அறுவகைக் கூத்திலொன்றென்றும் கூறி, "குடத்தாடல் குன்றெடுத்தோனாடலதனுக் கடைக்குப வைந்துறுப் பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார்.

இவன் சில பெண்களைப் பிச்சேற்றுவதற்காகக் கூத்தாடினபடியைப் பலருமறியப்பேசி, "கூத்தாடிப் பையலோ இவன்!" என்று எல்லாரும் அவமதிக்கும்படி செய்துவிடுகிறேன் பாருங்கள் என்றாளாயிற்று.

ஈடறவு—சீர்கேடு. ஈடு—பெருமை; அஃது இல்லாமை—அற்பத்தனம். வீடறவும் என்று பிரித்து, கூத்தினின்றும் மீளாமை என்று சிலர் சொல்வது ஏலாது. ... ... ... *

* தென்னிலங்கை யாட்டி யரக்கர் குலப்பாவை
மன்ன னிராவணன்றன் நல்தங்கை வாளெயிற்றுத்
துன்னு சுடுசினத்துச் சூர்ப்பணகாச் சோர்வெய்திப்
பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால்
தன்னை நயந்தாளைத் தான்முனிந்து மூக்கரிந்து
மன்னிய திண்ணெனவும்......—

| | |
|---|---|
| தென் இலங்கை யாட்டி | தென்னிலங்கைக்கு அரசியும் |
| அரக்கர் குலம் பாவை | ராக்ஷஸ குலத்தில் தோன்றிய பதுமை போன்றவளும் |
| மன்னன் இராவணன் தன் நல் தங்கை | பிரபுவாகிய இராவணனது அன்புக்குரிய தங்கை யானவளும் |
| வாள் எயிறு | வாள்போன்ற பற்களையுடையவளும் |
| துன்னு சுடு சினத்து | எப்போதும் (எதிரிகளைச்) சுடக்கடவதான கோபத்தை யுடையவளுமான |

| | |
|---|---|
| சூர்ப்பணகா | சூர்ப்பணகை யென்பவள் |
| புலர்ந்து எழுந்த காமத்தால் | அதிகமாக வுண்டான காமநோயினால் |
| பொன் நிறம் கொண்டு | வைவர்ண்ய மடைந்து |
| சோர்வு எய்தி | பரவசப்பட்டு [தளர்ந்து] |
| தன்னை நயந்தாளை | தன்னை ஆசைப்பட, அந்த அரக்கியை |
| தான் முனிந்து | தான் சீறி |
| மூக்கு அரிந்து | மூக்கையறுத்து |
| மன்னிய திண்ணெனவும் | இதையே ஒரு ப்ரதிஷ்டையாக நினைத்துக் கொண்டிருப்பதென்ன. |

* * *—சூர்ப்பணகையை அங்கபங்கஞ்செய்தது இளையபெருமாளாயினும் இதனைப் பெருமாள் செயலாகவே கூறுதலும் உண்டு. "சூர்ப்பணகாவைச் செவியோடு மூக்கு அவளார்க்க அரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப் பாடிப்பற" என்றார் பெரியாழ்வார்; "மலைபோலுருவத் தொரிராக்கதி மூக்கு அரிந்திட்டவன் காண்மின் இன்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே" என்றார் இத்திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில். இளையபெருமாளைச் சொல்லுமிடத்து வால்மீகி முனிவர் [ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:] என்றார்; அதாவது—லக்ஷ்மணனை ஸ்ரீராமபிரானது வலக்கையாகக் கூறினர். ஆகையால் சூர்ப்பணகா பங்கத்தைப் பெருமாளது செயலாகக் கூறுவது பொருந்துமென்க. தன் கையாலேயிறே தண்டித்தது.

"ஆவீறையும்" என்ற நன்னூல் விதிப்படி 'சூர்ப்பணகை' எனத் திரியவேண்டியிருக்க அங்ஙனந் திரியாது 'சூர்ப்பணகா' என்று ஆவீறாகவே நின்றது—புதியனபுகுதல் எனலாம்; "பழையன கழிதலும் புதியனபுகுதலும், வழுவல காலவகையினானே" என்றார் நன்னூலார்.

தன்னை ஆசைப்பட்டு வந்தவளை ஏதோ நல்வார்த்தை சொல்லிப் போகவிடாமல் ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவனாய் அங்க

பங்கஞ் செய்துவைத்து அனுப்பினவன் காண்மின் என்று தெரு வேறச்சொல்லி " ஸ்த்ரீகளை அநியாயம் பண்ணுகிறவனே இவன் " என்று எல்லாரும் அவமதிக்கும்படி செய்துவிடுகிறேன் பாருங்கள்—என்றுளாயிற்று.

பொன்னிறங்கொண்டு=காமநோயுடையார்க்கு உடல் விவர்ணப்படுங்காலத்து அந்த நிறம் பொன்னிறமெனப்படும். " அபிமதம் பெறாமையாலே விவர்ணமான உடம்பையுடையளாய் " என்பது வியாக்கியானம். புலர்ந்தெழுந்த காமத்தால்=புலர்தல் என்பதற்கு, காய்தல் வாடல் விடிதல் என்று பல பொருள்களுண்டு; இங்கு விடிதல் என்று பொருளாய் உதயமாகி வளர்ந்த காமத்தினால் என்றதாம். மன்னிய திண்ணெனவும்=' ஸ்த்ரீவதம் பண்ணினால் அநுதாபமுமின்றிக்கே பெரிய ஆண்பிள்ளைத்தனம் செய்ததாக நினைத்திருக்கிற நிலைநின்ற த்ருடத்வமும் " என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. ... ... ... ... ...

... ... வாய்த்த மலைபோலும்
தன்னிகரொன் றில்லாத தாடகையை மாமுனிக்காத்
தென்னுலக மேற்றுவித்த திண்டிறலும் மற்றிவைதான்
உன்னி யுலவா வுலகறிய வூர்வன்நான்
முன்னி முளைத்தெழுந் தோங்கி யொளிபரந்த
மன்னியபூம் பெண்ணை மடல்.

## பெரிய திருமடல் முற்றிற்று.

| | |
|---|---|
| வாய்த்த மலை போலும் | பெரியமலை போன்ற உருவமுடையளும் |
| தன் நிகர் ஒன்று இல்லாத | (கொடுமையில்) ஒப்பற்றவளுமான |
| தாடகையை | தாடகை யென்பவளை |
| மா முனிக்கா | விச்வாமித்ர முனிவர்க்காக |
| தென் உலகம் ஏற்றுவித்த | யமலோக மடைவித்த |
| திண் திறலும் | மிக்க பராக்ரமமென்ன |
| மற்று இவை தான் | இப்படியாகவுள்ள மற்றும் பல செய்கைகளும் |
| உன்னி உலவா | நினைத்து முடியமாட்டா [வாசாமகோசரம்]; |
| உலகு அறிய | அப்படிப்பட்ட சேஷ்டிதங்களையெல்லாம் உலகத்தாரறியும்படி பிரசுரப்படுத்திக் கொண்டு |
| நான் | பரகாலநாயகியாகிய நான் |
| முன்னி முளைத்து எழுந்து ஓங்கி ஒளி பரந்த மன்னிய பூ பெண்ணை மடல் ஊர்வன் | முன்னே முளைத்து எழுந்து வளர்ந்து விளங்குகின்ற சிறந்த அழகிய பனைமடலைக் கொண்டு மடலூரக்கடவேன். |

* * *—தாடகை—ஸுகேது வென்னும் யக்ஷனுடைய மகள்; ஸுந்தனென்பவனுடைய மனைவி; ஆயிரம் யானை வலிமைகொண்டவள்; கணவன் அகஸ்த்ய மஹாமுனியின் கோபாக்நிக்கு இலக்காகி நீறுயொழிந்ததையறிந்த இவள் தன் புத்திரர்களாகிய ஸுபாஹு மாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச் சென்றபொழுது அவனிட்ட சாபத்தால் தன் மக்களோடு ராக்ஷஸத் தன்மையடைந்தனள். பின்பு முனிவர்களுடைய யாகாதிகளைக் கெடுக்கின்ற இவர்களையழித்துத் தன் வேள்வியைக் காக்கும் பொருட்டு விச்வாமித்ர முனிவன் தசரத சக்ரவர்த்தியினிடம் அநுமதி பெற்று இளம்பிராயமுடைய ஸ்ரீராம லக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு போனபொழுது அம்முனிவனது ஆச்ரமத்துக்குச் செல்லும் வழியிடையே வந்து எதிர்த்த தாடகையை ஸ்ரீராமன் முனிவனது கட்டளைப்படி பெண்ணென்று பாராமற் போர்செய்து கொன்றனன் என்ற வரலாறு அறிக.

சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்து உயிரோடாவது விட்டிட்டான்; தாடகையை உயிர்க்கொலையே செய்துவிட்டான்; இப்படி ஸ்த்ரீஹத்தி பண்ணுவதே இவனுடைய பராக்ரமத்துக்குப் போக்குவீடு; பெண்களைக் கொலைசெய்து தன்னை மஹாபலசாலியாக நினைத்துச் செருக்குற்றிருக்குமிவனுடைய இந்த அழகான பராக்ரமத்தை நாடறியச்சொல்லி "இதுவோ இவனுடைய ஸமர் சாரம்!" என்று எல்லாரும் இழிவாக நினைக்கும்படி பண்ணிவிடுகிறேன் பாருங்கள்—என்றுளாயிற்று.

திண்திறலும்—ஒரு பெண்பெண்டாட்டியைக் கொலைசெய்து விடுவது ஒரு பராக்ரமமோ! என்று ஏசுகின்றவாறு.

மற்றிவைதான் உன்னி உலவா—ஸ்ரீராமாயணம், ஸ்ரீபாகவதம், மஹாபாரதம் முதலியவற்றில் இப்படிப்பட்ட இழிதொழில்கள் எவ்வளவோ சொல்லப்பட்டுள்ளன; அவற்றுக்குக் கங்குகரையில்லை; அவை என்னால் சொல்லிமுடிக்கப் போகாதவை. முடிந்தவரையில் சிலவற்றையெடுத்துச் சொல்லிக்கொண்டு தெருவேற மடலூர்ந்து செல்வேன் என்று தலைக்கட்டினளாயிற்று

பெண்ணை என்று பனைமரத்துக்குப் பெயர்; "முன்னிமுளைத் தெழுந்தோங்கி யொளிபரந்தமன்னியபூம் பெண்ணைமடல்" என்று

பனைமடலைச் சிறப்பித்துச் சொன்னது—என் கையிலே சிறந்த ப்ரஹ்மாஸ்த்ர மிருக்கிறபடி பாருங்கள்; இனி எனக்கு என்ன குறை? என் காரியம் கைபுகுந்ததேயாம் என்று தான் பரிக்ரஹித்த ஸாதநத்தின் உறைப்பைக் காட்டினபடி. ... ...

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

முடிவில் அநுஸந்திக்கும் தனிப்பாடல்.

கம்பர் பாடியது.

நேரிசை வெண்பா.

என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான்
தன்னருளு மாகமுந் தாரானேல்—பின்னைப்போய்
ஒண்டுறை நீர்வேலை யுலகறிய வூர்வன்நான்
வண்டுறைபூம் பெண்ணை மடல்.

(இதன் கருத்து.) எம்பெருமானிடத்தில் போய் என்னுடைய அவஸ்தைகளை யெல்லாம் அறிவித்த பின்பும் அவன் திருவுள்ள மிரங்கித் திருமார்போடே அணைத்துக் கொள்ளாவிடில், கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்திலுள்ளாரனைவரும் அறியும்படியாக அழகிய பனைமட்டையைக் கையிற்கொண்டு மடலூரக் கடவேனென்று பரகாலநாயகி சொல்லுகிற பாவனையாகவே இப்பாடல் பாடப்பட்டதென்க.

பெருமாள் கோயில் ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
பெரிய திருமடல் திவ்யார்த்த தீபிகை
முற்றுப் பெற்றது.

ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த
ப்ரபந்ந காயத்ரி என்னும்

# இராமாநுச நூற்றந்தாதி.

[இயற்பாவின் சரம ப்ரபந்தம்.]

பெருமாள்கோயில்
ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி
அருளிய
"திவ்யார்த்த தீபிகை" யென்னும்
உரையுடன்,

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை" ஆபீஸாரால்,
சென்னை, மாடல் அச்சுக்கூடத்தில்,
பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

சுக்கில௵
1929.

## ஸ்ரீமத். உ. வே. (காஞ்சீபுரம்) ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்கள்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி விரிவுரை | ... | 3 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| நாச்சியார் திருமொழி விரிவுரை | ... | 1 | 8 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 12 |
| பெருமாள் திருமொழி விரிவுரை | ... | 1 | 4 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 8 |
| திருச்சந்த விருத்தத்தின் ஷை | ... | 1 | 10 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| பெரிய திருமொழி விரிவுரை 1,2 பத்துக்கள் | ... | 3 | 0 |
| முதல் திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 8 |
| இரண்டாந்திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 4 |
| திருவெழுகூற்றிருக்கையும், திருமடல்களும் விரிவுரை | ... | 2 | 4 |
| திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஷை | ... | 2 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி ஷை | ... | 0 | 12 |
| கூரத்தாழ்வான் வைபவம் | ... | 0 | 4 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் (மூலத்துடன் கூடியது.) | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| முகுந்தமாலையின் தெளிவுரை | ... | 0 | 6 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை | ... | 0 | 12 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 0 |
| ஸுதர்சநசதகம் மிகத்தெளிவான தமிழுரை | ... | 1 | 0 |
| நமஸ்காரதத்துவம் | ... | 0 | 2 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் | ... | 0 | 3 |
| ப்ரணவாதிகாரதத்துவம் | ... | 0 | 4 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | ... | 0 | 2 |
| விதவாவபந வித்வம்ஸநம் | ... | 0 | 4 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்த லிபி) ஸம்ஸ்க்ருத பாஷை | ... | 0 | 6 |
| பாதுகாஸஹஸ்ராவதார தத்துவம் ஷை ஷை | ... | 0 | 4 |

## தெலுங்குலிபிப் பிரசுரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீவரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் இவற்றின் விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் | ... | 1 | 8 |
| அதிமாநுஷஸ்தவத்தின் ஷை | ... | 0 | 12 |
| திருப்பல்லாண்டு விரிவுரை | ... | 0 | 4 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் | ... | 0 | 3 |
| ரஹஸ்ய மூலம் | ... | 0 | 6 |

இன்னும் பல புஸ்தகங்களும் உள்ளன.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

---

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍॥

[ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 + 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍॥
𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 + 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇॥

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌃 + 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾॥

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 + 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍॥

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]



ஸ்ரீ:
எம்பெருமானார் திருவடிகளே சரணம்.
திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.

# இராமாநுச நூற்றந்தாதி.



இராமாநுசனது நூற்றந்தாதி என விரியும். இராமாநுசன் விஷயமாக அந்தாதித் தொடையாற் பாடப்பட்ட நூற்றுச்சொச்சம் பாசுரங்களை யுடையதொரு பிரபந்தம் என்பது பொருள். இத்தொடர்மொழியில் தொக்குநின்ற ஆறும் வேற்றுமையுருபின் பொருளாகிய ஸம்பந்தம்-விஷயமாகவுடைமை; விஷ்ணுபுராணம், சடகோபரந்தாதி என்பவற்றிற்போல. இராமாநுசனைப்பற்றிய நூற்றந்தாதி என விரித்தால், இரண்டாம் வேற்றுமை யுருபும் பொருளும் உடன்தொக்க தொகையாம். இராமாநுசன் + நூற்றந்தாதி; "சில விகாரமா முயர்திணை" (நன்னூல்) என்றதனால் நிலைமொழி யீற்றுமெய் கெட்டது; 'கம்பராமாயணம்' 'நளவெண்பா' என்பவற்றிற்போல. இராமாநுச னூற்றந்தாதி என்பாரு முளர்.

இராமாநுசன் என்பது, ராம அநுஜ என்ற இரண்டு மொழி சேர்ந்து தீர்க்கஸந்திபெற்றது. ராமனுடன் பிறந்தவன் என்று பொருள். ராமாவதார ஸமயத்திலே இத்திருநாமம் இளையபெருமாளுக்கு வழங்கிவந்தது; பின்பு திருமலைநம்பி நியமனமடியாக, ஸ்ரீவைஷ்ணவ தர்சந நிர்வாஹகராகத் திருவவதரித்தருளின உடையவர்க்கு இத்திருநாமமாயிற்று. இளையாழ்வார் என்று தமிழ்த் திருநாமம்; லக்ஷ்மண முநி, இத்யாதி திருநாமங்களும் பர்யாய நாமங்களாம். அவ்வாசிரியர் விஷயமான நூற்றந்தாதியாய்த்து இது.

அந்தாதி = அந்தத்தை ஆதியாக வுடையது; அன்மொழித் தொகை; வடமொழித்தொடர், தீர்க்கஸந்தி. அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது—முன்னின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்து

வரும் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல் மண்டலித்த லெனப்படும். இது தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாம். பதிற்றந்தாதி நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல் நூற்றந்தாதியாம். அதாவது—நூறு வெண்பாவினாலேனும் நூறு கட்டளைக் கலித்துறையினாலேனும் அந்தாதித் தொடையாற் கூறுவது. இத்திவ்யப்பிரபந்தம் நூறு பாசுரங்களுக்குமேல் அதிகமாக எட்டுப் பாசுரங்கள் கொண்டதாயினும் நூற்றந்தாதி யென்னத் தட்டில்லை; நூறு ஆயிரம் முதலிய பெரிய எண்களுக்குப் பத்தெட்டு குறையினும் மேற்படினும் அவை நூறு ஆயிரம் என்னத் தகுந்தவையேயாம். ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்கள்கொண்ட திருவாய்மொழியைத் 'திருவாய்மொழி யாயிரம்' என்றும், ஆயிரத்தெண்பத்தினாலு பாசுரங்கள்கொண்ட பெரிய திருமொழியைத் 'திருமொழி யாயிரம்' என்றும் அருளிச்செய்திருப்பது காண்க. யதிராஜ ஸப்ததி, வரவரமுநி சதகம் என்ற வடமொழி நூல்களிலும் அதிகமாக நாலைந்து ச்லோகங்களும் ஏழெட்டு ச்லோகங்களும் உள்ளமை காண்க. இங்ஙன் அதிகமாக இருப்பதுபோல் குறைவாயிருத்தலுமுண்டு;—"வாணனாயிரந் தோள்துணித்த" என்று ஆழ்வார்கள் பலவிடங்களிலு மருளிச் செய்கிறார்கள்; பரமசிவனது பிரார்த்தனைக்கிணங்கி எம்பெருமான் வாணனை நாலு கைகளோடும் உயிரோடும் விட்டருளினனாகப் புராணங்கள் கூறுகின்றமை அறியத்தக்கது. 'நாலாயிர திவ்யப்ரபந்தம்' என்ற வ்யவஹாரத்தின் தத்துவமும் உய்த்துணரத்தக்கது.

இப்பிரபந்தத்தில் நூற்றெட்டுப் பாசுரங்கள் அமைந்ததற்கும், பாட்டுத்தோறும் இராமாநுசத் திருநாமம் தட்டாமல் அநுஸந்திக்கப்பட்டிருப்பதற்கும் பெரியோர் ஒரு காரணங் கூறுவர்,— எம்பெருமானார் திருவடிகளில் அன்பு பூண்டவர்கட்கு இப்பிரபந்தம் ஸாவித்ரிபோலே நித்யாநுஸந்தேயமாகவேணுமென்று பாட்டுத்தோறும் திருநாமத்தைவைத்து நூற்றெட்டுப் பாட்டாக அருளிச்செய்தார்—என்று. ப்ரபந்த ஸாவித்ரி என்றும் ப்ரபந்த காயத்ரி என்றும் இதனை நம்முதலிகள் வ்யபதேசித்துப் போருவர்கள்.

இப்பிரபந்தம் எம்பெருமானார் காலத்திலே அவதரித்ததாயி னும், பெரியபெருமாளால் அமுதனார்க்கு அருளப்பாடிட்டு எம் பெருமானாரால் திருச்செவி சார்த்தப்பட்டதாதலால் இது ஆழ் வார்களருளிச் செயல்களோடு சேர்த்து அநுஸந்திக்கலாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பின் ஆழ்வார் திவ்ய ப்ரபந்தங்கட்கு ஏற்பட் டுள்ள அநத்யயநம் இதற்கும் ஒக்கும்.

முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என்ற நான்கு ஆயிரங்களுள் நான்காவதான இயற்பாவில் சரமப் பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கும் இந்த நூற்றந்தாதி, ப்ரண வார்த்தமான முதலாயிரத்தோடு நம்மாழ்வார் விஷயமான பாகவத சேஷத்வத்தை ப்ரதிபாதிக்கும் கண்ணிநுண்சிறுத்தாம்பைச் சேர்த் தாற்போல, கைங்கரியத்தில் களையறுப்பதான இயற்பாவுடனே இதனைச் சேர்த்து அநுஸந்திக்கை பொருத்தமுடைத்தேயாம்.

(திருவரங்கத்தமுதனார் வரலாறு.)

இவ்வமுதனார், ஒரு பங்குனித்திங்களில் ஹஸ்த நக்ஷத்ரத்தில் மூங்கிற்குடியில் திருவவதரித்து, திருவரங்கம் பெரியகோயிலில் இருந்ததுவே காரணமாகப் பெரியகோயில் நம்பி என்று ப்ரஸித்த ராய் வாழ்ந்துவந்தார்.

[அஷ்டப்பிரபந்தம் செய்தருளினவரும் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவருமான "பிள்ளைப்பெருமாளையங்கார்" என்ப வர்க்கு இவர் திருத்தகப்பனார் என்று சிலரும், பாட்டனார் என்று சிலரும் சொல்லுவர்.]

இவர் ஸகல சாஸ்த்ரங்களையும் அதிகரித்து மஹா நிபுண ராய், தமக்குக் குலக்ரமமாகக் கிடைத்த ஸந்நிதி புரோஹித வ்ருத் தியையும் புராணபடந கைங்கர்யத்தையும் பெற்று மிகவும் ராஜஸ ராய்ச் செருக்குடன் வாழ்ந்துவரும் நாளிலே, உலகங்களை வாழ் விக்கத் திருவனந்தாழ்வானது திருவவதாரமாய்த் திருவவதரித்த எம்பெருமானார் தமது இயற்கையின்னருளாலே இவரைத்திருத் திப் பணிகொள்ளத் திருவுள்ளம்பற்றிக் கூரத்தாழ்வானுக்கு நிய மிக்க, ஆழ்வானும் அவரை அநுவர்த்தித்து ஞானச்சுடர் கொளு த்தி எம்பெருமானார் திருவடிக்கீழ்க் கொணர்ந்து சேர்க்க, எம் பெருமானாரும் அவரைக் குளிரக் கடாக்ஷித்தருளி ஆழ்வான் பக்கல்

ஆச்ரயிக்கும்படி நியமிக்க, அப்படியே அவரும் ஆழ்வானை ஆச்ர யித்துத் தத்வஹித புருஷார்த்தங்களை ஐயந்திரிபறத் தெளிந்து ஆத்ம ஆத்மீயங்களை அந்த ஆசார்யன் திருவடிகளிலே ஸமர்ப்பித் துப் பரம ப்ரவணராயிருந்தார். இப்படியிருக்கையில், ஸ்வாசார்ய ருடைய உகப்புக்கு உறுப்பாகத் தமக்கு ப்ராசார்யரான எம்பெரு மானார் விஷயமாக ஒன்றிரண்டு பிரபந்தங்களைச் செய்து அவற்றை எம்பெருமானார் ஸந்நிதியிற் கொணர்ந்துவைக்க, எம்பெருமானா ரும் அவற்றை அவிழ்த்துக் கடாக்ஷிக்க, அவை தமது திருவுள்ளத் துக்கு இசைந்திராமையாலே அவற்றைக் கிழித்தெறிந்துவிட்டு அவரை நோக்கி, 'ஏதாவது பிரபந்தம் பாடவேணுமென்கிற விருப் பம் உமக்கிருக்குமாகில், உமக்கு உத்தேச்யரான ஆழ்வானுடைய வும் நமக்கு உத்தேச்யரான ஆழ்வார்களுடையவும் உகந்தருளின நிலங்களினுடையவும் ஸம்பந்தம் தோற்றுமாறு ஒரு பிரபந்தம்செய் யும்' என்று நியமித்தருள, இவரும் அப்படியே செய்கிறேனென்று அந்த நியமநத்தை சிரஸாவஹித்து எம்பெருமானார் திருவடி களிலே மெய்யன்பர்க்கு நித்யாநுஸந்தேயமாம்படி பாட்டுக்கள் தோறும் இராமாநுசனென்னுந் திருநாமத்தையிட்டு நூற்றெட்டுப் பாட்டாக அருளிச்செய்து எம்பெருமானார் ஸந்நிதியிலேவந்து வணங்கி 'இதைக் கேட்டருளவேணும்' என்று பிரார்த்தித்து அநு மதிபெற்றுக் கூரத்தாழ்வான் முதலானோர் பேரோலக்கமாக இருக் கிற அங்குத்தானே இந்தப் பிரபந்தத்தை விண்ணப்பம் செய்ய, எம்பெருமானார் மற்றை முதலிகளோடும் திருச்செவி சார்த்தித் தலைதுலுக்கிப் போரவுகந்தருளி, தம்திருவடிகளில் ஸம்பந்தமுடை யார்க்கெல்லாம் அந்தப் பிரபந்தத்தை அன்று தொடங்கி என்றும் நித்யாநுஸந்தேயமாம்படி கற்பித்தருளியதுந் தவிர, அவரது வாக்கு அமுதவாக்கா யிருந்தமையால் அவர்க்கு அமுதன் என்ற திருநாமத்தையும் பிரஸாதித்தருளி மிகவும் கடாக்ஷித்தருளினர். ஆகையால் அதுமுதல் 'பெரியகோயில் நம்பி' என்ற திருநாமம் மாறித் திருவரங்கத்தமுதனார் என்ற திருநாமம் வழங்கத் தொடங் கிற்று. இப்பிரபந்தத்திற்கு ப்ரபந்ந காயத்ரீ என்ற திருநாமமும் அன்றேதொடங்கி நிகழலாயிற்று.

இந்த விருத்தாந்தம் சிறிது மாறுபாடாகவும் சொல்லப்படுவ துண்டு; எங்ஙனே யெனின்;—அமுதனார் எம்பெருமானாருடைய

நியமனம் பெற்று இப்பிரபந்தம் இட்டருள்வதாக அடையவளைந்தான் திருமதிலுக்கு இவ்வருகேயிருந்த ஒரு தென்னஞ்சோலைத் திருமண்டபத்தில் வீற்றிருந்து பட்டோலை கொண்டிருக்கும் போது, அவ்வளவில் எம்பெருமானார் அழகியமணவாளனது நியமநத்தினால் ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலிய அந்தரங்கசிஷ்யர்களோடு அவ்விடத்தே யெழுந்தருள அப்போது "செழுந்திரைப்பாற்கடல்" என்ற நூற்றைந்தாம்பாசுரம் தலைக்கட்டி, இருப்பிடம் வைகுந்தமென்ற பாசுரம் எழுதவேண்டிய தருணமாயிருந்ததென்றும், அது முதலான மூன்று பாசுரங்களும் எம்பெருமானார் திருமுன்பே தொடுக்கப்பட்டனவென்றும், பிறகு அரங்கேற்றியானபின் 'இந்த விசேஷத்துக்கு ஸ்மாரகமாக இப்பிரபந்தத்திற்கு மாத்திரம் சாற்றுப் பாசுரங்கள் மூன்றாயிருக்கவேணும்' என்று ஆழ்வான் நியமித்தருளினரென்றும், ஆனதுபற்றியே மற்றைப் பிரபந்தங்கட்கு இரண்டு பாசுரம் சாற்றாயிருப்பது போலல்லாமல் இதற்கு மூன்று பாசுரம் சாற்றாக ஸம்ப்ரதாயம் நிகழ்கின்றதென்றும் கோயில் கஸ்தூரி ஜீயர் பணிக்கக் கேட்டிருக்கை.

ஸர்வ ப்ரகாரங்களாலும் இத்திவ்ய ப்ரபந்தத்தின் வைபவம் மொழியைக்கடக்கும்பெரும்புகழுடைத்து. இந்த நூற்றந்தாதியை அறியக்கற்று வல்லாராகாதார் அவைஷ்ணவர்களே யாவர். இஃது தொன்மைமாத்திரம் கற்றாரேனும் * மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. இத்தகைய வைபவம்வாய்ந்த இத்திவ்ய ப்ரபந்தத்திற்கு ஸ்ரீ மணவாளமாமுனிகள் ஸங்க்ரஹமாக ஓர் உரையும்; பிள்ளைலோகம் ஜீயர் சிறிதுவிரிவாக ஒரு வியாக்கியானமும் இட்டருளினர். அவ்விரண்டையுந் தழுவி, இன்னும் ஆவச்யக விஷயங்களையும் ஊடேசேர்த்து அனைவர்க்கும் எளிதாம்படி அடியேனால் எழுதப்படுகிற திவ்யார்த்த தீபிகை என்னுமிவ்வுரையில் குற்றங்குறைகளைக்காணாது குணலேசத்தையே பெரியோர் கண்டு களிப்பாராக.

இங்ஙனம்,

உரையாசிரியன்,

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யதாஸன்.



ஸ்ரீ:.

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

## இராமானுச நூற்றந்தாதியின்

# தனியன்கள்.

வேதப்பிரான் பட்டர் அருளிச்செய்தவை.

(ஒருவிகற்ப நேரிசை வெண்பா.)

முன்னை வினையகல மூங்கிற்குடி யமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும்—என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன் தென்புலத்தார்க்
கென்னுக் கடவுடையேன் யான்.

| | | | |
|---|---|---|---|
| முன்னை வினை | முன்னே செய்த பாபங்க ளெல்லாம் | அணி ஆக | ஆபரணமாக |
| அகல | ஒழிவதற்காக, | சேர்த்தினேன் | பொருந்தவைத்துக் கொண்டேன் ; |
| மூங்கில் குடி அமுதன் | ‘ மூங்கிற்குடி ’ என்னுங் குலத்திலே தோன்றிய திருவரங்கத்தமுதனாருடைய | யான் | இப்படி அமுதனாருடைய திருவடிகளைச் சூடப்பெற்ற அடியேன் |
| பொன் அம் கழல் கமலப்போது இரண்டும் | பொன்போல் அழகிய பாதாரவிந்தங்களிரண்டையும் | தென் புலத்தார்க்கு | தெற்குத் திக்கிலுள்ளாரான யமகிங்கரர்கட்கு |
| என்னுடைய சென்னிக்கு | எனது தலைக்கு | என்னுக்கு | எதுக்காக |
| | | கடவு உடையேன் | ப்ராப்தியுடையேன்? |

* * *:—நெடுநாளாக நான் செய்து போந்த கருமங்கள் தொலைந்து அக்கரும பலங்களின் அநுபவம் எனக்கு நேராமலிருப்பதற்கு ஒரு மஹோபாயம் கண்டறிந்து அநுட்டித்தேன் ; அதாவது, மூங்கிற்குடியென்ற மஹாகுலத்திலே தோன்றிய திருவரங்கத்தமுதனாருடைய திருவடித் தாமரைகளை நான் சிரோபூஷண

மாக அணிந்துகொண்டேன்; அதனால் எனது ஸகல கருமங்களும் தீயினில் தூசாயொழிந்தன. இனி யமனுக்காவது யமபடர்களுக்காவது என்னருகே வருவதற்கு யாதொரு ப்ரஸக்தியுமில்லை: என்றாயிற்று.

"முன்னை வினையகலச் சேர்த்தினேன்" என இயையும். [மூங்கிற்குடி.] வேயர்குலம், ஆஸூரிகுலம், கூரகுலம் என்பன போல மூங்குற்குடியென்று ஒரு குலமுண்டாம். அமுதன்= இவர்க்கு, பெரியகோயில்நம்பி என்பது பண்டு வழங்கிவந்த திருநாமம். இவர் இயற்றிய நூற்றந்தாதியைத் திருச்செவி சார்த்தியருளிய எம்பெருமானார் இவருடைய வாக்கு அமுதவாக்காயிராநின்றதென்று உகந்தருளி அமுதன் என்று திருநாமம் ப்ரஸாதித்தருளினராம். கமலப்போது = தாமரைப்பூ. அணி = ஆபரணம். சேர்த்தினேன்=சேர்த்தேன் என்றபடி: இன்—சாரியை.

என்னுக்கு + கடவுடையேன் = என்னுக்கடவுடையேன்; (கடைக்குறை) கெடுதல்விகாரப் புணர்ச்சி. என்னுக்கு=எதுக்காக என்கை; "என்னுக்கவளை விட்டிங்குவந்தாய்" என்றார் குலசேகரப் பெருமாளும். [கடவுடையேன்.] கடவு=ப்ராப்தி; அதாவது—உரிமை. .... .... ... ... *

கட்டளைக் கலித்துறை.

நயந்தரு பேரின்பமெல்லாம் பழுதேன்று நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி யிராமானுசமுனி தாளிணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமு தோங்குமன்பால்
இயம்புங் கலித்துறையந்தாதி யோதவிசை நெஞ்சமே.

நெஞ்சமே — மனமே!,

நயம் தரு — { விஷயங்களால் தரப்படுகிற

பேர் இன்பம் எல்லாம் — } சிற்றின்பங்கள் யாவும்

பழுது என்று — { வ்யர்த்தங்களென்று (அவற்றை விட்டொழிந்து)

நண்ணினர் பால் — { தம்மை ஆச்ரயித்தவர்கள் விஷயத்தில்

சயம் தரு கீர்த்தி — { ஸம்ஸார ஜயத்தைப் பண்ணிக் கொடுக்கும் புகழுடையரான

இராமாநுச முனி — } எம்பெருமானாருடைய

| | | | |
|---|---|---|---|
| தாள் இணைமேல் | இரண்டு திருவடிகள் விஷயமாக, | இயம்பும் | அருளிச்செய்த |
| உயர்ந்த குணத்து திரு அரங்கத்து அமுது | சிறந்த குணசாலியான திருவரங்கத் தமுதனார் | கலித்துறை அந்தாதி | கட்டளைக் கலித்துறையினா லமைந்த நூற்றந்தாதியை |
| ஓங்கும் அன்பால் | கொழுந்து விட்டோங்கிய பக்தியினாலே | ஓதி | அத்யயநம்செய்ய |
| | | இசை | ஸம்மதித்திருக்கக் கடவை. |

* * *:—விஷயாந்தரங்களின் அநுபவத்தினாலுண்டாகும் சிற்றின்பங்கள் யாவும் அற்பங்களென்றும் ஹேயங்களென்றும் கருதி அருவருத்து அவற்றில் நசையற்றுத் தம்மைவந்து அடி பணிகின்ற மஹாநுபாவர்களுக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத் தருளி மோக்ஷத்தைத் தந்தருள்பவராய் இப்பெரும்புகழ் பரவப் பெற்றவரான எம்பெருமானார் விஷயமாக, பகவத்பாகவத பக்தி முதலிய மஹாகுணங்கள் நிறைந்த திருவரங்கத்தமுதனார் பரம பக்தி தலையெடுத்துச் சொன்ன நூற்றந்தாதி யென்னும் திவ்ய ப்ர பந்தத்தை ஓதுவதற்கு நெஞ்சே! நீ இசைந்திடாய் என்கிறார். நல் வழி தீவழிகளிற் போதற்கு நெஞ்சே முதற்காரணமாதலால் அத னுடைய ஆநுகூல்யம் பெறுதற்குப் பாரிக்கின்றாரென்க.

நயம்=விஷயாந்தரங்கள். "நாணுமை நள்ளேன் நயம்" (முதல் திருவந்தாதி) என்றவிடத்து, நயம் என்பதற்கு விஷயாந்த ரங்களென்று பொருள் அருளிச்செய்யப்பட்டிருத்தல் காண்க. பேரின்பம்—சிற்றின்ப மென்னவேண்டுமிடத்துப் பேரின்பமென் றது விபரீதலக்ஷணையாம். 'நல்லபாம்பு' என்னுமாபோலே. அன்றி, பேரின்பமுண்டென்று ப்ரமித்திருப்பார் கருத்தாலே சொல்லிற் றாகவுமாம்.

"ஆயிழையார் கொங்கை தங்கும் அக்காதலளற்றழுந்தி மாயு மென்னாவியை வந்தெடுத்தானின்று" என்று இவ்வமுதனார் தாமும், "𑌮𑌦𑌨𑌕𑌤𑌨𑍈𑌰𑍍 𑌨 𑌕𑍍𑌲𑌿𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑌤𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌾𑌃" [மதநகத நைர் நக்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:] என்று தூப்புல்பிள்ளையும், "𑌕𑌾𑌮𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌹𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌦𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌨𑌾𑌂" [காமாதிதோஷஹர மாத்மபதாச்ரிதாநாம்] என்று பெரிய ஜீயரும் பணித்தவை இப் பாட்டின் முன்னடிகட்குச் சந்தையாக அநுஸந்தேயம்.

"....பழுதின்றி நண்ணினம்பால்" என்றும், "பழுதின்றி நண்ணிநன்பால்" என்றும் பாடபேதங்களுண்டாம். சயம்=ஜயம்; "நாவலிட்டுழி தருகின்றோம் நமன்றமர் தலைகள் மீதே" என்று மீசை முறுக்கிச் சொல்லப் பண்ணுகை.

[கலித்துறையந்தாதி-.] "முதற்சீர்நான்கும் வெண்டளைபிழையாக், கடையொருசீரும் விளங்காயாகி, நேர்பதினாறே நிரைபதினேழென் றோதினர் கலித்துறை யோரடிக்கெழுத்தே" என்பது, கட்டளைக்கலித்துறை யிலக்கண முணர்த்தும் ஸூத்ரமாகும். கட்டளைக்கலித்துறையில் ஒவ்வோரடிக்கும் உரிய ஐந்துசீர்களுள் முதல் நான்கும் ஈரசைச்சீர்களும் ஐந்தாவது விளங்காய்ச்சீருமாக வெண்டளை பிறழாமல் வரும். வரவே, நேரசை முதலான அடி ஒற்றொழித்துப் பதினாறெழுத்தும், நிரையசை முதலான அடி ஒற்றொழித்துப் பதினேழெழுத்துமாகத் தானே அமையும். வெண்பாவுக்குப்போலக் கட்டளைக் கலித்துறைக்கு ஓரடியின் இறுதிச்சீரோடு அடுத்த அடியின் முதற்சீர் வெண்டளை தவறாது வரவேண்டுமென்ற நியதி இல்லை. அந்த நியதிகொள்ளின், நிரையசை முதற் கட்டளைக் கலித்துறையெல்லாம் காய்முன்நிரைவந்து கலித்தளையாய் வெண்டளைவழுவாமாறு காண்க. கலிநிலைத்துறை, கலிவிருத்தம், ஆசிரியவிருத்தம் என்பவை முதலிய சிலவற்றிற்குப் போலக் கட்டளைக் கலித்துறைக்கு நான்கு அடிகளும் அளவொத்து வரவேண்டுமென்னும் நியதியுமில்லை. வெண்பா ஆசிரியப்பா முதலிய சிலவற்றிற்போலவே அளவொவ்வாமலே வரலாம். கட்டளைக்கலித்துறை பெரும்பாலும் ஏகாரவீற்றதும், சிறுபான்மை ஓகாரவீற்றதுமாம். இந்நூலில் எல்லாப்பாசுரங்களும் ஏகாரவீற்றனவே. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தத்தில், "கோலப்பகல்களிறொன்றுகற்புய்ய" என்ற நாற்பதாம் பாசுரமொன்றே ஓகாரவீற்றது. ஓகாரவீறாய் வருவதற்கு வேறு மேற்கோள் கிடைப்பரிது. ஏகார வுயிரீறாகவன்றி மெய்யீறாகவந்த கட்டளைக் கலித்துறைகளும் சான்றோர் செய்யுளிற் காணப்படுகின்றன.

இத்திவ்யப்பிரபந்தம் அந்தாதித்தொடையாற் பாடப்பட்ட பிரபந்தமாதலின் சொல் தொடர்நிலை பொருள் தொடர்நிலை யென்னும் இருவகையுள் சொல் தொடர்நிலையாம். [அந்தாதித் தொடை

யாவது—முன்னின்ற பாட்டின் இறுதி எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின்வரும் பாட்டின் முதலாகப் பாடுவது.] இந்நூல் இறுதிச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையும்படி மண்டலித்துப் பாடப்பட்டுள்ளமையுங் காண்க. .... .... .... *

இதுவுமது.

சொல்லின் தொகைகொண் டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்து முன்நாமமெல்லா மென்றன் நாவினுள்ளே
அல்லும் பகலு மமரும்படிநல் கறுசமயம்
வெல்லும்பரம விராமாநுச விதென் விண்ணப்பமே.

| | |
|---|---|
| அறு சமயம் | அப்ராமாணிகங்களான ஆறு மதங்களையும் |
| வெல்லும் | நிரஸித்தருளின |
| பரம | ஆரியரான |
| இராமானுச | எம்பெருமானாரே! |
| உனது அடி போதுக்கு | தேவரீருடைய பாதாரவிந்தங்களிலே |
| தொண்டு செய்யும் | வாசிக கைங்கரியம் பண்ணுகிற |
| நல் அன்பர் | பரமபக்தர்கள் |
| சொல்லின் தொகை கொண்டு | சப்த ராசிகளைக் கொண்டு |
| ஏத்தும் | துதிக்கிற |
| உன் நாமம் எல்லாம் | தேவரீருடைய திருநாமங்களெல்லாம் |
| என் தன் நாவின் உள்ளே | எனது நாவிலே |
| அல்லும் பகலும் | அஹோராத்ரமும் |
| அமரும்படி | பொருந்தியிருக்கும்படி |
| நல்கு | க்ருபை செய்தருளவேணும்; |
| இதுவே என் விண்ணப்பம் | இவ்வளவே அடியேன் செய்யும் விஜ்ஞாபனம். |

* * *:—கூறுஞ்சமயங்களாறுங் குலையக் குவலயத்தே வந்தருளின ஸ்வாமிந்! தேவரீருடைய திருவடிவாரத்திலே சீலமில்லாச் சிறியேன் செய்யும் விண்ணப்பம் ஈதொன்றே; அது யாதெனில்; தேவரீரிடத்துப் பரமபக்தி பூண்டவர்கள் "தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச் சிறந்து பூசிப்ப" என்ற கணக்கிலே தத்தம் சக்திக்கியன்றவாறாக சப்தராசிகளை யடுக்கி தேவரீருடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணுவர்களன்றோ; அத்திருநாமங்

கள் இடைவிடாது என்நாவிலே திகழும்படி அநுக்ரஹித்தருள வேணும்; இஃதொன்றேயாய்த்து அடியேனுடைய பிரார்த்தனை— என்கிறார் ஒரு பக்த சிகாமணி.

தொகை என்பதற்கு ஸங்கியை என்று பொருள் கொள்ளு தலுமாம். எம்பெருமானார் விஷயமாக நூற்றெட்டுப் பாசுரங்கள் பாடவேணுமென்று ஒரு தொகையை நெஞ்சிலேகொண்டு நல் லன்பரான அமுதனார் அருளிச்செய்த தேவரீருடைய நாமமாலை யாகிய நூற்றந்தாதிப் பிரபந்தமானது எப்போதும் என் நாவிலே பொருந்துமாறு அருளவேணும் என்றதாகவுங்கொள்க. "எங்கள் கதியே இராமானுச முனியே!, சங்கைகெடுத்தாண்ட தவராசா— பொங்குபுகழ், மங்கையர்கோனீந்த மறையாயிர மனைத்தும், தங்கு மனம் நீயெனக்குத் தா" என்றதுபோலவாம். .... *

[இம்மூன்று தனியன்களே ஸகல திவ்ய தேசங்களிலும் வழங்கு மவை; மற்றொரு தனியன் மேனாட்டில் அநுஸந்திக்கப் படுகிறதாம்; அதா வது.]

இனியென் குறைநமக் கெம்பெருமானார் திருநாமத்தால்
முனிதந்த நூற்றெட்டுச் சாவித்திரியென்னு நுண்பொருளைக்
கலிதந்த செஞ்சொற் கலித்துறையந்தாதி பாடித்தந்தான்
புனிதன் திருவரங்கத் தமுதாகிய புண்ணியனே.

(இதன் கருத்து:-) ஸர்வேச்வரன் ஆதியிலே ஸங்கல்பபூர்வக மாக உலகத்தைப் படைத்து முதலிலே சதுர்முகப்ரஹ்மாவுக்கு ஸாவித்ரியை உபதேசித்தான். இவ்வமுதனார் அந்த ஸாவித்ரியின் ஸாரார்த்தத்தை யெடுத்து இராமானுசன் என்னுந் திருநாமத்தோ டிணக்கிக் கட்டளைக் கலித்துறையிலே வைத்துத் தாம் அநுப வித்த அநுபவத்தின் பரீவாஹரூபமாக இந்நூற்றந்தாதியைப் பாடிப் பின்புள்ளாரான நமக்கும் உபகரித்தருளினர். இனி நமக்கு ஐஹிகாமுஷ்மிகங்களில் ஒரு குறையுமில்லை என்பதாம். "திரு நாமத்தால்" என்ற விடத்து, திருப்பெயரால் என்று பாடமிருப் பின் வெண்டளைக்குச் சேரும்.

தனியன் உரை முற்றிற்று.





ஸ்ரீ:.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

அமுதனார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

# இராமாநுச நூற்றந்தாதி

## உரையின் அவதாரிகை.



ஸகல சாஸ்த்ரங்களுக்கும் ஸங்க்ரஹம் திருவஷ்டாக்ஷரம். அதனுடைய பரம தாத்பர்யமாயும், ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களின் ஸாரார்த்தமாயும், ஸ்ரீமதுரகவிகளுடைய உக்தியாலும் அநுஷ்டாநத்தாலும் ப்ரகாசிதமாயும், நம் பூருவாசார்யர்களின் உபதேச பரம்பரையாலே ப்ராப்தமாயும், சேதநர்களனைவர்க்கும் இன்றியமையாத ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களின் நிஷ்க்ருஷ்ட வேஷமாயும், பரம ரஹஸ்யார்த்தமாயுமிருப்பது சரமபர்வ நிஷ்டை. அஃதிருக்கும்படியைத் திருவரங்கத்தமுதனார்க்கு எம்பெருமானார் தமது நிர்ஹேதுக க்ருபையினாலே கூரத்தாழ்வான் திருவடிகளிலே தம்மை ஆச்ரயிப்பித்தருளி அவர் முகமாக உபதேசித்தருளினார். அங்ஙனம் உபதேச ப்ராப்தமான அந்தச் சீரிய பொருளை இவ்வமுதனார் தாம் அநவரத பாவனை பண்ணி எம்பெருமானார் திருவடிகளை இடைவிடாது ஸேவித்துக் கொண்டு போந்தாராய் அவருடைய திருக்கல்யாண குணங்களைத் தமது பத்திப் பெருங்காதலுக்குப் போக்குவீடாகப் பேசி அநுபவித்தே தீரவேண்டும்படியான நிலைமை தனக்கு உண்டானமையாலும், சரமபர்வநிஷ்டையே சீரியதென்கிற பரமார்த்தத்தைச் சேதநர்கட்கு எளிதில் உணர்த்தவேணுமென்கிற க்ருபாமூலகமான கருத்தினாலும் தாம் எம்பெருமானாருடைய திவ்யகுண சேஷ்டிதாதிகளை ப்ரேமத்துக்குத் தகுதியாகப் பேசுகிற பாசுரங்களாலே

அவருடைய வைபவங்களை அனைவர்க்கும் வெளியிடா நின்று கொண்டு முன்பு ஆழ்வார் திருவடிகளுக்கே அற்றுத்தீர்ந்த மதுர கவிகள் தமது நிஷ்டையைக்கூறும் முகத்தாலும் பிறர்க்கு உப தேசிக்கும் முகத்தாலும் உஜ்ஜீவநத்துக்கு உபயுக்தமான அர்த் தத்தை லோகத்திலே வெளியிட்டருளினதுபோல, இவர் தாமும் அவ்வகைகளாலே ஆசார்யாபிமாநநிஷ்டர்க்கு அறிந்துகொள்ளத் தக்க அர்த்தங்களையெல்லாம் மிக்க சுருக்கமும் மிக்க விரிவுமின்றி நூற்றெட்டுப் பாசுரங்கள் கொண்ட இத்திவ்ய ப்ரபந்த முகத்தால் அருளிச்செய்கிறார். .... .... .... *

பூமன்னுமாது பொருந்திய மார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாற னடிபணிந் துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்ன வந்த விராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ * நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே. (க)

நெஞ்சே! — ஓ மனமே!

பூ மன்னு மாது — தாமரைப்பூவில் பொருந்த முடையளா யிருந்த பிராட்டி

பொருந்திய மார்பன் — (அப்பூவை விட்டு வந்து) பொருந்து கைக்குறுப்பான போக்யதையை யுடைய திருமார்பை யுடையனான பெருமானுடைய

புகழ் மலிந்த பா — திருக்கல்யாண குணங்கள் நிறைந்த தமிழ்ப் பாசுரங்களிலே

மன்னு மாறன் — ஊற்றமுடையவரான நம்மாழ்வாருடைய

அடி — திருவடிகளை

பணிந்து — ஆச்ரயித்து

உய்ந்தவன் — உஜ்ஜீவித்தவரும்

பல் கலையோர் தாம் மன்ன வந்த — பலபல சாஸ்த்ரங்களை ஓதின மஹான்கள் நிலைபெறும் படி (இவ்வுலகில்) வந்தவதரித்த வருமான

இராமாநுசன் — எம்பெருமானாருடைய

சரண அரவிந்தம் — திருவடித் தாமரைகளை

நாம் மன்னி வாழ — நாம் ஆச்ரயித்து வாழ்வதற் குறுப்பாக

அவன் நாமங்களே — அவ்வெம்பெருமானாரது திருநாமங்களையே

சொல்லுவோம் — ஸங்கீர்த்தநம் பண்ணுவோம்.

* * *:—தாமரைமலரிற் பிறந்த பெரிய பிராட்டியார் அப் பூவைவிட்டு "அகலகில்லேன் இறையும்" என்று வந்து மிக்க விருப்பத்துடன் வஸிக்கப்பெற்ற திருமார்பை யுடையனான திரு மாலினது திவ்ய குணசேஷ்டிதங்களை நிறைத்துக்கொண்டிருக்கிற திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களை அருளிச்செய்த நம்மாழ்வாருடைய திருவடிகளைத்தொழுது ஸத்தைபெற்றவராயும், பலபல சாஸ்த்ரங்களைக்கற்றும் உஜ்ஜீவநோபாயத்தில் த்ருடாத்யவ ஸாயமின்றியே ஸம்சய விபர்யயங்கள்கொண்டு தடுமாறுகின்றவர் களை ஒரு நிச்சயஜ்ஞானத்திலே நிலைநிறுத்தி வாழ்விக்கவந் தவ தரித்தவராயுமிருக்கிற எம்பெருமானாருடைய திருவடிகளை நாம் ஆச்ரயித்து உஜ்ஜீவிக்குமாறு அவருடையதிருநாமங்களை வாயாரப் பேசுவோமென்று தமது திருவுள்ளத்தை நோக்கிச் சொல்லுகிறு ராயிற்று.

எல்லா நூல்களும் மங்கலமொழி முதல் வகுத்துக்கூறவேண்டு வது மரபாதலால், பூ என்று தொடங்கினர். இச்சொல், திருச் சந்த விருத்தத்தில் சப்த சக்தியால் மாத்திரம் மங்கலமொழியாய் நின்றது; இங்கு அர்த்தசக்தியாலும் நின்றது என்ற விசேஷம் அறியத்தக்கது. (அங்கே, பூ—பூமி.)

எம்பெருமானார்க்கு அதிசயாவஹமான வைபவங்கள் பல்லா யிரமிருந்தாலும், ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யத்தையே அவர் தமக்குப் பெரிய வைபவமாக அத்யவஸித்திருந்தாராதலால் அவருடைய அத்யவஸாயத்துக்குப் பொருந்த "மாறனடி பணிந் துய்ந்தவன்" என்ற விசேஷணம் முற்பட்டது. இதனை யடியொற் றியே மணவாளமாமுனிகளும் "ஸ்ரீமாதவாங்க்ரி ஜலஜத்வய நித்ய ஸேவாப்ரேமாவிலாசய பராங்குச பாதபக்தம்" [ஸ்ரீமாத வாங்க்ரி ஜலஜத்வய நித்ய ஸேவாப்ரேமா விலாசய பராங்குச பாத பக்தம்] என்று தொடங்கினர்.

பாமன்னுமாறன்=ஆழ்வார் தாமருளிச்செய்த பாசுரங்களின் இனிமையைக்கண்டு தாம் அவற்றில் மிக்க ஊற்றமுடையவரா யிருந்தாரென்கிறது. "தன்சீர் யான்கற்று மொழிபட்டோடுங் கவியமுத நுகர்ச்சியுறுமோமுழுதுமே" என்றும், "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றும், "கேட்டு

ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்றும் தாமே அருளிச் செய்தாரிறே. மாறன்—ஆழ்வார் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால் குடித்தல் முதலிய லோகவியாபாரம் ஒன்றுமின்றி உலகநடைக்கு மாறாக இருந்ததனால், இவர்க்கு 'மாறன்' என்ற திருநாமமாயிற்று; வலிய வினைகட்கு மாறாக இருத்தலாலும், அந்ய மதஸ்தர்களை யடக்கி அவர்கட்கு சத்ருவாயிருத்தலாலும், பாண்டிய நாட்டில் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்தபெய ரென்றலுமுண்டு.

பல்கலையோர் தாம்மன்ன=நாநா சாஸ்த்ரங்களைக்கற்று வல்லவர்களான ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலிய மஹான்கள் ப்ரதிஷ்டிதராகைக்காக என்றுமாம். எம்பெருமானாருடைய சரணாரவிந்த ப்ராப்திக்கு ஸாதநம்=அவருடைய திருநாமஸங்கீர்த்தநமேயாம் என்பது இப்பாசுரத்தில் வெளியாயிற்று. ... (க)

கள்ளார்பொழில் தென்னரங்கன் * கமலப்பதங்கள் நெஞ்சில்
கொள்ளாமனிசரை நீங்கி குறையல் பிரானடிக்கீழ்
விள்ளாதவன்ப னிராமாநுசன் மிக்க சீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு * ஒன்றறியே னெனக்குற்ற பேரியல்வே. (உ)

| | |
|---|---|
| கள் ஆர் பொழில் தென் அரங்கன் | தேன் நிறைந்த சோலைகளையுடைய தென் திருவரங்கத்திலே பள்ளிகொள்ளும் பெருமானுடைய |
| கமலம் பதங்கள் | தாமரைபோன்ற திருவடிகளை |
| நெஞ்சில் கொள்ளா | தமது நெஞ்சிலே வையாத |
| மனிசரை நீங்கி | மனிதர்களை விட்டொழித்து, |
| குறையல் பிரான் அடிக்கீழ் விள்ளாத அன்பன் | திருமங்கை மன்னனுடைய திருவடிகளிலே என்றும் விட்டுநீங்காத பக்தியையுடையரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| மிக்க சீலம் அல்லால் | சிறந்த சீல குணத்தைத் தவிர |
| ஒன்று | வேறொன்றையும் |
| என் நெஞ்சு உள்ளாது | எனது நெஞ்சானது நினைக்க மாட்டாது: |
| (இவ்வாறாக) | |
| எனக்கு உற்ற பேர் இயல்வு | எனக்கு விளைந்ததொரு சிறந்த ஸ்வபாவத்திற்கு |
| ஒன்று அறியேன் | ஒரு காரணத்தையும் அறிகின்றிலேன். |

* * *:—"நெஞ்சே! சொல்லுவோமவன் நாமங்களே" என்றவுடனே எனது ஹ்ருதயமானது அவ்விராமாநுசனுடைய சீலத்தில் ஊன்றப்பெற்ற ஆச்சரியத்தை என்ன சொல்லுவேன்! என்று விஸ்மயப்படுகிறார். ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளை நெஞ்சாலும் நினையாத பாவிகளோடு நெடுங்காலம் பழகிக் கிடந்த என் நெஞ்சானது இன்று அப்பாவிகளோடு உறவை ஒழித்துவிட்டு, திருமங்கையாழ்வாருடைய திருவடிகளையே அநவரதம் இறைஞ்சுமவரான எம்பெருமானாருடைய சிறந்த சீலகுணமொன்றையே சிந்தியாநின்றது; இப்படிப்பட்டதொரு பெருந்தன்மை எனக்கு நேர்ந்ததற்குக் காரணம் அவ்வெம்பெருமானாருடைய நிர்ஹேதுக க்ருபாகடாக்ஷமேயொழிய வேறொன்றுண்டாக நானறிகின்றிலேன்.

உடையவர்க்கு நம்மாழ்வார் திருவடிகளில் பக்தியுள்ளபடியை முதற்பாட்டில் பேசினார்; "மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற அவதரித்த" என்றபடி அவ்வாழ்வாருடைய தமிழ் வேதத்திற்கு அங்கமாக ஆறு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்தவரான திருமங்கையாழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமுடைமையை இப்பாட்டில் பேசினாராய்த்து. திருமங்கையாழ்வாருடைய திருவவதாரஸ்தலம்—திருக்குறையலூர் எனப்படும். "மண்ணியில் நீர்தேங்குங் குறையலூர் சீர்க்கலியன் தோன்றியவூர்" என்பது உபதேசரத்தினமாலை. "குறையல் பிரானடிக்கீழ் விள்ளாதவன்பன்" என்ற விசேஷணம் வீறுபெறும்படி, திருவாலி திருநகரியி லெழுந்தருளியிருக்கிற திருமங்கை மன்னனுடைய பாதாரவிந்த பீடத்தின்கீழ் எம்பெருமானாருடைய திருக்கோலம் ஏறியருளப் பண்ணப்பட்டிருக்கின்றமை உணரத்தக்கது.

சீலம்=மஹானாயிருப்பவன் மந்தமதிகளோடு புரையறக் கலந்து பரிமாறுங்குணம் சீலகுணமெனப்படும். எம்பெருமானார் மஹாநுபாவரா யிருந்துவைத்தும், தம்மை வெகு நீசராக நினைத்திருக்கிற இவ்வமுதனார் தம்மோடே கலந்து பரிமாறப்பெற்ற மஹாகுணத்திற்குத் தோற்றுச் சொல்லுகிற சொல் இது. உள்ளுதல்—சிந்தித்தல். 'பேரியல்வு' என்பதை ஆறும் வேற்றுமைத் தொகையாகவுங் கொள்ளலாம், முதல் வேற்றுமையாகவும் கொள்

ளலாம். "இது எனக்கு ஸித்தித்த பெரிய விரகு" என்னவுமாம். ஒன்று என்பது காகாக்ஷிந்யாயத்தாலே கீழும்மேலும் அந்வயிக்கும்: மிக்க சீலமல்லால் ஒன்று உள்ளாது; எனக்குற்ற பேரியல்வு ஒன்றறியேன்—என்று. ... ... ... .... (உ)

பேரியல்நெஞ்சே அடிபணிந்தே னுன்னை * பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ள சுற்றம் புலர்த்தி * பொருவருஞ்சீர்
ஆரியன் செம்மை யிராமாநுசமுனிக் கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீ ழென்னைச் சேர்த்ததற்கே. (௩)

| | |
|---|---|
| பேர் இயல் நெஞ்சே! | மிகவும் கம்பீரமான மனமே! |
| உன்னை அடி பணிந்தேன் | உன்னை வணங்குகின்றேன்; (என்னை வணங்குவது எதற்காக என்னில்;) |
| பேய் பிறவி | ஆஸுரப் பிறப்பையுடையவர்களான |
| பூரியரோடு உள்ள | நீசர்களோடு (எனக்கு) இருந்த |
| சுற்றம் | உறவை |
| புலர்த்தி | போக்கடித்து |
| பொருவு அரும் சீர் | ஒப்பற்ற குணங்களையுடையவரும் |
| ஆரியன் | சிறந்த அநுஷ்டானமுடையவரும் |
| செம்மை | (ஆச்ரிதரோடு) ருஜுவாகப் பரிமாறுந்தன்மை வாய்ந்தவருமான |
| இராமாநுச முனிக்கு | எம்பெருமானார் திறத்தில் |
| அன்பு செய்யும் சீரிய பேறு உடையார் | பக்தி பண்ணுவதையே பரம புருஷார்த்தமாக வுடையவர்களான கூரத்தாழ்வான் போல்வாருடைய |
| அடிக்கீழ் | திருவடிகளின் கீழே |
| என்னை | (பரம நீசனாயிருந்த) என்னை |
| சேர்த்ததற்கே | கொண்டு சேர்த்த மஹோபகாரத்திற்காகவே (உன்னை அடி பணிந்தேன்.) |

* * *:—"மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோঃ" என்றபடி நன்மை தீமைகட்கு முதற்காரணம் நெஞ்சேயாதலால், "நெஞ்சே! சொல்லுவோ மவன்நாமங்களே" என்ற பாரிப்புக்கு அந்தநெஞ்சு உடன்பட்டுத் தமது கொள்கைக் கிணங்க ஒழுகப் பெற்ற ஸந்தோஷத்தினால் அந்தத் தமது நெஞ்சை நமஸ்கரிப்பதாகக் கூறுகின்றார் இதில். இங்ஙனே நெஞ்சைத் தம்மில் வேறுபடுத்திக் கூறுதல் கவிமரபில் வந்த ஒருவகைச் சமத்காரம். ஆஸுர

ப்ரக்ருதிகளான நீசர்களோடு எனக்கிருந்த ஸம்ஸர்க்கத்தைப் போக்கடித்து, ஒப்பற்ற குணசாலியான எம்பெருமானுருடைய திருவடிகளில் ப்ராவண்யமாகிற பரமபுருஷார்த்தத்தைப் பெற்றுள்ள ஆழ்வான்போல்வாருடைய திருவடிகளின் கீழே என்னைக் கொண்டு சேர்த்த நெஞ்சே! இப்பெருநன்றிபுரிந்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? "தலையல்லால் கைம்மாறிலேனே" என்றாற்போல உன்னைத் தலையால் வணங்குவது தவிர வேறொரு கைம்மாறு நான் செய்யகில்லேன் என்றாராயிற்று. பூரியர்=இழிபிறப்பாளர். புலர்த்துதல்—உலரச்செய்தல்; அதாவது போக்கடித்தல். பொருவு-ஒப்பு. ஆரியன்—"கர்த்தவ்யமாசரந் காமமகர்த்தவ்யமநாசரந்। திஷ்டதி ப்ரக்ருதாசாரே ஸ து ஆர்ய இதி ஸ்ம்ருதः." [கர்த்தவ்யமாசரந் காமம் அகர்த்யவ்யமநாசரந்—திஷ்டதி ப்ரக்ருதாசாரே ஸது ஆர்ய இதி ஸ்ம்ருதः.] செம்மையிராமாநுசமுனி=செம்மைக்குணமுடைய இராமாநுசமுனி என்றபடி: செம்மைக் குணமாவது வடமொழியில் 'ஆர்ஜவம்' எனப்படும். அதாகிறது—ருஜுவாயிருக்குந்தன்மை; இதற்கு ப்ரதிகோடியான குணம்—கௌடில்யம் எனப்படும். ஒருவன் ஒருவனை நோக்கி 'அப்பா! நீ எவ்வூர்?' என்றால் 'நான் தற்காலமிருப்பது இவ்வூர்' என்று விடையளிப்பதும், 'உன்பெயர் என்ன?' என்றால், 'என்பெயர் உண்டுவளர்ந்தான்' என்று விடையளிப்பதும் இவ்வாறாகக் கேட்பதற்கெல்லாம் கோணலாகவே விடையளிப்பது கௌடில்ய குணத்தின் காரியமாகும். உள்ளதை உள்ளபடியே சொல்லுகையும் செய்கையும் செம்மைக் குணத்தின் காரியமாகும். சக்ரவர்த்தி திருமகனார் பஞ்சவடியில் எழுந்தருளி யிருந்தபோது சூர்ப்பணகைவந்து, "ஆகதஸ்த்வமிமம் தேசம் கதம் ராக்ஷஸஸேவிதம்। கிமாகமநக்ருத்யம் தே தத்த்வமாக்யாதுமர்ஹஸி॥" [ஆகதஸ்த்வமிமம் தேசம் கதம் ராக்ஷஸஸேவிதம்—கிமாகமநக்ருத்யம் தே தத்த்வமாக்யா துமர்ஹஸி.] ராக்ஷஸர்கள் வந்தடைந்திருக்கிற இவ்விடத்திற்கு நீர் எவ்வாறு வந்தீர்? வந்த காரியமென்ன? என்றுகேட்க, அதற்குப் பெருமாள் கோணலான உத்தரம் கூறலாமாயினும் அங்ஙன்கூறாது "ஆஸீத் தசரதோ நாம ராஜா" என்றுதொடங்கி நேரான உத்தரம் கூறினர். அவ்விடத்திலே வால்மீகி முனிவன் "ஜ்யாயாஞ்சி தயா

ஸவ௯ாவ்யாதுமுபசக்ரமெ” [ருஜுபுத்தியா ஸர்வம் ஆக்யாது முபசக்ரமே] என்கிறான். இதுவாய்த்து ஆர்ஜவகுணம்.

“இராமாநுசனடிக் கன்புசெய்யுஞ் சீரிய பேறுடையார்” என்றவிடத்து ஸ்ரீராமாநுஜ பக்தர்களெல்லாரையும் விவக்ஷிக்கிறார் என்றலும், கூரத்தாழ்வானை விசேஷித்துக் கருதுகின்றாரென்றலும் ஒக்கும். ... ... ... (௩)

என்னைப்புவியி லொருபொரு ளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினை வேரறுத்து * ஊழி முதல்வனையே
பன்னப்பணித்த விராமாநுசன் பரன் பாதமுமென்
சென்னித்தரிக்க வைத்தான் * எனக்கேதுஞ் சிதைவில்லையே. (௪)

| | |
|---|---|
| ஊழி முதல்வனையே | காலம் முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் காரணபூதனான எம்பெருமானையே |
| பன்ன | (எல்லாரும் விவேகித்து) அநுஸந்திக்கும்படி |
| பணித்த | (ஸ்ரீபாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த |
| பரன் இராமாநுசன் | ஸர்வோத்க்ருஷ்டரான எம்பெருமானார் |
| புவியில் | இந்தப்பூமியிலே |
| என்னை ஒரு பொருள் ஆக்கி | (அபதார்த்தமாய்க் கிடந்த) என்னை ஒரு பதார்த்தமாக்கி |
| மருள் சுரந்த முன்னை பழவினை வேர் அறுத்து | அஜ்ஞான மூலகங்களாய் மிகவும் அநாதிகளான (எனது) பாவங்களை வேரறநீக்கி |
| பாதமும் | தமது திருவடிகளையும் |
| என் சென்னி | எனது தலையிலே |
| தரிக்க வைத்தான் | நான் உகந்து தரிக்கும்படியாக வைத்தருளினார்; (இவ்வளவு மஹாப்ரஸாதம் பெற்றேனான பின்பு) |
| எனக்கு | அடியேனுக்கு |
| ஏதும் சிதைவு இல்லை | எவ்விதமான ஹாநியும் இனி உண்டாக வழியில்லை. |

* * *:—எம்பெருமானாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு ஆளான நான் இனி ஒருநாளும் எவ்விதமான ஹாநியையும் அடையமாட்டேன் என்கிறார்,—பதார்த்தகோடியில் சேராமல்

துச்ச (தூஷு) ஞயிருந்த எனது கருமங்களையெல்லாம் வேரற நீக்கி, தமது பாதாரவிந்தங்களையும் என் தலைமேலே வைத்தருளினுர் எம்பெருமானுர்; இப்பேறுபெற்ற எனக்கு இனி ஒருகுறையுமில்லை என்றாராயிற்று.

மருள் சுரந்த—அஜ்ஞாநத்தாலே செய்யப்பட்ட என்கை; மருளாலே சுரக்கப்பட்ட என்றவாறு. [ஊழிமுதல்வனையே பன்னப்பணித்த] ஊழிமுதல்வனை எம்பெருமானையே பரவும்படி அமுதனாகிய தம்மைச் செய்தருளின—என்று அர்த்தமல்ல; பகவத்விமுகரா யிருந்தவர்களையெல்லாம் உபதேசாதி முகத்தாலே பகவத் ப்ரவணராம்படி செய்தருளினவர் என்று பொதுப்படையாகச் சொன்னபடி. ஊழிமுதல்வன்—பிரளயகாலத்தில் முழுமுதற் கடவுளாயிருந்தவன் என்றுமாம்.

பரன் என்றதை இராமாநுசனுக்கு விசேஷண மாக்காமல் நிர்வஹிப்பதும் ஒருபுடையுண்டு; அதாவது—பரன் என்று பரம புருஷனை எம்பெருமானைச் சொல்லிற்றாய், அவனுடைய திருவடிகளையும் என் சென்னித் தரிக்கவைத்தான் என்றதாகவுமாம். "பரன் பாதமென சென்னித் தரிக்கவைத்தான்" என்றும் பாடமாம். (என=என்னுடைய.) .... ... (ச)

எனக்குற்ற செல்வ மிராமாநுசனென்று * இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் * அவன் மன்னியசீர்
தனக்குற்றவன்ப ரவன் திருநாமங்கள் சாற்றுமென்பா
வினக்குற்றங் காணகில்லார் * பத்தியேய்ந்த வியல்விதேன்றே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| எனக்கு உற்ற செல்வம் இராமாநுசன் என்று | 'நமக்கு ப்ராப்தமான ஸம்பத்து எம்பெருமானுரே' என்று | புகழ் | (அன்னவர்களுடைய பழிப்பே இதற்குப்) புகழாய்விடும்; |
| இசைய கில்லா | அத்யவஸாயங் கொண்டிருக்க மாட்டாத | அவன் | அவ்வெம்பெருமானுடைய |
| மனக் குற்றம் மாந்தர் | துஷ்ட ஹ்ருதயர்களான மனிசர் | மன்னிய சீர் தனக்கு | நித்யஸித்தமான கல்யாண குணங்களுக்கு |
| பழிக்கில் | (இந்நூலைப்) பழிப்பர்களாகில் | உற்ற | தகுதியான |

| | | | |
|---|---|---|---|
| அன்பர் | அன்பையுடையவர்களான மஹான்கள் | அவன் திருநாமங்கள் சாற்றும் என் பா இனம் குற்றம் காணகில்லார் | அவ் விராமாநுசனுடைய திருநாமங்களைச் சொல்லுகின்ற என்னுடைய (இந்தப்) பாசுர மாலைகளிலுள்ள குற்றங்களைக் காணமாட்டார்கள். |
| பத்தி எய்ந்த இயல்விது என்று | (இந்நூலானது) பக்தியோடு கூடின ப்ரவ்ருத்தியை யுடையதென்று (திருவுள்ளம் பற்றி) | | |

* * *:—உலகத்தில் ஒரு பிரபந்தம் பிறந்தால் அதனைத் தூஷிப்பார் பலரும், பூஷிப்பார் சிலரும் ஏற்படுவது வழக்கம். உண்மையில் தோஷங்கள் இல்லாதிருந்தாலும் எதையாவது சொல்லித் தூஷித்தே தீருவர்கள். குற்றங் குறைகள் இருந்துவிட்டால் தூஷகர்களின் உத்ஸாஹம் கேட்கவே வேண்டியதில்லை. அறிவிலியான நான் இயற்றும் இந்நூலில் தோஷங்கள் தான் மிகையாக இருக்கக்கூடும்; அவற்றைக்கண்டு எல்லாரும் இகழார்களோ என்று தாமே சங்கித்துக் கொண்டு, ஸமாதாநமும் தாமே கூறுகிறார் இதில்;—எம்பெருமானாரையே ஸர்வஸ்வமாகக் கொண்ட மஹாநுபாவர்கள் இந்நூலைக் கடாக்ஷிப்பர்களாகில் சொற்களிலுள்ள குற்றங் குறைகளில் அவர்கள் கண்வையாமல் "ஹா ஹா! பக்திப் பெருங்காதல் உள்ளடங்காமல் வெளிப்புறப்பட்ட சொல் தொடையன்றோ இது!" என்று உகப்பர்கள். ஏனெனில், அவர்கள் எம்பெருமானாருடைய திருக்குணங்களில் மெய்யே ஈடுபட்டவர்களாதலால் அவருடைய திருநாமங்களைப் பேசப்பிறந்த நூல் எத்தன்மைத்தாயினும் க்ரந்தகர்த்தாவின் ஹ்ருதய பரிபாகமொன்றையே கணிசித்து, "பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப்பெறுபவோ" என்று கொண்டு பக்தியை நோக்கி உகந்திடுவர்கள். எம்பெருமானாரிடத்து அத்தகைய பக்தி [அதாவது—'இவரே நமக்கு ஸர்வஸ்வம்' என்கிற அத்யவஸாயம்] இல்லாத கல்மஷபுத்திகளான மனிசர்கள், குணங்களை யறியமாட்டாதே கேவலம் தோஷைகதர்சிகளாகையாலே ஏதேனும் தோஷங்களை ஏறிட்டோ உள்ள தோஷங்களை எடுத்துரைத்தோ நிந்திப்பர்களாகில், அன்னவருடைய தூஷணம் நமக்கு பூஷணமேயாமித்தனை என்கிறார். "அலகை முலைசுவைத்

தாற் கன்பரடிக்கன்பர், திலதமெனத் திரிவார்தம்மை—உலகர், பழி தூற்றில் துதியாகும்" என்றாரிறே அருளாளப் பெருமாளெம் பெருமானாரும்.

இங்கே ஒரு சங்கை ;—'பிறருடைய பழிப்பு நமக்கு அப்ர யோஜகம்' என்று சொல்லவேண்டியிருக்க, அவர்களுடைய பழிப் புத்தானே நமக்குப் புகழாம் என்கைக்குக் கருத்தென்? அவர் களது பழிப்பு இவர்க்கு எப்படி புகழாய் விடும்? என்றுசிலர் சங்கிக்கக்கூடும். அவர்கள் தெளியச் சொல்லுகிறோம் ;—பழிப்பவர் கள் என்னவென்று பழிக்கின்றார்களென்னில் ;—அமுதனாராம் ஒருவர் ; அவர் இராமாநுச நூற்றந்தாதி என்றொரு பிரபந்தம் பாடினாராம் ; அதில் ஒவ்வொருபாட்டிலும் இராமாநுசன் இராமா நுசன் என்று சொன்னதையே சொல்லிக் கொண்டு கிடக்கிறார். தவிரவும், சாஸ்திரங்களில் புருஷார்த்தமாகச் சொல்லப்பட்டுள்ள ஐச்வர்யம் முதலானவற்றை இகழ்ந்துரைக்கிறார் ; ஸகல புருஷார்த் தங்களும் தமக்கு 'உடையவர்' தானும் ; எம்பெருமானைக்கூட அவர் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டாராம். என்றிவைபோல்வன சில வார்த்தைகளைச் சொல்லிப் பழிப்பர்கள். வாஸ்தவத்தில் இவையெல்லாம் குணமேயாதலால் குணகீர்த்தநத்தில் சேர்ந்து புகழ்ச்சியேயாய்முடியக் குறையில்லையென்க. எம்பெருமானைப் பழித்த சிசுபாலாதிகளும் பர்யாயேண குணகீர்த்தநம் பண்ணினார் களாகவன்றோ உய்ந்துபோனது. "கற்றினம் மேய்க்கலும் மேய்க் கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான், பற்றி யுரலிடை யாப்புமுண்டான்" என்று பாவிகள் ஏசுவதெல்லாம் அன்புடை யார்க்கு குணகீர்த்தநமாகாநின்றதன்றோ. பெரிய திருமொழியில் "மானமருமென்னோக்கி" என்னுந் திருமொழியில் தூஷண பர மாகச்செல்லுகிற முன்னடிகளையும் பூஷணபரமாகச் செல்லுகிற பின்னடிகளையும் விவேகித்தறிக. "ஊரவர்கவ்வை எருவிட்டு" என்ற திருவாய்மொழியின் உட்கருத்தும் உய்த்துணரத்தக்கது. உத்தமாதிகாரிகளுடைய அத்யவஸாயமெல்லாம் ஸாமாந்ய ஞானி களுக்கு இகழ்ச்சிக்கு உறுப்பாகுமென்பது ஸாரார்த்தம்.

"பத்தியேய்ந்த இயலிதென்றே" என்றும் பாடமுண்டாம். இது பத்தி நிறைந்த சொல்—என்றபடி. இயல்—சொல். (௩)

இயலும்பொருளு மிசையத் தொடுத்து * ஈன்கவிகளன்பால்
மயல்கொண்டு வாழ்த்து மிராமாநுசனை * மதியின்மையால்
பயிலும்கவிகளில் பத்தியில்லாத வென் பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் * அவன்றன் பெருங்கீர்த்தி மொழிந்திடவே. (௬)

| | | | |
|---|---|---|---|
| ஈன் கவிகள் | விலக்ஷணரான கவிகள் | கவிகளில் | பாடல்களிலே |
| அன்பால் | ப்ரீதியினாலே | பத்தி இல்லாத | பக்தியற்றதான |
| இயலும் பொருளும் | சப்தமும் அர்த்தமும் | என் பாவி நெஞ்சால் | என்னுடைய பாபிஷ்டமான நெஞ்சினாலே |
| இசைய | நன்கு பொருந்தும் படியாக | அவன் தன் | அவ்வெம்பெருமானுடைய |
| தொடுத்து | கவனம்பண்ணி | பெரு கீர்த்தி | அளவற்றகீர்த்திகளை |
| மயல் கொண்டு | வ்யாமோஹம் தலையெடுத்து | மொழிந்திட | பேசுவதாக |
| வாழ்த்தும் | துதிக்கும்படி நின்ற | மதி இன்மையால் முயல் கின்றனன் | புத்தி இல்லாமையினாலே நான் ப்ரவர்த்திக் கின்றேன். |
| இராமா னுசனை | எம்பெருமானாரை | | |
| பயிலும் | வருணிக்கின்ற | | |

* * *:—"பத்தியெய்ந்த வியல்விதென்றே" என்று கீழ்ப் பாட்டிற் சொன்னவிவர், அப்படிப்பட்ட பக்தி தமக்கு உண்டோ வென்று பார்த்தார்; அவ்விஷயத்துக்குத்தக்க பக்தி தமக்கு இல்லை யென்றறிந்தார்; 'அந்தோ! நாமோ அவ்வெம்பெருமானுரைத் துதிக்க இழிந்தது!' என்று தம்மைத்தாமே வெறுத்துக் கொள்ளு கிறார் இதில்.—இன்கவி பாடும் பரமகவிகளான சில மஹான்கள் சொல்லின்பமும் பொருளின்பமும் நன்கு பொருந்துமாறு கவி பண்ணி ஆந்தரமான அன்பினாலே வ்யாமோஹித்து இராமாநு சனை வாழ்த்தா நிற்பர்கள்; அன்னவர்களுடைய பக்திபரீவாஹ ரூபமான கவிகளில் ஆதரமற்ற எனது பாவி நெஞ்சால் அவ்விரா மாநுசனுடைய பெருப்பெருத்த புகழ்களையெல்லாம் பேசுவதாக நான் முயற்சி செய்கின்றேனே! இஃது என்ன புத்திகெட்ட தன்மை! என்று வெறுத்துக்கொள்ளுகிறார்.

"கவிகள் ....வாழ்த்து மிராமாநுசனை"=கவிகளால் மங்களா சாஸனம் பண்ணப்படுகிற இராமாநுசனை என்றபடி. மயல் எனி

னும் ஸ்மையல் எனினும் ஒக்கும்; வ்யாமோஹம்; அறிவு கேடு: மங்களாசாஸநம் பண்ணும்போது அறிவு கெட வேணுமிறே. அறிவு உள்ளபடியே கிடந்ததாகில் 'வாழி, பல்லாண்டு, ஜயவிஜயீ பவ' இத்யாதி சப்தங்கள் வெளிவர வொண்ணுதிறே. "மதியின்மையால்" என்றவிது நான்காமடியில் அந்வயிக்கக்கடவது. மதி—வடசொல். இன்மை=இல்லாமை. .... .... (சு)

மொழியைக்கடக்கும் பெரும்புகழான் * வஞ்சமுக் குறும்பாம்
குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடியபின் *
பழியைக்கடத்து மிராமாநுசன் புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல் * எனக்கினி யாதும் வருத்தமன்றே. (எ)

| | |
|---|---|
| மொழியை கடக்கும் | வாய்கொண்டு வருணிக்க முடியாதபடி வாசாமகோசரமான |
| பெரு புகழான் | பெரிய புகழை யுடையவரும் |
| முக்குறும்பு ஆம் வஞ்சக் குழியை கடக்கும் | கல்விச்செருக்கு, செல்வச் செருக்கு, குலச்செருக்கு என்னும் மூவகைக் குறும்புகளாகிற படுகுழியைக்கடந் திருப்பவரும் |
| நம் | நமக்கு நாதருமான |
| கூரத்து ஆழ்வான் | கூரத்தாழ்வானுடைய |
| சரண் | திருவடிகளை |
| கூடிய பின் | நான் ஆச்ரயித்த பின்பு |
| பழியை கடத்தும் | ஸர்வபாப நிவர்த்தகரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| புகழ் பாடி | நற்குணங்களைப்பாடி |
| அல்லா வழியை கடத்தல் | ஸ்வரூபத்திற்குச் சேராத தீய வழிகளைத் தப்பிப் பிழைக்கையானது |
| எனக்கு | அடியேனுக்கு |
| இனி | இனிமேலுள்ள காலமெல்லாம் |
| யாதும் வருத்தம் அன்று | ஈஷத்தும் ப்ரயாஸ ஸாத்யமன்று; [எளிதேயாம்.] |

* * *:—எம்பெருமானாரைத் துதிப்பதற்குத் தாம் யோக்யதையற்றவர் என்று பின்வாங்கப்பார்த்த அமுதனார், தமக்குள்ள ஆழ்வான் திருவடி ஸம்பந்தத்தை நினைத்து இஃது இருக்கும் போது எனக்கு அஸாத்யமானது ஒன்றுமில்லையென்று துணிவு

கொள்ளுகிறார் இதில்—“𑌵𑌾𑌚𑌾𑌮𑌗𑍋𑌚𑌰 𑌮𑌹𑌾𑌗𑍁𑌣 𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑍍𑌯 𑌕𑍂𑌰𑌾𑌧𑌿𑌨𑌾𑌥” [வாசாமகோசர மஹாகுண தேசிகாக்ர்ய கூராதிநாத] என்றபடி வாய்கொண்டு வருணிக்கமுடியாத பெரும் புகழ் படைத்தவரும், கல்வி, செல்வம், குலம் என்ற மூன்றுவகை ஸம்பத்தும் புஷ்கலமாயிருந்தும் அவற்றால் இறையும் அஹங்கார மடையாதவருமான கூரத்தாழ்வானுடைய சரணாரவிந்தங்களை ஆச்ரயித்து க்ருதக்ருத்யனானவெனக்கு எம்பெருமானாருடைய திருக்குணங்களைப் பாடுதலும் அதுவே காரணமாக அர்ச்சிராதிகதியொழிந்த மற்ற கதிகளிற் போகாதபடி அவ்வழியேபோதலும் மிகவுமெளிதேயாம் என்றாராயிற்று.

நம் பூருவாசாரியர்கள் எல்லாருமே சிறந்த புகழுடையராயினும் ஆழ்வானுடைய புகழ் அத்யந்தவிலக்ஷணமென்பது ப்ரஸித்தமான விஷயம். நம் தர்சநத்துக்கு மஹாத்ரோஹியான நாலூரானுக்குக் கொடிய நரகங்களைக் கொடுக்க வேணுமென்று பகவத்ஸந்நிதியிலே ப்ரார்த்திக்கவேண்டியிருக்க, பேரருளாளன் திருமுன்பே வரதராஜஸ்தவத்தை விண்ணப்பம் செய்து கண்தெரியும்படி வரம் வேண்டிக்கொள்ளீர் என்ற ஸ்வாசார்ய நியமநத்தையும் அதிக்ரமித்து “நான் பெற்றபேறு நாலூரானும் பெறவேணும்” என்று வரம் வேண்டிக்கொள்ளும்படி விசாலமான திருவுள்ளம்பெற்ற ஆழ்வானுடைய புகழை நாம் என்சொல்வோம்! “மொழியைக் கடக்கும் பெரும்புகழான்” என்று சொல்வது தவிர வேறு வாசகமில்லைகாணும்.

[வஞ்சமுக்குறும்பாமித்யாதி.] “𑌕𑍁𑌲𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌵𑌯𑍋𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌧𑌨𑌞𑍍𑌚 𑌮𑌦𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑍍” [குலம் ரூபம் வயோ வித்யா தநஞ்ச மதயந்த்யமும்] என்று செருக்கை விளைக்கக்கூடியவை ஐந்து கிடந்தாலும், கல்விச்செருக்கு, செல்வச்செருக்கு, குலச்செருக்கு என்ற இம்மூன்று அஹங்காரங்கள் மிகக்கொடியவை; இவற்றைக் கடத்தல் ஆர்க்கும் அரிது; இவற்றைக் கடந்தவர் என்னும் ஏற்றம் ஆழ்வானொருவர்க்கே அஸாதாரணமென்பதாக எம்பெருமானார் காலத்திலேயே ப்ரஸித்தமாயிற்று. திருவாய்மொழியில் “பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பன்” என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரத்தில் ஆழ்வான் விஷயமாக அருளிச் செய்யப்பட்டதொரு ஐதிஹ்

யம் குறிக்கொள்ளத்தகும். மற்றும் பல இதிஹாஸங்களும் பன்னி யுரைக்குங்காற் பாரதமாம். ... ... .... (எ)

வருத்தும் புறவிருள்மாற்ற * எம்பொய்கைப்பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி * ஒன்றத்
திரித்தன் றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
யிருத்தும் பரமன் * இராமாநுசனெம் மிறையவனே. (அ)

| | |
|---|---|
| வருத்தும் | வருத்தத்தை யுண்டுபண்ணக் கூடிய |
| புறம் இருள் | பாஹ்ய விஷயங்களைப் பற்றின அஜ்ஞானமாகிற இருளை |
| மாற்ற | போக்குவதற்காக |
| எம் பொய்கைப் பிரான் | நமது குலத் தலைவரான பொய்கை யாழ்வார் |
| அன்று | முற்காலத்தில் |
| மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்ற திரித்து | வேதாந்தங்களிற் பதிந்துகிடக்கும் பொருள்களையும் செந்தமிழ்ச் சொற்களையுங் கூட்டி இரண்டையும் ஒன்று சேர ஒரு திரியாக்கி |
| எரித்த திரு விளக்கை | ஜ்வலிக்கச்செய்த (முதல் திருவந் தாதியாகிற) திருவிளக்கை |
| தன் திரு உள்ளத்தே | தமது திருவுள்ளத் திலே |
| இருத்தும் | வைத்துக்கொண் டிராநின்ற |
| பரமன் இராமா நுசன் | மஹாவைபவ சாலியான எம்பெருமானார் |
| எம் இறையவன் | நமக்கு ஸ்வாமி. |

* * *:—பகவத்பாகவத விஷயம் அந்தரங்க விஷயமென்றும், சப்தாதி விஷயங்கள் பாஹ்ய விஷயம் (அதாவது—புறவிஷயம்) என்றும் சொல்லப்படும். அந்த பாஹ்ய விஷயங்களைப்பற்றின அஜ்ஞாநாந்தகாரமானது புறவிருள் எனப்படும்; [புறம்பான விஷயங்களைப்பற்றின இருள் புறவிருள்] அவ்விருளானது முதலிலே ஸுகரூபம்போல் தோற்றினாலும் பிறகு மிக்க வருத்தத்தை

விளைக்கக்கூடியது; அப்படிப்பட்ட கொடிய இருளை அகற்றுவதற்காகப் பொய்கையாழ்வார் "வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்யகதிரோன் விளக்காக" என்று தொடங்கித் திருவந்தாதி திவ்ய ப்ரபந்தமென்னும் ஒரு விளக்கை ஏற்றியருளினார். அவ்விளக்குக்கு எதைத் திரியாக்கினார் என்றால், வேதாந்தங்களில் திரண்டு கிடக்கும் ஸாரப்பொருள்களையும் இனிய தமிழ்ச்சொற்களையும் ஒன்று சேர்த்துத் திரித்தார். அப்படிப்பட்ட திருவிளக்கை எம்பெருமானார் தமது திருவுள்ளத்தினுள்ளே எப்போதும் அணையாதபடி ஸ்தாபித்தருளினார்; அவரே அடியேனுக்கு ஸ்வாமி என்றாராயிற்று.

இருளை மாற்றுவதற்கு விளக்கு வேண்டியதாதலாலும் பொய்கையாழ்வாருடைய திவ்யப்ரபந்தம் இருளை மாற்றுவதாதலாலும் அஃது ஒரு திருவிளக்காக ரூபிக்கப்பட்டதென்க. மறையின் குருத்து=மறையின் முடிவாகிய வேதாந்தம். அன்று=திருக்கோவலிடைகழியில் "நீயுந் திருமகளும் நின்றாயால்" என்ற பாசுரத்தின்படி நெருக்குண்ட அக்காலத்திலே என்கை. பொய்கைப்பிரான் எரித்த திருவிளக்கைத் தம் திருவுள்ளத்தே இருத்துகையாவது— அவருடைய அருளிச்செயலை எப்போதும் சிந்தை செய்தல். (அ)

இறைவனைக்காணு மிதயத் திருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடி தாள்கள் * நெஞ்சத்
துறையவைத்தாளு மிராமாநுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்ன வைப்பவரே. (கூ)

| | |
|---|---|
| இறைவனை | ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை |
| காணும் | ஸாக்ஷாத் கரிப்பதற்கு உபகரணமான |
| இதயத்து | ஹ்ருதயத்திலுள்ள |
| இருள் | அஜ்ஞாநமாகிற அந்தகாரமானது |
| கெட | நசிக்கும்படியாக |

| | |
|---|---|
| ஞானம் என்னும் நிறை விளக்கு ஏற்றிய | ஞானமாகிற பூர்ண தீபத்தை ப்ரகாசிப்பித்தருளின இரண்டாந் திருவந்தாதியை அருளிச்செய்த |
| பூதத் திருவடி தாள்கள் | பூதத்தாழ்வாருடைய திருவடிகளை |
| நெஞ்சத்து | தமது திருவுள்ளத்திலே |

| | |
|---|---|
| உறைய வைத்து | சாச்வதமாக ஸ்தாபித்து |
| ஆளும் | (அவற்றையே) அநுபவிக்கின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானுருடைய |
| புகழ் | திவ்ய குணங்களை |
| ஓதும் | இடைவிடாது அநுஸந்திக்கின்ற |
| நல்லோர் | விலக்ஷண புருஷர்கள்தாம் |
| இந்த மண் அகத்தே | இப் பூமண்டலத்திலே |
| மறையினை | வேதங்களை |
| காத்து | ரக்ஷித்து |
| மன்ன வைப்பவர் | என்றைக்கும் அழிவில்லாதபடி ப்ரதிஷ்டாபனம் பண்ண வல்லவர்கள். |

* * *:—'ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்' என்னும் விருது இராமாநுசனுடையார்க்கே ஏற்குமென்கிறார்.—ஸர்வஸ்வாமியான எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்கு எல்லார்க்கும் உபகரணமாயிராநின்ற ஹ்ருதயமானது அஜ்ஞாநாந்தகாரத்தாலே இருண்டு கெட்டுப்போகாதபடி பரஜ்ஞாநமாகிற பூர்ணதீபத்தை ஏற்றினவரான பூதத்தாழ்வாருடைய திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலே இடைவிடாது வைத்துக்கொண்டு அவற்றையே அநுபவிக்கும் எம்பெருமானாருடைய குணகீர்த்தநமே போதுபோக்காக இருக்கும் விலக்ஷணர்யாரோ அவர்கள்தான் வேதத்தை நன்றாக ரக்ஷித்து இந்நிலவுலகத்தில் நிலைநிறுத்தவல்ல மஹான்கள் என்றாராயிற்று.—"ஞானமென்னும் நிறைவிளக்கேற்றிய" என்றவிடத்து, "ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு" என்ற பூதத்தாழ்வார்தம்முடைய அருளிச்செயல் நினைக்கத்தக்கது. இதயம்=ஹ்ருதயம் என்ற வடசொல் விகாரம். பூதத்தாழ்வார் ஏற்றிய ஞானமென்னும் நிறைவிளக்காவது—இரண்டாந் திருவந்தாதியாகிற அவருடைய அருளிச்செயல். பூதத்திருவடி=திருவடியென்று இங்கே ஸ்வாமிக்கு வாசகம்; பூதத்தாரென்னும் ஸ்வாமி என்றபடி. "திருவடி தன் நாமம் மறந்தும்" "நமரும் பெறலடிகள்" "என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" இத்யாதியான அருளிச்செயல் பிரயோகங்களைக் காண்க. [இந்த மண்ணகத்தே மறையினைக்காத்து மன்னவைப்பவர்] எம்பெருமானார் ஸம்பந்தம் பெறாத மற்றையோர்கள் "வேதம் ப்ராமாணமேயல்ல"

என்று சொல்லுவாரும், அதனைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டும் அபார்த்தங்கள் பண்ணுவாருமாய் இருப்பதால் அவர்கள் யாவரும் வேதமார்க்க வித்வம்ஸிகள் ; இராமாநுசனுடையார் தாம் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்கள் என்றபடி. ... (கூ)

மன்னியபேரிருள் மாண்டபின் * கோவலுள் மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமை காட்டும் * தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்று மிராமாநுசற் கன்பு பூண்டவர்தாள்
சென்னியிற்சூடும் * திருவுடையா ரென்றுஞ் சீரியரே. (கo)

மன்னிய — ஒருவராலும் பேர்க்க முடியாதபடி நிலைத்துநின்ற
பேர் இருள் — (அஜ்ஞாநமாகிற) பெருத்த இருளானது
மாண்டபின் — (முற்பட்ட ஆழ்வார்களிருவரும் ஏற்றின திருவிளக்காலே) நன்றாக நீங்கின பின்பு,
கோவலுள் ஆயனை — திருக்கோவலூரில் ஆயனை
மா மலராள் தன்னொடும் — பிராட்டியோடு கூட
கண்டமை — தாம் ஸேவித்த படியை
காட்டும் — ("திருக் கண்டேன்" இத்யாதி ப்ரபந்த முகத்தாலே) வெளியிட்டருளின
தமிழ் தலைவன் — தமிழ்க்குத் தலைவரான பேயாழ்வாருடைய
பொன் அடி — அழகிய திருவடிகளை
போற்றும் — புகழுமவரான
இராமாநுசற்கு — எம்பெருமானார் திறத்தில்
அன்பு பூண்டவர் — பக்தியையுடையவர்களினது
தாள் — திருவடிகளை
சென்னியில் சூடும் திரு உடையார் — சிரோ பூஷணமாகக் கொள்ளுஞ் செல்வமுடையோர்தாம்
என்றும் சீரியர் — என்றைக்கும் ஸ்ரீமான்கள்.

* * *:—பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் ஏற்றின இரண்டு திருவிளக்குகளாலும் இருள் நீங்கவே, " திருக்கண்டேன்

பொன்மேனி கண்டேன்" என்று திருக்கோவலூராயனாரைப் பிராட்டியோடேகூட ஸேவிக்கப் பெற்றார் பேயாழ்வார். தாம் அப்படி ஸேவித்ததாக மூன்றாந்திருவந்தாதி முகத்தால் வெளியிட்டருளின அவ்வாழ்வாருடைய திருவடிகளைத் துதிக்குமவரான எம்பெருமானார் திறத்தில் பக்தியையுடையவர்கள் யாரோ, அவர்களுடைய திருவடிகளைச் சிரோபூஷணமாகக் கொள்வதையே அழியாச் செல்வமாக நினைத்து ஸ்ரீராமாநுஜ பக்தர்களுடைய திருவடிகளைச் சிரமேற்கொள்ளுமவர்கள்தாம் நித்திய ஸ்ரீமான்கள் என்றாராயிற்று. "அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால் அரசாகவெண்ணேன் மற்றரசுதானே" என்று குலசேகரப் பெருமாளுக்கு ப்ரதம பர்வத்திலே உண்டான நிஷ்டை அமுதனார்க்கு சரமபர்வத்திலே உண்டானபடி. [ப்ரதமபர்வமாவது பகவத்விஷயம். சரமபர்வமாவது பாகவத விஷயம்.]

[கோவலுள் ஆயனை.] திருக்கோவலூரெம்பெருமான் க்ருஷ்ணாவதாரத்திலிருந்த ஆச்ரித பாரதந்திரிய மடங்கலும் தோற்ற ஸேவை ஸாதிக்கும்படியைப் பற்ற ஆயன் என்று திருநாமம் பெற்றான்; "திருக்கோவலூராயனார்" என்று ப்ரஸித்தி. இப்பாட்டில் பேயாழ்வார் "தமிழ்த்தலைவன்" என்று சிறப்பித்துக்கூறப்பட்டார். சீரியர்=சீர்மையுடையோர்; சீர்மையாவது ஸ்ரீமானாயிருக்கை. ... ... .... .... .... ... (௧௦)

சீரியநான்மறைச் செம்பொருள் * செந்தமிழா லளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள் * சரணாம் பதுமத்
தாரியல்சென்னி யிராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்தம்
காரியவண்மை* என்னால் சொல்லொணாதிக் கடலிடத்தே. (௧௧)

| | |
|---|---|
| சீரிய நால் மறை செம் பொருள் | சிறந்த நால்வேதங்களிலுள்ள செவ்விய பொருள்களை |
| செம் தமிழால் | அழகிய தமிழ்ப் பாசுரங்களினால் |
| அளித்த | அருளிச்செய்தவரும் |
| பார் இயலும் புகழ் | பூமியெங்கும் பொருந்தின புகழையுடையவருமான |
| பாண் பெருமாள் | திருப்பாணாழ்வாருடைய |

| | | | |
|---|---|---|---|
| சரண் ஆம் பதுமம் தார் இயல் சென்னி | திருவடிகளாகிற தாமரைப் பூவாலே அலங்கரிக்கப் பட்ட திரு முடியை யுடையரான | காரியம் வண்மை | அநுஷ்டாந வைலக்ஷண்ய மானது |
| இராமாநுசன் தன்னை | எம்பெருமானாரை | இக்கடல் இடத்து | கடல் சூழ்ந்த இப் பூமியில் |
| சார்ந்தவர் தம் | ஆச்ரயமாகப்பற்றி னவர்களுடைய | என்னால் சொல்ல ஒண்ணாது | (இப்படிப்பட்ட வைபவமுடைய தென்று) என்னால் சொல்லித் தலைக்கட்ட முடியாதது. |

* * *:—எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை யெல்லாம் விசதமாகப் பேசுகையாலே சிறந்தவையான நால்வேதங் களில் பொதிந்து கிடக்கும் நற்பொருள்களை "அமலனாதிபிரான்" என்னும் திவ்ய ப்ரபந்தத்தில் சுருக்கி அருளிச் செய்தவராய் நாடெங்கும் பரவின புகழையுடையரான திருப்பாணாழ்வாருடைய சரணாரவிந்தங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியை யுடையவ ரான எம்பெருமானாரை அடிபணிந்தவருடைய ஆசார வைல க்ஷண்யமானது என் வாய்கொண்டு வர்ணிக்க முடியாதபடி மிகவும் சிறந்தது என்றாராயிற்று.

சரண்=சரணமென்ற வடசொற் சிதைவு. பதுமம்=பத்ம மென்ற வடசொல் விகாரம். தார்=மாலைக்கும் பூவுக்கும் பெயர்; இங்கே பூவைச்சொல்லும். நான்காமடியில், "காரியல் வண்மை" என்ற பாடமும் உண்டு; கார் என்று மேகமாய், மேகங்கள் ஜல ஸ்தல விபாகம் பாராமல் நாடெங்கும் பரந்து தண்ணீரை வர்ஷித்து உபகரிக்குமாபோலே உலகமெல்லாந் திரிந்து ரஹஸ்யமான அர்த் தங்களைப்பொழிந்து நல்ல உபதேசங்களைச் செய்யுமவர்கள் இராமாநுசனடியார் என்றதாகிறது. ... ... (கக)

இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன் * இணையடிப்போ
தடங்குமிதயத் திராமாநுசன் * அம்பொற்பாத மென்றுங்
கடங்கொண் டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக் காதல்செய்யாத்
திடங்கொண்ட ஞானியர்க்கே * அடியேனன்பு செய்வதுவே. (கஉ

இடம் கொண்ட கீர்த்தி — பூமியெங்கும் வியாபித்த கீர்த்தியை யுடையரான
மழிசைக்கு இறைவன் — திருமழிசைப் பிரானுடைய
இணை அடி போது — உபயபாதாரவிந்தங்கள்
அடங்கும் — குடிகொண்டிருக்கப் பெற்ற
இதயத்து — திருவுள்ளத்தை யுடையரான
இராமாநுசன் — எம்பெருமானாருடைய
அம் பொன் பாதம் — மிகவும் அழகிய திருவடிகளை
என்றும் — எக்காலத்திலும்
கடம் கொண்டு இறைஞ்சும் திரு — 'இதுவே நமக்கு ஸ்வரூப'மென்கிற புத்தியோடே ஆச்ரயிக்கையாகிற செல்வத்தை யுடையரான
முனிவர்க்கு அன்றி — மஹான்களுக்குத் தவிர மற்றவர்களுக்கு
காதல் செய்யா — அன்பு பூண்டிராத
திடம் கொண்ட ஞானியர்க்கே — மிக்க உறுதியை யுடையரான ஞானிகளுக்குத் தான்
அடியேன் அன்பு செய்வது — அடியேன் பக்தனாயிருப்பேன்.

* * *:—உலகமெங்கும் பரவின புகழையுடையரான திருமழிசைப்பிரானுடைய பாதாரவிந்தங்கள் அடங்கியிருக்கப்பெற்ற திருவுள்ளத்தை யுடையரான எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகளை ஸ்வரூப ப்ராப்தத்வ புத்தியோடே அநவரதம் ஆச்ரயிக்கின்ற மஹா பாகவதர்கட்குத் தவிர வேறொருவர்க்கும் விதேயப்படாத மாஞானிகளுக்கே அடியேன் அன்பனாயிருப்பன் என்கிறார். இப்பாட்டால், 'ஸ்ரீராமாநுஜ பக்த பக்த பக்தன் அடியேன்' என்றாராயிற்று

கடங்கொண்டு=கடமையாகக்கொண்டு. .... (கஉ)

செய்யும் பசுந்துளவத் தொழில்மாலையும் * செந்தமிழிற்
பெய்யும் மறைத்தமிழ்மாலையும் * பேராத சீரரங்கத்
தையன் கழற்கணியும் பரன்தாளன்றி ஆதரியா
மெய்யன் * இராமாநுசன் சரணேகதி வேறெனக்கே. (கங)

செய்யும் — (தொண்டரடிப் பொடியாழ்வாராகிற தம்மாலே) செய்யப்பட்டதாய்
பசும் துளவம் — பசுமைதங்கிய திருத்துழாய் மயமாய்
தொழில் — வேலைப்பாடுகளை யுடைத்தான

| | |
|---|---|
| மாலையும் | பூமாலைகளையும் |
| செம் தமிழில் | அழகிய தமிழ்ப் பாஷையிலே |
| பெய்யும் | உண்டாக்கப் பட்டதாய் |
| மறை | வேதஸத்ருசமான |
| தமிழ் மாலையும் | திருமாலை திருப்பள்ளி யெழுச்சி யென்கிற திவ்ய ப்ரபந்தங்க ளாகிற சொல் மாலைகளையும் |
| போதசீர் அரங்கத்து ஐயன்கழற்கு அணியும் | நித்யஸித்தமான கல்யாண குணங்களை யுடையரான ஸ்ரீரங்க நாதனுடைய திருவடிகளிலே சாத்தினவரான |
| பரன் | தொண்டரடிப் பொடியாழ்வா ராகிற பெரியவருடைய |
| தாள் அன்றி ஆதரியா | திருவடிகளைத் தவிர மற்றொன்றையும் விரும்பாத |
| மெய்யன் | ஸத்யசீலரான |
| இராமாநுசன் | எம்பெருமானு ருடைய |
| சரணே | திருவடிகளே |
| எனக்கு | அடியேனுக்கு |
| வேறு கதி | விலக்ஷணமான ப்ராப்யவஸ்துவாம். |

* * *:—தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளை யன்றி மற்றொன்றில் ஆதரம் அற்றிருக்கிற எம்பெருமானார் திருவடிகளே நமக்கு சரணமென்கிறார் இதில்.

தொண்டரடிப்பொடியாழ்வார் ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் இரண்டு மாலைகளைச்செய்து ஸமர்ப்பித்தனரென்று சாபேக்ஷியாகச் சொல்லுகிறார் அமுதனார். "துளபத்தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி" என்றும், "தொடையொத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்றும் தாமே அருளிச்செய்தபடிக்குப் பொருந்தத் திருத் துழாய் மாலைகளையும், திருமாலை திருப்பள்ளியெழுச்சி யென்கிற திவ்ய ப்ரபந்தங்களாகிற சொல்மாலைகளையும் அரங்கத்தையன் கழல்களிலே ஸமர்ப்பித்தவரிறே தொண்டரடிப்பொடியாழ்வார்.

"துளபத்தெழில் மாலையும்" என்றும் சிலர் பாடங்கூறுவர்; துளபத்து—துளவிதழினாலாகிய, எழில் மாலை—அழகிய மாலை என்றபடி. இப்பாடம் அழகியதேயாயினும் வியாக்கியானத்தில் ஆதரிக்கப்பட்ட பாடமன்றாதலால் உபேக்ஷிக்கத் தக்கதென்க. (கரு)

கதிக்குப்பதறி * வெங்கானமுங் கல்லுங் கடலுமெல்லாங்
கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கையற்றேன் * கொல்லி
[காவலன்சொல்
பதிக்குங்கலைக் கவிபாடும்பெரியவர் பாதங்களே
துதிக்கும்பரமன் * இராமாநுச னென்னைச் சோர்விலனே. (கச)

| | |
|---|---|
| கொல்லி காவலன் | குலசேகரப் பெருமாளாலே அருளிச்செய்யப் பட்டதாய் |
| கலை சொல் பதிக்கும் | சாஸ்திரச் சொற்கள் அமையப் பெற்றதான |
| கவி | பெருமாள் திருமொழிப் பாசுரங்களை |
| பாடும் பெரியவர் | பாடுகின்ற பெரியோர்களது |
| பாதங்களே | திருவடிகளையே |
| துதிக்கும் | ஸ்தோத்ரம் செய்பவராய் |
| பரமன் | உத்க்ருஷ்டரான |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என்னை சோர்விலன் | என்னைவிட்டு நீங்குகிறாரில்லை; (ஆதலால்) |
| கதிக்கு பதறி | ப்ராப்ய லாபத்துக்காக விரைந்து |
| வெம் கானமும் கல்லும் | அத்யுஷ்ணமான காடுகளிலும் மலைகளிலும் |
| கடலும் | கடல்களிலும் (நின்றுகொண்டு) |
| எல்லாம் கொதிக்க | எல்லா அவயவங்களும் கொதிக்கும் படியாக |
| தவம் செய்யும் கொள்கை | தபஸ்ஸு பண்ணும் ஸ்வபாவத்தை |
| அற்றேன் | விட்டொழித்தேன். |

* * *:—ஸகல சாஸ்த்ரங்களின் ஸாரப்பொருள்களையும் திரட்டி ஸ்ரீ குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த பெருமாள் திருமொழி யென்னுந் திவ்யப்ரபந்தத்தை அநுஸந்திக்கின்ற பெரியவர்களது திருவடிகளையே போற்று மியல்வினரான எம்பெருமானார் வந்து தாமே என்னை ஸ்வீகரித்தாராதலால் இனி ஒருநாளும் அவர் அடியேனைக் கைவிடமாட்டார்; ஆனபின்பு நமக்கு ப்ராப்யம் வேறு ஒன்று மில்லாமையாலே, வநபர்வத ஸமுத்ர தீரங்களில் நின்று க்ரூரமாகச் செய்யும் தவங்களில் இனி எனக்கு அந்வய மில்லை யென்றாராயிற்று.

"எல்லாங் கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கை" என்றதற்கு—இவனுடைய தவத்தின் கொடுமையைக் கண்டு கானமும்

கல்லும் கடலும் பரிதபிக்கும்படியாக அந்தந்த ஸ்தலங்களிலே நின்று தபஸ்ஸு பண்ணும் ஸ்வபாவம் என்று பொருள் கூறுவாரு முளர்.

சோர்வு இலன்=பிரிவிலன் என்றபடி. .... ... (கச)

சோராதகாதல் பெருஞ்சுழிப்பால் * தொல்லைமாலை யொன்றும்
பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும் * பான்மையன்றாள்
பேராத வுள்ளத் திராமாநுசன்றன் பிறங்கியசீர்
சாராமனிசரைச் சேரேன் * எனக்கென்ன தாழ்வினியே?. (கரு)

| | | | |
|---|---|---|---|
| சோராத காதல் பெரு சுழிப்பால் | ஒருநாளும் குறைவுபடாத ப்ரேமத்தில் பெருஞ்சுழிப் படுகையாலே | தாள் பேராத உள்ளத்து | திருவடிகள் விட்டகலாத திருவுள்ளத்தை யுடையரான |
| | | இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய |
| தொல்லை மாலை ஒன்றும் பாராது | நித்யனை எம்பெருமான் படியைச் சிறிதும் நிரூபியாமல் | பிறங்கிய சீர் | மிக்க திருக் குணங்களை |
| அவனை | அவ்வெம்பெருமானை நோக்கி | சாரா | தங்களுக்கு அநுபாவ்யமாகக் கொள்ளாத |
| பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன் | பல்லாண்டு பல்லாண்டென்று மங்களாசாஸநம் பண்ணுகையையே நித்யஸ்வபாவமாக வுடையரான பெரியாழ்வாருடைய | மனிசரை | மநுஷ்யர்களை |
| | | சேரேன் | பற்றமாட்டேன்; |
| | | இனி | இப்படிப்பட்ட உறுதி பிறந்தபின்பு |
| | | எனக்கு என்ன தாழ்வு | அடியேனுக்கு என்னகுறை?. |

* * *:—பாண்டியராஜனுடைய பண்டித ஸபையில் எழுந்தருளி “எம்பெருமானே பரதத்துவம்” என்று ஸ்தாபநம் செய்து கிழியறுத்துவிட்ட காலத்து, அப்பாண்டியன் தம்மை யானைமே லேற்றி ஊர்வலம் வருவிக்கையில் தம் வைபவத்தைக் காணவந்து ஆகாசத்திலே கருடாரூடனாய் நின்ற திருமாலைச் சேவித்து அப் பெருமானிடத்துள்ள பெருங்காதலாலே ரக்ஷ்யபூதரான தம்மை யும் ரக்ஷகனை அவனையும் மறந்து, தம்மை ரக்ஷகராகவும் அவனை

ரக்ஷ்யனாகவு மெண்ணி அவனுக்குப் "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்" டென்று தொடங்கி மங்களாசாஸநம் செய்தருளின பெரியாழ்வாருடைய திருவடிகளையே அநவரதம் தியானித்தருளும் எம்பெருமானார் குணங்களைச் சிந்திக்கயில்லாத மனிசரோடு நான் ஸஹவாஸம் செய்யமாட்டேன்; இங்ஙனேவு பிறந்த பின் இனி எனக்கு ஒரு குறையுமில்லை—என்றாராயிற்று.

முன்னிரண்டடிகளிற் குறிக்கப்பட்டுள்ள சரிதையின் விரிவு பெரியாழ்வார் வைபவத்திற் காணத்தக்கது.

பிறங்கியசீர்=அளவற்ற குணங்கள் என்னவுமாம்; ப்ரகாசமான குணங்கள் என்னவுமாம். .... .... (கரு)

தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து * தலமுழுதுங் கலியே
ஆள்கின்றநாள் வந்தளித்தவன் காண்மின் * அரங்கர்மௌலி
சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல் * இராமாநுச னென்னும் மாமுனியே. (கசு)

| | |
|---|---|
| அரங்கர் | ஸ்ரீரங்கநாதனுடைய |
| மௌலி சூழ்கின்ற மாலையை | திருமுடியிலே சாத்தக்கடவதான பூமாலையை |
| சூடி கொடுத்தவள் | தனது திருக்குழலிலே அணிந்து வாஸிதமாக்கிக் கொடுத்தவளான ஆண்டாளுடைய |
| தொல் அருளால் | அவ்யாஜமான அருளாலே |
| வாழ்கின்ற | வாழ்பவரும் |
| வள்ளல் | உதாரருமான |
| இராமாநுசன் என்னும் மா முனி | ஸ்ரீராமாநுஜ முனியானவர் (எப்படிப்பட்டவரென்றால்) |
| தாழ்வு ஒன்று இல்லா மறை | ஒருகுறையுமில்லாதிருந்த வேதமானது |
| தாழ்ந்து | (குத்ருஷ்டிகளாலே) இழிவுபெற |
| தலம் முழுதும் | பூமியெங்கும் |
| கலியே ஆள்கின்ற நாள் | கலியே ஸாம்ராஜ்யம் பண்ணுகிற காலத்திலே |
| வந்து | இங்கே வந்தவதரித்து |
| அளித்தவன் காண்மின் | (அந்தவேதத்தை உத்தரிப்பித்து உலகத்தை) ரக்ஷித்தருளினவர். |

[illegible]*:—ப்ரமாணங்களிற் சிறந்து உத்துங்கமாயிருந்த வேதமானது பாஹ்யகுத்ருஷ்டிகளால் தாழ்வுபெற்றுக் கலிபுருஷனே

செங்கோல் செலுத்திக் கிடந்த காலத்திலே வந்து திருவவதரித்தருளி அக்கலியைக்கெடுத்து வேதத்தை நிலைநிறுத்தின மஹாநுபாவர் காண்மின் எம்பெருமானார்.

அரங்கர்மௌளி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்த வரலாறு ஆண்டாள் வைபவத்திற் காணத்தக்கது. சூடிக்கொடுத்த நாச்சியாருடைய பரமக்ருபைக்குப் பாத்ரபூதர் எம்பெருமானார் என்றதாயிற்றுப் பின்னடிகளால். ... .... (கசு)

முனியார்துயரங்கள் முந்திலும் * இன்பங்கள் மொய்த்திடினுங்
கனியார்மனம் கண்ணமங்கை நின்றானை * கலைபரவும்
தனியானையைத் தண்டமிழ்செய்த நீலன்றனக் குலகி
லினியானை * எங்க ளிராமாநுசனை வந்தெய்தினரே. (கஎ)

| | | | |
|---|---|---|---|
| கலை பரவும் தனி ஆனையை | ஸகல சாஸ்த்ரங்களாலும் துதிக்கப்படுகிற அத்விதீயமான மத்தகஜம் போன்ற | இனியானை | ப்ரேமமுடையவராய் |
| கண்ணமங்கை நின்றானை | திருக்கண்ணமங்கையிலே நிற்கும் பத்தராவிப் பெருமானைக் குறித்து | எங்கள் | எங்களுக்குத் தலைவரான |
| உலகில் | இவ்வுலகில் | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| தண் தமிழ் செய்த | ஸம்ஸார தாபஹரமான திவ்ய ப்ரபந்தத்தைச் செய்தருளின | வந்து எய்தினர் | வந்துபணிந்த மஹான்கள் |
| நீலன் தனக்கு | திருமங்கையாழ்வார் பக்கல் | துயரங்கள் முந்திலும் முனியார் | தாபத்ரயம் செறிந்தாலும் வருத்தப்பட மாட்டார்கள்; |
| | | இன்பங்கள் மொய்த்திடினும் மனம் கனியார் | ஸுகங்கள் செறிந்தாலும் களிப்படைய மாட்டார்கள். |

* * *:—ஸகல சாஸ்த்ரப்ரதிபாத்யனான எம்பெருமானைத் தம்முடைய திவ்யப்ரபந்தங்களிலே அமைத்துப் பாடின திருமங்கையாழ்வார்க்கு அந்தரங்க பக்தரான எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் ஸுகதுக்கங்கள் மேலிடுங்காலத்தில் மற்ற ஸம்ஸாரி

களைப்போல் ஹர்ஷ சோகங்களை யடையாமல் எவ்வித விகாரமும் அற்றிருப்பர்கள்; நீங்களும் ஹர்ஷ சோகங்களில் கலங்கவேண்டா என்றபடி.

“துயரங்கள் முந்திலும் முனியார், இன்பங்கள் மொய்த்திடினும் மனங்கனியார்”=“களிப்பும் கவர்வுமற்று” என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே நிர்விகாரராயிருப்பவர்கள் என்கை. ஒரு காலணா கையில் கிடைத்துவிட்டால் தலை நாறிப்போவதும், ஒற்றைக்காசை இழந்துவிட்டால் நிலைகலங்கிப் போவதுமாயிறே ஸம்ஸாரிகளின்படி யிருப்பது; ஸ்ரீராமாநுஜ பக்தர்கள் அப்படி இருக்கமாட்டார்கள்; ஸுகம் வந்தகாலத்தும் துக்கம் வந்தகாலத்தும் ஒருபடிப்பட்ட மனநிலையை யுடையராகவே யிருப்பர்கள் என்றவாறு.

கண்ணமங்கை நின்றானை=திருக்கண்ணமங்கையைச் சொன்னது மற்றுள்ள எல்லாத் திருப்பதிகட்கும் உபலக்ஷணம்; பல திருப்பதிகளிலும் புக்குக் கவிபாடின கலியன் என்றபடி. நீலன்= திருமங்கையாழ்வாருடைய திருநாமங்களில் ஒன்று. ... (கஎ)

எய்தற்கரிய மறைகளை * ஆயிர மின்தமிழாற்
செய்தற்குலகில் வருஞ் சடகோபனை * சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர் சீரை யுயிர்களெல்லாம்
உய்தற் குதவும் * இராமாநுசனெம் முறுதுணையே. (கஅ)

| | | | |
|---|---|---|---|
| எய்தற்கு அரிய மறைகளை | அதிகரிக்க முடியாத (அளவற்ற) வேதங்களை | பெய்தற்கு இசையும் | த்யானிப்பதற்கு இணங்கின |
| இன் தமிழ் ஆயிரத்தால் | இனியதமிழாலாகிய ஆயிரம் பாசுரங்களினால் | பெரியவர் | ஸ்ரீமதுரகவிகளுடைய |
| செய்தற்கு | அருளிச் செய்வதற்காக | சீரை | ஜ்ஞாநாதி குணங்களை |
| உலகில் வரும் | இவ்வுலகில் வந்தவதரித்த | உயிர்கள் எல்லாம் உய்தற்கு உதவும் | ஸகலாத்மாக்களும் உஜ்ஜீவிக்குமாறு உபகரித்தருளாநிற்கிற |
| சடகோபனை | நம்மாழ்வாரை | இராமாநுசன் | எம்பெருமானார் |
| சிந்தை உள்ளே | தமது ஹ்ருதயத்தினுள்ளே | எம் உறு துணை | எமக்கு உற்றதுணை. |

* * *:—எம்பெருமானார் தாம் நமக்கு உற்றதுணை. அவர் எப்படிப்பட்டவரென்னில், ஸ்ரீ மதுரகவிகளுடைய திருக்கல்யாண குணங்களைப் பரக்க உபந்யஸித்தருளி ஸகலாத்மாக்களையும் உஜ்ஜீவிக்கச் செய்பவர்; அந்த மதுரகவிகள் எப்படிப்பட்டவர்;—நம்மாழ்வாரையே ஸர்வகாலமும் ஹ்ருதயத்திலே வைத்துச் சிந்திப்பவர். அவ்வாழ்வார் எப்படிப்பட்டவர்?—அநந்தங்களாகையாலே அத்யயநம் செய்வதற்கு அரியவையான வேதங்களிற் பொதிந்து கிடக்கும் ஸாரப்பொருள்களை இனிய தமிழ்ப் பாசுரங்களாலே வெளியிட்டருள்வதற்காக இந்நிலத்திலே திருவவதரித்தவர்.

வேதந் தமிழ்செய்த மாறன்சடகோபனையே வாழ்த்தும் ஸ்ரீ மதுரகவிகளின் பக்தரான எம்பெருமானார் நமக்கு உற்றதுணை யென்றாராயிற்று. இப்பாட்டில் ஸ்ரீமதுரகவிகள் பெரியவர் என்று சிறப்பித்துக் கூறப்பட்டமை நோக்கத்தக்கது. "புவியு மிருவிசும்பும் நின்னகத்த, நீ யென் செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய் அவிவின்றி, யான் பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியாயுள்ளு" [பெரிய திருவந்தாதி] என்று பெரிதான பரப்ரஹ்மத்தை உள்ளடக்கின பெரியவரையும் [—நம்மாழ்வாரையும்] உள்ளடக்கின பெரியவரிறே மதுரகவிகள். (கஅ)

உறுபெருஞ் செல்வமுந் தந்தையுந் தாயும் * உயர்குருவும்
வெறிதருபூமகள் நாதனும் * மாறன் விளங்கியசீர்
நெறிதருஞ் செந்தமிழாரணமே யென்றிந் நீணிலத்தோர்
அறிதரநின்ற * இராமாநுச னெனக் காரமுதே. (கக)

| | |
|---|---|
| உறு பெரு செல்வமும் | சிறந்த பெரிய ஸம்பத்தும் |
| தந்தையும் தாயும் | மாதா பிதாக்களும் |
| உயர் குருவும் | ஸதாசார்யனும் |
| வெறி தரு பூ மகள் நாதனும் | மணம் மிக்க பூவைப் பிறப்பிடமாக வுடைய பெரிய பிராட்டியாருக்குக் கொழுநனான ஸர்வேச்வரனும் (ஆகிய எல்லாம்) |
| மாறன் விளங்கிய சீர் நெறி தரும் செம் தமிழ் ஆரணமே என்று | நம்மாழ்வார் (தமக்கு) ப்ரகாசித்த பகவத் குணங்களின் அடைவே அருளிச்செய்த செந்தமிழ் வேதமே யென்று |

| | | | |
|---|---|---|---|
| இ நீள் நிலத்தோர் அறிதர நின்ற | இப்பெரிய வுலகிலுள்ளார் யாவரும் அறியும்படி நின்ற | இராமாநுசன் | எம்பெருமானார் |
| | | எனக்கு | அடியேனுக்கு |
| | | ஆர் அமுது | பரமபோக்யர். |

* * *:—எம்பெருமானார் தாம் நமக்குப் பரமபோக்யர்; அவர் எப்படிப்பட்டவரென்னில்;—'நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிதான் நமக்கு ஸர்வஸ்வம்' என்கிற அத்யவஸாய முடையவர். அன்னவர் திறத்து அடியேன் அநந்ய போக்யத்வ புத்தியையுடையேன் என்றாராயிற்று.

"மாதா பிதா யுவதய:" என்ற ச்லோகத்தினால் ஆளவந்தார் நம்மாழ்வாருடைய திருவடிகளையே ஸர்வஸ்வமாகக் கொண்டபடி சொல்லிற்று; இப்பாட்டால், எம்பெருமானார் நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை ஸர்வஸ்வமாகக் கொண்டபடி சொல்லுகிறது.

மாறன் விளங்கிய சீர்நெறிதரும் செந்தமிழாரணம்=திருவாய்மொழியில் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திவ்ய குணத்தை வெளியிட்டிருக்கிறார்; அது வெளியிட்டவாறு என்னென்னில், எம்பெருமான் ஆழ்வார்க்கு எந்த க்ரமமாகக் குணங்களை அநுபவிப்பித்தானோ அந்த க்ரமமாகவே இவர் வெளியிட்டாரென்க. ... ... .... (கக)

ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் * அமுதத் திருவாய்
ஈரத்தமிழி னிசையுணர்ந்தோர்கட்கு * இனியவர்தஞ்
சீரைப்பயின்றுய்யுஞ் சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் * இராமாநுசனென்றன் மாநிதியே. (உ௰)

| | | | |
|---|---|---|---|
| ஆரம் பொழில் | சந்தனச் சோலைகளை யுடைய | ஈரம் தமிழின் இசை | ஈரச்சொல்லாகிய திருவாய்மொழியின் இசையை |
| தென் குருகை | அழகிய திருக்குருகூரிலே (அவதரித்த) | உணர்ந்தோர்கட்கு | அறிந்தவர்களுக்கு |
| பிரான் | மஹோபகாரகரான ஆழ்வாருடைய | இனியவர் தம் | இஷ்டராயிருப்பவர்களுடைய |
| அமுதம் திருவாய் | பரமபோக்யமான திருப்பவளத்தில் பிறந்த | சீரை | குணங்களை |
| | | பயின்று | அப்யஸித்து |

உய்யும் சீலம் கொள் — ஸத்தை பெறும் சீலத்தை யுடையரான
நாதமுனியை — நாதமுனிகளை
நெஞ்சால் — தம் திருவுள்ளத்தாலே
வாரி பருகும் — அபி[..]சத்தோடு அனுப[..]விக்கின்ற
இராமாநுசன் — எம்பெருமானார்
என் தன் மா நிதியே — எனக்கு அக்ஷயமான நிதி.

* * *:—எம்பெருமானார் தாம் நமக்கு அக்ஷயமான தனம்; அவர் எப்படிப்பட்டவர்?—ஸ்ரீமந் நாதமுனிகளை ஹ்ருதயத்திலே வைத்துப் பரம ப்ரேமத்துடனே சிந்திப்பவர். அந்த நாதமுனிகள் எப்படிப்பட்டவர்?—நம்மாழ்வாருடைய அதிமதுரமான திருவாய்மொழியை (முாநம்) காநம் முதலிய ஸகல லக்ஷணங்களோடும் அறிந்தவர்கள் விஷயத்தில் ப்ரீதியையுடையார் யாரோ, அவர்களுடைய குணங்களை யநுஸந்தித்து உஜ்ஜீவிப்பவர். ... (உ0)

நிதியைப்பொழியும் முகிலென்று * நீசர்தம் வாசல்பற்றித்
துதிகற்றுலகிற் றுவள்கின்றிலே னினி * தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத் துறைவ னிணையடியாம்
கதிபெற்றுடைய * இராமாநுச னென்னைக் காத்தனனே. (உக)

தூய் நெறி சேர் எதிகட்கு — பரிசுத்தமான அனுஷ்டானமுடைய யதிகளுக்கு
இறைவன் — தலைவரான
யமுனைத் துறைவன் — ஆளவந்தாருடைய
இணை அடி ஆம் கதி — உபய பாதங்களாகிற ப்ராப்யத்தை
பெற்று — பெற்று (அதனாலே)
உடைய — உலகத்தார்க்கெல்லாம் ஸ்வாமியாயிருக்கிற
இராமாநுசன் — எம்பெருமானார்
என்னை காத்தனன் — என்னை ரக்ஷித்தருளினார்; (ஆனபின்பு)
இனி — இனிமேல்,—
நிதியை பொழியும் முகில் என்று — "நிதிகளை வர்ஷிக்கிற மேகமே!" என்று
துதி கற்று — ஸ்தோத்ரங்களைப் பண்ணிக்கொண்டு
உலகில் — இவ்வுலகத்தில்
நீசர் தம் — நீசராயிருப்பவருடைய
வாசல் பற்றி — வாசலைப்பற்றிநின்று
துவள்கின்றிலேன் — வருந்தமாட்டேன்.

* * *:—நேற்றுவரையிலும் நான் கண்டபேர்களுடைய வாசற்கடைகளிலும் போய் நின்று வாயைக்காட்டி வயிற்றைக்காட்டி

"மஹாநிதிகளைப் பொழிகின்ற மேகமே!" என்று பொய்யான நரஸ்துதிகளைச் செய்து துவண்டேன்; இன்று முதல் எந்நாளும் இனி நான் அவ்வாறு துவளமாட்டேன்; ஒரு நீசனுடைய வாசலையும் பற்றமாட்டேன்.

அமுதனாரே! இன்று உமக்கு வந்த அதிசயம் என்ன ?; இன்று உமக்குச் செல்வம் விஞ்சியதோ?. எத்தாலே நீர் இங்ஙனே மார்பு தட்டிச் சொல்லுகிறீர்?

இன்று நான் எம்பெருமானாருடைய ஸம்ரக்ஷணைக்கு ஆளாய் விட்டேன்; அவரோ, எதிகளுக்குத் தலைவரான ஆளவந்தாருடைய ஸம்ரக்ஷணையைப் பெற்று உய்ந்தவர். அன்னவராலே ஸம்ரக்ஷிக்கப் பெற்றேனானபின்பு இனிநான் எதுக்காக ஒருநீசன் வாசலைப் பற்றித் துவளவேண்டும்!; துவள்கின்றிலேனினி. .... (உக)

கார்த்திகையானுங் கரிமுகத்தானும் * கனலும் முக்கண்
மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு * மூவுலகும்
பூத்தவனேயென்று போற்றிட வாணன் பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும் * இராமாநுச னென்றன் சேமவைப்பே. (உஉ)

கார்த்திகையானும் — ஸுப்ரஹ்மண்யனும்
கரிமுகத்தானும் — கணபதியும்
கனலும் — (அவர்களுக்குத் துணையாய் வந்த) அக்நியும்
முக்கண் மூர்த்தியும் — சிவனும்
மோடியும் — துர்க்கையும்
வெப்பும் — ஜ்வரதேவதையும்
முதுகு இட்டு — முதுகுகாட்டி ஓடிப் போனபின்பு (அநந்யகதியான பாணாஸுரனைவன்)
மூ உலகும் பூத்தவனே என்று போற்றிட — "மூன்று உலகங்களையும் திருநாபிக் கமலத்திலே உண்டாக்கின பெருமானே!" (என்னைக் காத்தருள்) என்று போற்ற
வாணன் பிழை பொறுத்த — (அந்த) பாணாஸுரனுடைய அபராதத்தை க்ஷமித்தருளின
தீர்த்தனை — பாவநனான ஸர்வேச்வரனை
ஏத்தும் — நித்யம் துதிக்கின்ற
இராமாநுசன் — எம்பெருமானார்
என் தன் சேமவைப்பு — எனக்கு ஆபத்தநம்.

* * *:—"ஐச்வர்யம் சங்கராதிச்சேத் ஆரோக்யம் பாஸ்கராத் ததா." [ஐச்வர்யம் சங்கராதிச்சேத் ஆரோக்யம் பாஸ்கராத் ததா-சிவன் பக்கல் செல்வம்பெற விரும்பவேண்டும்; ஸூர்யன் பக்கல் ஆரோக்யம் பெற விரும்பவேண்டும்] என்று ஸாமாந்யமாகச் சிலர் சொல்லுவதுண்டே; அதனைக்கொண்டு ஒருவன் அமுதனாரை நோக்கி 'ஐய! நீர் எம்பெருமானாரைப் பற்றினால் உம்முடைய தாரித்ரியம் நீங்குமோ? சிவனைப் பற்றினாலன்றோ செல்வம் மிகும்' என்றுகூற; அந்தச் சிவன்பட்ட பரிபவங்களை விளக்கும் ஒரு இதிஹாஸத்தைப் பரக்கப்பேசிக் கொண்டு, 'எம்பெருமானார்தாம் எனக்கு ஆபத்தனம்' என்கிற திண்ணிய அத்யவஸாயத்தை உறுத்திக் கூறுகின்றார் இதில்.

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒரு காலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டுகைகளால் மத்தளந்தட்ட, சிவபெருமான் அருள்கூர்ந்து அவனுக்கு ஆயிரங் கைகளையும் நெருப்புமதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலிற் காவல்செய்திருத்தல் முதலிய வரங்களையுந் தந்தருளினன்; அந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு, 'அவனைப் பெறுதற்கு உபாயம் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தஃபுரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்த பாணாஸுரன் தன் சேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்த்ரத்தினாற் கட்டிப் போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரதமாமுனிவனால்

இவ்வாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரியதிருவடியை நினைத்தருளி, உடனேவந்துநின்ற அக்கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூட பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல் செய்துகொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுத் தன்னோடு யுத்தஞ் செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி இதன் சக்தியினாலே அதனைத்துரத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசரராகையாற் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் த்வம்ஸம்பண்ணி, பாணாஸுரனோடு போர்செய்யத் தொடங்க அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலிய பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர், அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமமான ஸுதர்சநாழ்வானையெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாக விருக்கையில் பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தாழ்வானுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, கண்ணபிரான் திருவுள்ளமுகந்து த்வாரகைக்கு மீண்டெழுந்தருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது. ... ... ... ... .... (உஉ)

வைப்பாய வான்பொருளென்று * நல்லன்பர் மனத்தகத்தே
எப்போதும் வைக்கு மிராமாநுசனை * இருநிலத்தில்
ஒப்பாரிலாத வுறுவினையேன் வஞ்ச நெஞ்சில்வைத்து
முப்போதும் வாழ்த்துவன் * என்னாமிதுவவன் மொய்புகழ்க்கே?

| | |
|---|---|
| நல் அன்பர் | விலக்ஷண பக்தி யுடையவர்கள் |
| வைப்பு ஆய வான் பொருள் என்று | " எம்பெருமானார் தாம் நமக்கு ஆபத்ரக்ஷகமான அக்ஷய தநம் " என்று கொண்டு |
| மனத்தகத்தே | தங்கள் ஹ்ருதயத்திலே |
| எப்போதும் வைக்கும் | எப்போதும் த்யானிப்பதற்கு விஷயமான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| இரு நிலத்தில் | இந்தப் பெரிய வுலகத்திலே |
| ஒப்பார் இலாத உறுவினையேன் | ஒப்பற்ற மஹாபாபியான அடியேன் |
| வஞ்சம் நெஞ்சில் வைத்து | (என்னுடைய) க்ருத்ரிமமான நெஞ்சிலே வைத்து |
| முப்போதும் வாழ்த்துவன் | ஸர்வகாலமும் ஏத்தா நின்றேன் ; |
| இது | மிகப்பெரிய அவரை நீசனாகிய நான் வாழ்த்துகை யாகிற இது |
| அவன் | அவ்வெம்பெருமானாருடைய |
| மொய் புகழ்க்கு | சிறந்த கீர்த்திக்கு |
| என் ஆம் | என்னாகுமோ ? [அவத்யமாமே?.] |

* * * :—" வளவேழுலகின் முதலாய " என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் நைச்யாநுஸந்தாநம் பண்ணினது போல, இப்பாட்டில் இவ்வமுதனாரும் நைச்யாநுஸந்தாநம் பண்ணுகிறார்.

எம்பெருமானார் எப்படிப்பட்டவர் ?—அவர் தம்மையே நிதியாகப்பற்றின விலக்ஷணபக்தியுக்தரான ஆழ்வான் ஆண்டான் முதலான மஹாபுருஷர்களாலே சிந்தைசெய்யப்படுபவர். அப்படிப்பட்ட விலக்ஷண பக்தி எனக்குண்டோ ? இல்லை ; கள்ளங்கவடு பொருந்திய நெஞ்சையுடையேன் நான் ; என்னைப்போன்ற மஹாபாபி எவ்வுலகிலுமில்லை ; நானோ அவ்வெம்பெருமானாரைத் துதிப்பதற்கு அர்ஹன் !, ஸர்வாத்மநா அடியேன் அநர்ஹன். அப்படியிருந்தும் என்னை நான்மறந்து அவரை வாழ்த்தத் தலைப்பட்டேனே ; அவருடைய சிறந்த கீர்த்திக்கு என்னுடைய வாழ்த்து அவத்யகரமாகுமே ! ஐயோ ! அநியாயம் பண்ணிவிட்டேனே !! என்று அலமருகின்றார். இங்ஙனே பேசுவதும் ஒருவகை ஸ்தோத்ர ப்ரணாளி என்றுகொள்க. .... .... .... (உரு)

மோய்த்தவெந் தீவினையால் பல்லுடல்தோறும் மூத்து* அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம்* இன்று கண்டுயர்ந்தேன்
பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள் நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து * இராமானுச னென்னும் கார்தன்னையே.

முன நாள்கள் எல்லாம் { கீழ்க்கழிந்த அநாதி காலமெல்லாம்
பல் உடல் தொறும் { பலபல சரீரங்கள் தோறும்
மொய்த்த வெம் தீ வினையால் மூத்து { ஆத்மாவை மொய்த்துக் கொண்டிருக்கிற அதிக்ரூரமான கர்மத்தாலே கிழத்தனம் வருமளவும் வாஸஞ்செய்து
அதனால் அத்தாலே
எய்த்து ஒழிந்தேன் { மிக்க பரிதாப மடைந்தேன்;
பொய் தவம் போற்றும் புலைச் சமயங்கள் { கபடமான அநுஷ்டானங்களை நடத்திப் போருகிற நீச மதஸ்தர்கள்
நிலத்து அவிய { இந்நில வுலகத்திலே வேரற் றொழியும்படி
கைத்த நிரஸித்தருளின
மெய் ஞானத்து { உண்மைஞான முடையரான
இராமாநுசன் என்னும் கார் தன்னை { எம்பெருமானாகிற காளமேகத்தை
இன்று கண்டு { இன்று அடியேன் ஸேவிக்கப்பெற்று
உயர்ந்தேன் சிறந்தவனானேன்.

* * *:—நெடுநாளாக ஸம்ஸாரத்திலிருந்து பலபல கருமங்களைப்பண்ணி, அக்கருமங்களின் பலனாகப் பலபல பிறவிகளிற் பிறந்து படாதனபட்டு இப்படியாகவே அநேக பர்யாயம் அவஸந்நனாய்க் கிடந்தேன் நான்; இப்பொழுது, பரம உதாரரான எம்பெருமானார் இப்பூமியிலவதரித்துப் பல துர்மதங்களை வேரறுத்தொழித்ததுபோல எனது கருமங்களையும் வேரறுத்தொழித்துத் தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே தம்மைக்காட்டியருளக், கண்டு க்ருதார்த்தனானேனென்கிறார்.

பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள்=ராவண ஸந்யாஸம், காலநேமிஜபம் முதலியவைபோலே மதாந்தரஸ்தர்கள் க்ருத்ரிமமான ஆசாரங்களை அனுட்டிப்பார்களென்க. மெய்ஞ்ஞானத்திராமாநுசன்—"யதார்த்தம் ஸர்வவிஜ்ஞாநம்" என்று ஸ்தாபித்தருளினவரிறே எம்பெருமானார். .... .... .... (உச)

காரேய் கருணை யிராமாநுச * இக்கடலிடத்தில்
ஆரே யறிபவர் நின்னருளின்தன்மை * அல்லலுக்கு
நேரேயுறைவிடம் நான்வந்து நீயென்னை யுற்றபின்உன்
சீரே யுயிர்க்குயிராய் * அடியேற்கின்று தித்திக்குமே (உரு)

| | | | |
|---|---|---|---|
| கார் ஏய் கருணை இராமாநுச ! | மேகத்தையொத்த கருணையை யுடைய எம் பெருமானாரே ! | உன் சீரே | தேவரீருடைய கல்யாண குணங்களே |
| நான் | அடியேன் | உயிர்க்கு உயிர் ஆய் | ஆத்மாவுக்கு தாரகமாய் |
| அல்லலுக்கு நேரே உறைவு இடம் | துக்கங்களுக்கு நேரே வாஸஸ்தானமா யிருப்பவன் ; | அடியேற்கு | அடியேனுக்கு |
| என்னை | இப்படிப்பட்ட அடியேனை | இன்று தித்திக்கும் | இன்று ரஸியா நின்றது ; |
| நீ வந்து உற்றபின் | தேவரீர் தாமாகவே ஸ்வீகரித் தருளினபின்பு | நின் அருளின் தன்மை | தேவரீருடைய க்ருபையின் ஸ்வபாவத்தை |
| | | இ கடல் இடத்தில் | கடல்சூழ்ந்த இப் பூ மண்டலத்தில் |
| | | ஆரே அறிபவர் | அறியக் கூடியவர்கள் ஆருமில்லை. |

* * *:—ஜலஸ்தலவிபாகம் பாராமல் ஸர்வத்ர ஸமமாக வர்ஷிக்கின்ற மேகம்போலே, தாழ்ந்தோர் உயர்ந்தோர் என்னும் வாசி பாராமல் எல்லார்திறத்தும் அருள் புரிகின்ற எம்பெருமானாரே! மிகக்கொடிய துக்கங்களுக்கெல்லாம் இருப்பிடமான என்னை தேவரீர் தாமே வந்து விஷயீகரித்தபின்பு தேவரீருடைய திருக்கல்யாண குணங்களே எனக்குப் பரமபோக்யமாய் ஆத்மதாரகமுமாய் விட்டது. தேவரீர் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்னுமிடத்தை இவ்வுலகில் உள்ளபடியே ஒருவருமறியார்கள். .... (உரு)

திக்குற்றகீர்த்தி யிராமாநுசனை * என் செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கிய மேகத்தை * மேவும்நல்லோர்
எக்குற்றவாள ரேதுபிறப் பேதியல்வாக நின்றோர்
அக்குற்ற மப்பிறப்பு * அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே.

| | | | |
|---|---|---|---|
| என் செய் வினை ஆம் | என்னாலே செய்யப்பட்ட வினையாகிற | மெய் குற்றம் நீக்கி | நிலைநின்ற தோஷங்களைப் போக்கி |

| | | | |
|---|---|---|---|
| விளங்கிய | (இவனுடைய தோஷங்களைப் போக்கப் பெற்றோ மென்னும் மகிழ்ச்சியாலே) உஜ்வலரான | எது பிறப்பு | யாதொரு ஜன்மத்தை யுடையராகவும் |
| மேகத்தை | பரம உதாரராய் | எது இயல்வு ஆக | யாதொரு சரிதையை யுடையராகவும் |
| திக்கு உற்ற கீர்த்தி | திசைகள்தோறும் விரிந்த புகழை யுடையரான | நின்றோர் | முன்பு நின்றார்களோ, |
| இராமாநுசனை | எம்பெருமானாரை | அக் குற்றம் | அந்தக் குற்றமும் |
| மேவும் | பொருந்தி யிருக்கின்ற | அப் பிறப்பு | அந்த ஜன்மமும் |
| நல்லோர் | விலக்ஷணர்கள் | அ இயல்வே | அந்த சரிதையுமே |
| எக் குற்றவாளர் | யாதொரு குற்றத்தை யுடையராகவும் | நம்மை | நம்மை |
| | | ஆள் கொள்ளும் | அடிமைப்படுத்திக் கொள்ளவற்று. |

* * *ஃ—என் பாவங்களைப் போக்கிப் பெரும்புகழ்படைத்த பரமோதாரரான எம்பெருமானாரை அடிபணிந்தவர்கள், அடிபணிவதற்கு முன்பு யாதொரு குற்றத்தை யுடையராகவும் யாதொரு ஜன்மத்தை யுடையராகவும் யாதொரு நடத்தையை யுடையராகவும் இருந்தார்களோ, அந்தக் குற்றமே அந்த ஜன்மமே அந்த நடத்தையே நம்மை ஆட்படுத்திக்கொள்ளா நின்றது—என்கிறவிதற்குக் கருத்து என்னென்னில்; ‘இவ்விதமான இழிதொழிலும் இழிகுலமும் அறிவின்மையுமான இவற்றையுடைய நாமும் இவர்களைப்போல் எம்பெருமானாரை அடிபணிந்து உஜ்ஜீவிக்கலாம்’ என்று நம்போலியர்க்கு ஒரு தைரியத்தை உண்டாக்குவதற்காகவே அந்த மஹான்கள் அப்படி ஜ்ஞாநவ்ருத்த வம்சங்களால் நிஹீநராயிருந்து காட்டினார்கள் என்கிற அத்யவஸாய விசேஷத்தைக் காட்டுவதே இப்பாட்டின் கருத்து. அவர்களுடைய ஜாதி முதலியவை ஏதாயினும் அவர்களெல்லாரும் அப்படியே நமக்கு உத்தேச்யர்கள் என்று காட்டியவாறுமாம். .... (உசா)

கொள்ளக் குறைவற்றிலங்கி * கொழுந்துவிட் டோங்கியவுன்
வள்ளற்றனத்தினால் வல்வினையேன் மனம் நீபுகுந்தாய் *
வெள்ளைச் சுடர்விடுமுன்பெருமேன்மைக் கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும் * இராமாநுசவென் தனி நெஞ்சமே. (உஎ)

இராமாநுச — எம்பெருமானாரே!,
கொள்ள குறைவு அற்று இலங்கி — கொள்ளக்கொள்ளக் குறையாமல் தானே விளங்கி
கொழுந்து விட்டு ஓங்கிய — மேன்மேலும் இளகிப் பதித்து வளர்ந்திருப்பதான
உன் வள்ளல் தனத்தினால் — தேவரீருடைய ஔதார்ய குணத்தாலே
வல் வினையேன் மனம் — மஹாபாபியான எனது நெஞ்சிலே
நீ புகுந்தாய் — (தேவரீருடைய பெருமை பாராதே) வந்து புகுந்தருளிற்று;
இது — (வஸிஷ்டன் சண்டாள க்ருஹத்தில் புகுந்தாற்போலே) புகுந்தவிது,
வெள்ளை — பரிசுத்தமாய்
சுடர் விடும் — விளங்காநின்றுள்ள
உன் பெரு மேன்மைக்கு — தேவரீருடைய ப்ரபாவத்திற்கு
இழுக்கு என்று — அவத்யாவஹம் என்று
என் தனி நெஞ்சம் — எனது துணையற்ற நெஞ்சானது
தள்ளுற்று இரங்கும் — தளர்ந்து ஈடுபடாநின்றது.

* * *:—ஸ்வாமிந்! தேவரீருடைய பெருமையையும் அடியேனுடைய சிறுமையையும் சிறிதும் பாராமல் "இவன் நம் அடியார் விஷயத்திலே சபலனாயிருப்பானொருவன்" என்கிற இவ்வளவையேகொண்டு பாபிஷ்டமான என் ஹ்ருதயத்திலே தேவரீர் புகுந்தருளிற்று; வஸிஷ்டன் சண்டாளர் மனையிற் புகுந்தாற் போல் தேவரீர் என் நெஞ்சில் புகுந்த விது, தேவரீருடைய பரிசுத்தமாய் விளங்கும் மஹிமைக்கு என்ன அவத்யத்தை விளைத்திடுமோவென்று அஞ்சாநின்றேன். ... .... (உஎ)

நெஞ்சில்கறைகொண்ட கஞ்சனைக் காய்ந்தநிமலன் * நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன் காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரிய விராமாநுசன் புகழன்றி யென்வாய்
கொஞ்சிப் பரவகில்லாது * என்னவாழ்வின்று கூடியதே (உஅ)

| | |
|---|---|
| நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனை | நெஞ்சிலே கல்மஷத்தை யுடையனாயிருந்த கம்ஸனை |
| காய்ந்த | முடித்த |
| நிமலன் | ஹேயப்ரத்ய நீகனாய், |
| நங்கள் பஞ்சி திருவடி | ஆச்ரிதர்பக்கல் அபிமாந முடையளாய் பஞ்சுபோல் மெல்லிய திருவடிகளை யுடையளான |
| பின்னைதன் காதலன் | நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனான கண்ண பிரானுடைய |
| பாதம் நண்ணா | திருவடிகளை ஆச்ரயியாத |
| வஞ்சர்க்கு | ஆத்மாபஹாரக் கள்வர்களுக்கு |
| அரிய | துர்லபரான |
| இராமாநுசன் | எம்பெருமானா ருடைய |
| புகழ் அன்றி | குணங்களையொழிய (மற்றொன்றை) |
| என் வாய் | என் வாக்கானது |
| கொஞ்சி பரவகில்லாது | குலாவி ஏத்தமாட்டாது; |
| இன்று கூடியது வாழ்வு | இன்று (எனக்கு) நேர்ந்த வாழ்ச்சியானது |
| என்ன | ஆச்சரியமானது. |

* * *:—நேற்றுவரை அபதார்த்தமாய்க் கிடந்த அடியேன் இன்று ஸத்தை பெற்று வாழ்ந்த அதிசயம் சொல்லி முடியுமோ?. இன்று உமக்குவந்த அதிசயம் என்னவென்று கேட்கிறீர்களோ? எம்பெருமானாருடைய குண கீர்த்தநத்தில் நேற்றுவரை உதாஸீநமாய்க் கிடந்த என் வாயானது இன்று அவருடைய திவ்ய கீர்த்திகளையன்றி வேறொன்றையும் அநுஸந்திக்கமாட்டேனென்று அது தன்னிலே ஊன்றிக் கிடக்கிறதே, இதைவிட அதிசயமுண்டோ? என்கிறார்.

எம்பெருமானார் எப்படிப் பட்டவரென்றால், எம்பெருமானிடத்தில் பக்தியுடையவர்களுக் கன்றி மற்றையோர்க்கு அடைய முடியாதவர்; பகவத் பக்தர்களுக்குப் பரமஸௌலபர் என்றபடி.

**நெஞ்சில் கறைகொண்ட கஞ்சன்**=தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய வரலாறுகளை நாரதன் சொல்லக்கேட்டது முதற்கொண்டு கம்ஸன் கண்ணபிரானிடத்துப் பூர்ணமான மாத்ஸர்யம் பாராட்டிப் பல வகைகளினால் அப்பெருமானை வதைக்க வழிதேடிக்கிடந்தானென்பதும், கடைசியாக வில்விழா வென்கிற வியாஜம் வைத்துக் கண்

ணனை மதுரைக்கு வரவழைத்துக் கொல்லப் பார்க்கையில் கம்ஸ ஸபையிலே கண்ணபிரான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின் மேலேறி அவனது கிரீடம் சுழன்று கீழேவிழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டனன் என்பதும் இங்கு அறியத்தக்கன.

நங்கள் பஞ்சித்திருவடிப் பின்னைதன் காதலன் = நமக்குப் புருஷகாரம் செய்வதையே தொழிலாகக் கொண்டவளும் பரம ஸுகுமாரமான திருவடிகளை யுடையவளுமான நப்பின்னைப்பிராட்டிக்கு நாதன் என்றபடி.

ஆக, கஞ்சனைக்கொன்ற பின்னை மணாளனை திருமால் பக்கல் பத்தியற்ற பாவிகளுக்கு துர்லபரான எம்பெருமானாருடைய புகழையே இன்று வாய்வெருவப்பெற்ற அடியேன் ஒப்பற்ற வாழ்ச்சி பெற்றேனென்றாராயிற்று. .... ... .... (உஅ

கூட்டும் விதியென்று கூடுங்கொலோ ? * தென்குருகைப்பிரான்
பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ் தன்னைத் * தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த விராமாநுசன்புகழ் மெய்யுணர்ந்தோ
ரீட்டங்கள் தன்னை * என்னாட்டங்கள் கண்டின்ப மெய்திடவே.

தென் குருகை பிரான் — நம்மாழ்வாருடைய
பாட்டு என்னும் — பாசுரங்கள் என்று ப்ரஸித்தமாய்
வேதம் — வேதரூபமாய்
பசும் தமிழ் தன்னை — செந்தமிழாயிருக்கிற திருவாய்மொழியை
தன் பத்தி என்னும் வீட்டின் கண் வைத்த — தம்முடைய பக்தியாகிற மாளிகையிலே ஸ்தாபித்தருளிய
இராமாநுசன் — எம்பெருமானாருடைய
புகழ் — கல்யாண குணங்களை
மெய் உணர்ந்தோர் — உள்ளபடி அறிந்திருக்குமவர்களுடைய
ஈட்டங்கள் தன்னை — கோஷ்டிகளை
என் நாட்டங்கள் கண்டு — என் கண்களானவை ஸேவித்து
இன்பம் எய்திட — ஸுகிக்கும்படியாக
கூட்டும் விதி — அமைக்கவல்ல (அவருடைய) க்ருபையானது
என்று கூடும் கொல் — என்றைக்கு வாய்க்குமோ ?

* * *:—நம்மாழ்வா ரருளிச்செய்த தமிழ் வேதத்தைப் பத்தியுடன் பரவும் எம்பெருமானாருடைய திருக்கல்யாண குணங்களை உள்ளபடி உணர்ந்து ஈடுபட்டிருக்கும் மஹான்களுடைய கோஷ்டிகளை அடியேன் ஸேவித்து ஆநந்திக்கும்படியான பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ என்கிறார்.

கூட்டும் விதி என்று கூடுங்கொல்=விதியாவது அத்ருஷ்டம்; எம்பெருமானாருடைய திருவருள்தான் இங்கு விதியெனப்படுகின்றதென்க. கூட்டும் விதி=என்று கூடியும் இப்பேற்றை நமக்குச் சேர்விப்பதான அவருடைய க்ருபை என்றபடி.

தன்பத்தி யென்னும் வீட்டின்கண் வைத்த = விலையுயர்ந்த மாணிக்கத்தைச் செப்பிலே வைத்துக்கொண்டிருப்பாரைப்போலே அநர்க்கமான அருளிச்செயலைத் தம்முடைய பக்தியாகிற உயர்ந்த மாளிகையிலே வைத்துப் பேணிக்கொண்டிராநின்ற உடையவர் என்றபடி. நாட்டம்—கண். ... ... ... (உகூ)

இன்பந்தரு பெருவீடுவந் தெய்திலென்? * எண்ணிறந்த
துன்பந்தரு நிரயம்பல சூழிலென்? * தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட் கிறையவன் மாயனென மொழிந்த
அன்பனனகன் * இராமாநுசனென்னை யாண்டனனே. (௩௦)

தொல் உலகில் — ‘அநாதியான இவ்வுலகத்தில்

மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் — நித்யரான எல்லா ஆத்மாக்களுக்கும் சேஷியாவான் விஷ்ணுவே’

என மொழிந்த — என்று (ஸ்ரீபாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த

அன்பன் — பரமகாருணிகராய்

அனகன் — நிர்த்தோஷரான

இராமாநுசன் — எம்பெருமானார்

என்னை ஆண்டனன் — என்னை அடிமைகொண்டருளினார்;

(ஆனபின்பு)

இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என் — ஆநந்தாவஹமான மோக்ஷம்வந்து ஸித்தித்தாலென்ன?

எண் இறந்த துன்பம் தரு பல நிரயம் சூழில் என் — அளவற்ற துக்கங்களைத் தருகிற பல நரகங்கள் வந்து சூழ்ந்துகொண்டால்தான் என்ன?.

* * *:—“ இராமாநுசன் புகழ் மெய்யுணர்ந்தோ ரீட்டங்கள் தன்னை என் நாட்டங்கள்கண்டு இன்பமெய்திட—கூட்டும் விதி என்று கூடுங்கொலோ” என்று ஆசம்ஸித்த அமுதனாரை நோக்கிச் சிலர்—‘வாரீர்! இவ்வளவுதானோ உமக்கு வேண்டுவது? இனி பரமபத ப்ராப்தி முதலானவையொன்றும் உமக்கு அபேக்ஷித மல்லவோ?’ என்று கேட்க; எம்பெருமானார் என்னை அடிமை கொண்டருளப்பெற்றபின்பு எனக்கு மோக்ஷம் கிடைத்தாலென்ன? பலபல நரகங்கள்தான் நேர்ந்தாலென்ன? எனக்கு எது பரம ப்ராப்யமோ அது கிடைத்துவிட்டது! என்று சரக்கறப் பேசுகிறார்.

நிரயம்—வடசொல். அனகன்—அநவம் என்ற வடசொல் விகாரம்: ஹேய ப்ரதிபடர் என்றபடி. ... ... (௩௦)

ஆண்டுகள்நாள் திங்களாய் * நிகழ்காலமெல்லாம்மனமே!
ஈண்டுபல்யோனிகள் தோறுழல்வோம் * இன்றோ ரெண்ணின்றியே
காண்டகு தோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்
பூண்ட வன்பாளன் * இராமாநுசனைப் பொருந்தினமே. (௩௧)

| | |
|---|---|
| மனமே | நெஞ்சே!, |
| நாள் ஆய் | நாள்களாகவும் |
| திங்கள் ஆய் | மாதங்களாகவும் |
| ஆண்டுகள் ஆய் | வருஷங்களாகவும் (இப்படி) |
| நிகழ் காலம் எல்லாம் | நடந்துசெல்லுகிற ஸர்வ காலங்களிலும் |
| ஈண்டு பல் யோனிகள் தோறு | திரண்டு பலவகைப் பட்ட யோனிகள் தோறும் |
| உழல்வோம் | தட்டித்திரிந்த நாம், |
| இன்று ஓர் எண் இன்றியே | இன்று ஒரு நினைவுமில்லாதிருக்கச் செய்தே (அகஸ்மாத்தாக) |
| காண் தகு தோள் அண்ணல் தென் அத்தியூரர் கழல் இணை கீழ் பூண்ட அன்பு ஆளன் இராமாநுசனை பொருந்தினம் | கண்ணாரக் காணத் தக்க தோள்களை யுடைய ஸ்வாமியான பேரருளாளனுடைய திருவடிகளில் அன்பு பூண்ட எம்பெருமானாரைச் சேரப் பெற்றோம். (என்ன பாக்கியம்!.) |

* * *:—நெஞ்சே! இன்றளவும் நமக்குக் கழிந்த காலங்கள் கணக்கிட முடியா; வருஷக் கணக்காகவும் மாதக்கணக்காகவும் நாட் கணக்காகவும் கழிந்து செல்லுகின்ற காலமெல்லாம் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து தடுமாறித் திரிந்த நாம் இன்று ஒரு நினை

வின்றியே அகஸ்மாத்தாக எம்பெருமானாரை அடிபணியப் பெற்றோமே! நம்முடைய அத்ருஷ்டம் எப்படிப்பட்டது! கண்டாயே! என்று தம் திருவுள்ளத்தோடே உசாவுகின்றார்.

ஈண்டு பல் யோனிகள்தோறு = ஈண்டுதல்—திரளுதல்; திரண்டு பலவகைப்பட்ட யோனிகளென்றால்—தனித்தனியே எண்ணி இத்தனையென்று சொல்லமுடியாத வளவன்றிக்கே திரள்திரளாகவும் எண்ணிச் சொல்லமுடியாதபடி பலவகைப்பட்ட யோனிகள் என்றதாகிறது. உழல்வோம் = இறந்தகாலப்பொருள் இங்கு விவக்ஷிதம். இன்றளவும் தட்டித்திரிந்த நாம் என்றபடி. ... (௩௧)

பொருந்தியதேசும் பொறையுந்திறலும் புகழும் * நல்ல
திருந்தியஞானமுஞ் செல்வமுஞ் சேரும் * செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் * எங்க ளிராமாநுசனை யடைபவர்க்கே. (௩௨)

| | |
|---|---|
| செறு கலியால் | (தருமநெறியைத்) திரஸ்கரிக்கின்ற கலியினாலே |
| வருந்திய | துக்கப்பட்ட |
| ஞாலத்தை | பூமியை |
| வண்மையினால் வந்து எடுத்து அளித்த | தமது நிர்ஹேதுக க்ருபையாலே வந்து உத்தரித்து ரக்ஷித்தவரும் |
| அரும் தவன் | சரணாகதியென்கிற அரிய தபஸ்ஸை அநுஷ்டித்தவரும் |
| எங்கள் | எமக்கு ஸ்வாமியுமான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| அடைபவர்க்கு | ஆச்ரயிக்குமவர்களுக்கு |
| பொருந்திய தேசும் | ஸ்வரூபாநுரூபமான தேஜஸ்ஸும் |
| பொறையும் | க்ஷமாகுணமும் |
| திறலும் | ஜிதேந்த்ரியத்வமாகிற பலமும் |
| புகழும் | கீர்த்தியும் |
| நல்ல திருந்திய ஞானமும் | பரமவிலக்ஷணமான அறிவும் |
| செல்வமும் | பக்தியாகிற ஸம்பத்தும் |
| சேரும் | தானே வந்துசேரும். |

* * *:—“இராமாநுசனைப் பொருந்தினமே” என்று அகங்களித்துக் கூறின அமுதனாரை நோக்கிச் சிலர், ‘உம்மைப்போலே நாங்களும் இராமாநுசனைப் பொருந்துவோமென்று பார்த்தால் உமக்குப்போலே எமக்கு ஆத்மகுணலேசமும் இல்லையே! எங்க

ளுக்கு அவரைப்பொருந்த அதிகாரமில்லையே!' என்று சொல்லி வருந்த; அவர்களைநோக்கி அருளிச் செய்கின்றார்—கலிகலுஷ நிவர்த்தகரான நம்மிராமாநுசரை ஆச்ரயிப்பவர்களுக்கு ஸ்வரூபாநுரூபமான மதிப்பும், * களிப்புங்கவர்வு மற்றிருக்கையாகிற க்ஷமாகுணமும், ஜிதேந்த்ரியத்வமாகிற மிடுக்கும், குணசாலிகளென்கிற கீர்த்தியும், தத்வஹித புருஷார்த்தங்களில் தெளிந்த ஞானமும், பக்தியாகிற மஹாஸம்பத்தும் ஆகிய இவை யெல்லாம் தன்னடையே வந்து சேரும் என்றாராயிற்று. ஆகையால் நீங்களும் மயங்காது வந்து ஆச்ரயிக்கலா மென்றவாறு. .... (௩௨.)

அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் * கையாழியென்னும்
படையோடு நாந்தகமும் படர்தண்டும் * ஒண்சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்கமு மிந்தப்பூதலம் காப்பதற்கென்று *
இடையே யிராமாநுச முனியாயின விந்நிலத்தே. (௩௩)

| | |
|---|---|
| அடை ஆர் கமலத்து அலர் மகள் கேள்வன் | தளங்கள் நெருங்கிய தாமரைப்பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார்க்கு வல்லபனான எம்பெருமானுடைய |
| கை | திருக்கையிலே (விளங்காநின்ற) |
| ஆழி என்னும் படையோடு | திருவாழியென்கிற திவ்யாயுதத்தோடே |
| நாந்தகமும் | நந்தகவாளும் |
| படர் தண்டும் | ரக்ஷணத்தொழிலிலே பரந்திராநின்ற கதையும் |
| ஒண் சார்ங்கம் வில்லும் | அழகிய ஸ்ரீ சார்ங்க மென்கிற வில்லும் |
| புடை ஆர் புரி சங்கமும் | ஒரு பக்கத்துக்குத் தானே ஆபரணமாகப் போரும்படியான அழகிய ஸ்ரீபாஞ்சஜந்யமும் (ஆக இப் பஞ்சாயுதாழ்வார்கள்) |
| இந்த பூதலம் காப்பதற்கு என்று | இந்தப் பூமியை ரக்ஷிக்கைக்காக |
| இந்நிலத்து | இப்பூமண்டலத்திலே |
| இராமாநுச முனி இடையே ஆயின | எம்பெருமானார் பக்கலிலே ஆயினர். |

* * *:—கீழ்ப்பாட்டில், எம்பெருமானாரை ஆச்ரயிக்கவே நற்குணங்களெல்லாம் தன்னடையே வந்து சேரும் என்றார்; அத

னைச் செவியேற்ற சிலர்—"ஜிதேந்த்ரியத்வம் முதலான அரிய பெரிய பேறுகள் திருவாழி முதலான திவ்யாயுதங்களின் அநுக்ரஹத்தாலன்றோ உண்டாகவேண்டும்; மநுஷ்யர்களில் ஒருவரான எம்பெருமானாரை ஆச்ரயித்தமாத்திரத்தால் அவை உண்டாய் விடுமோ?" என்று சங்கிக்க, அந்த ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களும் லோகரக்ஷணார்த்தமாக எம்பெருமானார் பக்கலிலேவந்து குடி கொண்டனர் காண்மின்—என்கிறார் இப்பாட்டில்.

"அடையார்கமலத் தலர்மகள்கேள்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்தே இராமாநுச முனியிடையே ஆயின" என்று அந்வயித்தவாறு. ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்கள் இவர்பக்கலிலே ஆகையாவது—இவருடைய நினைவைக் கடாக்ஷித்துநின்று இவர் அதிகரித்த காரியத்திற்குத் துணைசெய்கையாம். அம்பரீஷனுக்குத் திருவாழியாழ்வான் ஸஹகரித்ததுபோல.

இப்பாட்டை மற்றொருவகையாகவும் அந்வயிக்க இடமுண்டு:- "அடையார்+புடையார் புரிசங்கமும் இந்தப்பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்திடையே இராமாநுசமுனியாயின" என்று. இப்பக்ஷத்தில் ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களே இந்நிலவுலகைக் காக்க எம்பெருமானாராக வந்து திருவவதரித்தார்களென்றதாகிறது.

## இங்கே சில பூர்வபக்ஷ ஸமாதாநங்கள்.

இப்பாட்டினால், எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களுடைய திருவவதாரமென்று விளங்கா நின்றமையால் திருவனந்தாழ்வானுடைய அவதாரமென்று சொல்வது ப்ராமாணிகமன்றென்று சிலர் ஆக்ரஹங்கொண்டு பேசுவர்கள்.

இப் பாட்டினால் ஏற்பட்ட அர்த்தமென்னவென்று ஆராய்வோம். மணவாளமாமுனிகளும் பிள்ளைலோகஞ்சீயரு மருளிச் செய்த வியாக்கியானங்களில் அடையார்கமல மென்று தொடங்கி, புடையார் புரிசங்கமும் இந்தப்பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்தே இராமாநுச முனியிடையே ஆயின என்று அந்வயித்து, பஞ்சாயுதாழ்

வார்கள் லோகரக்ஷணார்த்தமாக எம்பெருமானார்க்கு ஸஹகாரிகளாக வந்து அமைந்தார்கள்—என்கிற அர்த்தமே முற்பட அருளிச் செய்யப்பட்டுள்ளது. 'பஞ்சாயுதங்கள் எம்பெருமானாராக வந்து அவதரித்தன' என்று ஸ்ரீவேதாந்ததேசிகன் அர்த்தம் செய்து கொண்டதாக யதிராஜ ஸப்ததியினால் விளங்கினபடியால் அதுவும் ஒரு அர்த்தமாக இருக்கலாம் என்று திருவுள்ளம்பற்றி அதனைப் பக்ஷாந்தரமாக உரைத்தருளினர். "மற்றைப் பக்ஷத்தில்" என்ற ஜீயருரைவாக்கியம் நோக்கத்தக்கது. "இத்தால் இவருடைய விரோதி நிரஸந ஸாமர்த்தியத்தைப்பற்ற ஸ்ரீபஞ்சாயுதாவதாரமென்று ப்ரபாவகதநம் பண்ணினாராய்த்து" என்ற அவ்விடத்து ஸ்ரீஸூக்தியும் குறிக்கொள்ளத்தக்கது.

'எம்பெருமானார் சேஷாவதாரமென்று பலபடிகளாலும் பல ஸூக்திகளாலும் ப்ரஸித்தமாயிருக்க, பஞ்சாயுதாவதாரமென்று அமுதனார் அருளிச்செய்கிறாரே! இதுவென் என்று சிலர் நினைக்கக்கூடுமென்று திருவுள்ளம்பற்றிய மணவாளமாமுனிகள் மேற் குறித்த ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்யலாயினர் என்னுமிடம் உய்த்துணரத்தக்கது.

மாமுனிகள் கூறியபடியேதான் கொள்ளவேணுமென்று எமக்கு நிர்ப்பந்தமில்லாமையால், பக்ஷாந்தரமாக அவர் கூறிய பொருளே எமக்கு முக்கிய கல்பமாமென்று கூறத் தலைப்படுவாருமுண்டு. அதிலும் எமக்கொரு வைமத்யம் இல்லை. 'எம்பெருமானார் பஞ்சாயுதாவதாரம்' என்று சொல்வதே இப்பாட்டின் முக்கியமான கருத்தாக இருக்கட்டும்; அதனால் என்ன ஹாநி விளைந்திடும்?

இங்கே ஒன்று கேட்கவேண்டிற்றுண்டு;—எம்பெருமானார் பஞ்சாயுதாவதாரர் என்கிற ஒரு வார்த்தையை மாத்திரமே சொல்லலாம்; சேஷாவதாரர் இத்யாதி வார்த்தைகளைச்சொல்லவே கூடாது என்று கருத்தா? அல்லது பஞ்சாயுதாவதாரத்வத்தை முக்கியமாகச்சொல்லி மற்றவற்றை அமுக்கியமாகச் சொல்லவேணுமென்று கருத்தா? என்று. ப்ரதிபக்ஷிகளின் வசநவ்யக்திகளை ஆராயுமிடத்து, பஞ்சாயுதாவதாரர் என்பதற்குமேல் வேறொன்றும் சொல்லக்கூடாதென்பதே அபிநிவேச விஜ்ரும்பிதமாக விளங்கு

கின்றது. இங்ஙனேயாகில், ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்தியே இவர்களுக்கு முற்றுறமுன்னம் தூஷணீயமாகத்தேறும். ஏனெனில் ;—“ வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரேः” என்றருளிச்செய்த தேசிகன் தாமே அந்த யதிராஜ ஸப்ததியில் தானே “நாநாபூதைः” இத்யாதி [முப்பத்திரண்டாம்] ச்லோகத்தில் “ विष्वक्सेनो यतिपतिरभूत् वेत्रसारस्त्रिदण्डः ” [விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்டः=ஸேனை முதலியார் எம்பெருமானாராக அவதரித்தார்; (அவருடைய) திருப்பிரம்பு த்ரிதண்டமாக அவதரித்தது] என்றும் அருளிச்செய்து வைத்தாரிறே. சேஷாவதாரத்வத்தை அமுதனார் அருளிச்செய்யவில்லையே யென்னில், ஸேநேசாவதாரத்வத்தை அமுதனார் அருளிச்செய்யவில்லையே என்போம்.

இனி, பஞ்சாயுதாவதாரத்வத்தை முக்கியமாகச் சொல்லி மற்றவற்றை அமுக்கியமாகச் சொல்லலாம் என்பதும் ஸமஞ்ஜஸமன்று ; உடையவர் திருவடிகளில் ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்திருந்த ஆசிரியர்களும் பின்புள்ளாரான பல பெரியோர்களும் ஒருமிடறாக அருளிச்செய்தமே முக்கிய கல்பமாகக் கொள்ளவடுக்கும். சேஷாவதாரத்வத்தையே பல ஆசிரியர்கள் ஆதரித்து அருளிச்செய்திருக்கின்றனரென்பதை ஸப்ரமாணமாக உபபாதிக்க வல்லோம்.

திருமலை அனந்தாழ்வானருளிச்செய்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலா என்கிற நூலில்—

“ श्रियःपतिः......निजचरणकिङ्कराणां [illegible]
‘[illegible] सकलमपि लोकं संरक्ष’
इति न्य[illegible]. सोऽनन्तो भगवता नियुक्तः......
आसुरिक्षेत्रे केशवयज्वनस्तनयतया प्रादुर्बभूव.

श्लो॥ [illegible] निशानाथ
[illegible]
[illegible] आसुरिक्षेत्रे [illegible]
हारीतकाण्वः [illegible] केशवाख्यद्विजात् [illegible] श्री[illegible]
[illegible] शेषः प्रादुर्बभूव॥”

என்றருளிச்செய்துள்ள கத்ய பத்யங்களைக் காண்க. [எம்பெருமான் தனது அத்தாணிச் சேவகனும் படுக்கையுமான திருவனந்தாழ்வானை நோக்கி 'நீ நிலவுலகத்திற் சென்று பிறந்து எவ்வுயிரையும் ஸம்ரக்ஷிக்கக்கடவை' என்று நியமித்தருள, அந்த நியமநத்தைச் சிரமேற்கொண்ட ஆதிசேஷன் அப்படியே திருவாதிரையில் கேசவ ஸோமயாஜிகளுக்குப் புத்திரனாகப் பிறந்தமை மேற்குறித்த ஸ்ரீஸூக்தியில் கூறப்பட்டுள்ளது.]

வடுகநம்பி அருளிச்செய்த ச்லோக ரூபமான யதிராஜவைபவ க்ரந்தத்தில்

"𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌸𑌮𑌰𑍍𑌥𑌨𑌾𑌯 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌨𑍁-
𑌤𑍍𑌤𑍍𑌯𑍈 । 𑌶𑍇𑌷𑌾𑌂𑌶𑌕𑌃 𑌕𑍇𑌶𑌵𑌯𑌜𑍍𑌵𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌂 𑌤𑍇𑌜𑍋𑌨𑌿𑌧𑌿𑌃
𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌵𑌿𑌹𑌾𑌵𑌿𑌰𑌾𑌸𑍀𑌤𑍍 ॥

என்றுளது. [வேதாந்த ஸித்தாந்தங்களை ஸமர்த்தநம் செய்வதற்காகவும் துர்மதங்களைத் தொலைப்பதற்காகவும் திருவனந்தாழ்வானுடைய அம்சபூதராய் தேஜோநிதியான ஒருமஹான் கேசவ ஸோமயாஜிகளின் தேவியாரிடத்தில் அவதரித்தார் என்கிறது இதில்.] இந்த க்ரந்தம் ஸ்ரீதேசிகன் வைபவத்தோடு சேர்த்து ஸ்ரீபரகால மடாதிபதி ஸ்வாமியால் அச்சிடப்பட்டதும் பூர்வாசார்ய க்ரந்தங்களில் ஸம்வாதப்ரமாணமாக உதாஹரிக்கப் பட்டதுமாம்.

எம்பெருமானாருடைய பூர்ணகடாக்ஷ பாத்ரராய் அவர்திறத்துத் தேவுமற்றறியாதே ஈடுபட்டிருந்த மஹா ப்ராஜ்ஞரான கருடவாஹந பண்டிதர் பணித்த திவ்யஸூரிசரித மென்னும் மஹாகாவ்யத்தில் பதினேழாவது ஸர்க்கத்தில் ஸ்ரீராமாநுஜவைபவம் சொல்லப் புகுந்தவிடத்து,

"𑌸𑌹𑌸𑍍𑌰𑌂 𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌵𑌹𑌾𑌯 𑌶𑍇𑌷𑍋𑌽𑌪𑌿
𑌯𑌦𑍍𑌰𑍂𑌪𑌂 𑌤𑍍𑌰𑌿𑌜𑌗𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑌿𑌤𑌂 𑌜𑌗𑌾𑌮."

[திருவனந்தாழ்வான் தனது உரகவுடலை விட்டொழிந்து இராமாநுச முனியார் திருவுருவத்தை யடைந்தான்] என்றும்,

"𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌹𑌂 𑌤𑌵 𑌸𑌵𑌿𑌧𑍋𑌷𑌿𑌤𑌾𑌦𑍃𑌶𑌾𑌸
𑌶𑍇𑌷𑌾𑌂𑌶𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌨𑌵𑌿𑌨𑍍𑌨𑌂 𑌕𑍃𑌤𑌾𑌵𑌤𑌾𑌰𑌃."

[உமது பக்கத்திலிருப்பவரும் லோகஸம்ரக்ஷணார்த்தமாகத் திருவனந்தாழ்வானுடைய அம்சமாக வந்து திருவவதரித்தவருமான இந்த மஹானிடத்தில் நான் அஞ்சுகின்றேன் (—யாதவப்ரகாசனை நோக்கி ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் வார்த்தையாமிது) என்றும் உள்ள ச்லோகங்கள் நோக்கத்தக்கன.

இந்த திவ்யஸூரிசரிதகாரர், அமுதனார் நூற்றந்தாதி அருளிச்செய்திருப்பது தெரியாமல் தானே ஏதோ ஸ்வதந்த்ரமாகச் சொல்லிவிட்டார் என்பதும் ஏலாது. அந்தக் காவ்யத்திலேயே பதினெட்டாம் ஸர்க்கத்தில்—

"ஸ்ரீரங்கநாதகவிராஹ ச த்ருஷ்டதத்வ:
தத்த்வேஷ்யா யதிபதேர் வைபவாநுபந்த்ய:।
ஜ்ஞாத்வாதிசுத்தமதிராஹ மஹாப்ரபந்தம்
ராமாநுஜார்யசதகம் யதிதம் ஸதேத." 51.

[திருவரங்கத்தமுதனார் அமுதப் பெருக்கான தமிழ்மொழியாலே எம்பெருமானாருடைய வைபவங்களைப் பேசுகிற நூற்றந்தாதிப் பிரபந்தத்தை அருளிச் செய்தார்] என்று அவர்தாமே சொல்லி வைத்திருக்கும்படியைக் காண்மின். இராமாநுச நூற்றந்தாதியில் அவர்க்கு அளவற்ற ப்ராவண்யமுள்ளமை அடுத்த ச்லோகத்தில் நன்கு புலப்படும்.

இப்படியே எம்பெருமானாருடைய சேஷாவதாரத்வத்தை வெளியிட்டருளின மற்றும் பலபல ஆசிரியர்களின் ஸ்ரீஸூக்திகளை எடுத்துக் காட்டப்புகின் விரிவு பெரிதுடைத்தாம். வடவாசார்ய ஸம்ப்ரதாயத்தில் முந்நூறு நானூறு வருஷங்களுக்கு முன்பு ப்ரஸித்த பண்டிதர்களாயிருந்து பலநூல்களை இட்டவர்களான ஸோரபுரம் வெங்கடாசாரியர், அரசாணிபாலை வெங்கடாசாரியர் முதலானோரும் இவ்வழியையே ஆதரித்துப் பேசியுள்ளார். எங்ஙனேயெனில் ;—ஸோரபுரம் வெங்கடாசாரியர் இயற்றின யதிராஜ தண்டகத்தில் "நரவேஷாய சேஷாயகுரவே பரவேதிநே" என்று மங்கள ச்லோகத்திலும், "தோஷாதிதூராய சேஷாவதாராய" என்று முடிவிலும் சேஷாவதாரத்வமே சொல்லப்பட்டது.

அரசாணிபாலை வெங்கடாத்வரி இயற்றிய விச்வகுணாதர்சத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வர்ணநப்ரகரணத்தில்—

"ராமாநுஜாய முநயே நம உக்தி மாத்ரம்
சேஷாய யஸ்ததகலயேகலயே ப்ரணாமம்."

[மநுஷ்யாவதாரமெடுத்த ஆதிசேஷனையும் கலியைக் கெடுத்தவராயுமுள்ள எம்பெருமானாரைத் தொழுகின்றேன்] என்று சொல்லப்பட்டது. முன்னோர்கள் ஸம்ப்ரதாய பரம்பரையாகச் சொல்லிக் கொண்டு வந்ததை அடியொற்றி இவர்களெல்லாரும் இப்படி சேஷாவதாரமென்று தம் தம் நூல்களிற் கூறினார்களேயன்றித் தாந்தோன்றியாக ஆரும் நவீந கல்பனை செய்தாரல்லர்.

த்ருதீய ப்ரஹ்மதந்த்ர பரகால ஸ்வாமி இயற்றியதாகப் பரகாலமடத்து ஸ்வாமிகளாலும் மற்றும் பல முநித்ரய ஸம்ப்ரதாயஸ்தர்களாலும் அச்சிடுவிக்கப்பட்டுள்ள மூவாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவ நூலிலும் சேஷாவதாரத்வ ஸ்தாபகங்களான வசனங்களும் ச்லோகங்களும் மிகுதியாக உள்ளனவேயன்றி வேறில்லை.

ஸ்ரீதேசிகனை யடிபணிந்து உய்ந்து போந்த ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி பணித்ததாக ப்ரஸித்தமாயுள்ள திவ்யஸூரி ஸ்தோத்ரத்தில்—

"வேதாந்தார்த்த ஸம்ஸ்தாபகம் விஷ்ணோ: உத்ஸவம் நவ்யாவநௌ நாதம்
சைத்ரேத்ரார்த்ரோதயே சேஷமூர்த்திம் ராமாநுஜம் பஜே." 16.

[எம்பெருமானுடைய தர்சநத்தை ஸ்தாபித்தருள சித்திரைத் திருவாதிரையில் தொண்டை நாட்டில் அவதரித்த ஆதிசேஷ மூர்த்தியாகிய ஸ்ரீராமாநுஜனைத் தொழுகின்றேன்] என்று சொல்லப்பட்டுளது.

தேசிகப்ரபந்தங்களில் ஒன்றான பிரபந்தசாரத்தின் வியாக்கியானத்திலும், ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் வியாக்கியானங்கள் பலவற்றிலும் ப்ராஸங்கிகமாக உடையவருடைய சேஷாவதாரத்வத்தை நன்கு நிலைநாட்டி யெழுதியுள்ளார்கள். இனி, "மற்றிவை தான் என்னாலே கேட்டீரே ஏழைகாள் என்னுரைக்கேன்?—பன்னியுரைக்குங்கால் பாரதமாம்" என்று கையொழிய வேண்டிற்றாயிரா

நின்றது. இங்ஙனே தென்னாசார்ய வடவாசார்ய உபய ஸம்ப்ரதாய நூல்களும் சேஷாவதாரத்வத்தை ஒருமிடறாக உரைக்கின்றன வென்பதை உற்றுநோக்கில் * முன்னோர் மொழிந்த முறைதப்பாமற் கேட்டு பின்னோர்ந்து தாமதனைப் பேசுவதே பாங்கு.

“ஃநஷ: ஹுயஊ0 ரூ-வம்......கலௌ கஸ்ரிஜ்விஷ்ுதி.

[அநந்தஃ ப்ரதமம் ரூபம் .......கலௌ கச்சித் பவிஷ்யதி]

என்கிற வசநத்தை எடுத்துக்காட்டுகிறார்களென்று சொல்லி அதற்கு அந்யதாஸித்தி உண்டென்கிறார்கள். அநந்யதாஸித்தமாய் ஸாவ்யக்தமாயுள்ள பல ப்ரமாணங்களைக் கீழேயெடுத்துக் காட்டினோமுக்கு “கலௌ கச்சித் பவிஷ்யதி” என்கிற வசநத்திற் போராடவிரும்புதல் வீண். பெருக்காற்றின் கரையிலேயிருந்து வைத்துக் கிணறுவெட்ட முயலவேண்டாவிறே. ஆயினும், “நம்முடைய ஸ்ரீ பாஷ்யகாரரை ‘கச்சித்’ ஆக்குவதற்கு நமக்கு ஸம்மதமில்லை” என்றவர்கட்குச் சிறிது சொல்லவேண்டியிரா நின்றது. கஸ்ரிக—கஸ்ரந—கொவி. [கச்சித்—கச்சந—கோபி] என்பவை நிஹீநரைக் குறிக்குஞ் சொற்கள் என்று கருத்துப்போலும். உருவை மறைத்துவைத்துச் சொல்லுமிடங்களிலும் ஒரு வைலக்ஷண்யந் தோற்றச்சொல்ல நினைக்குமிடங்களிலும் கச்சித் இத்யாதி பதங்களையே பெரியோர் பிரயோகிக்கக்கண்டோம்;

“காமாத் அதிவஸநுஜீயாக கஸ்ரிஜ்ஹுதகெஸரீ.”

[காமாத் அதிவஸந் ஜீயாத் கச்சித் அத்புதகேஸரீ]

“கமவ்யாத்ுமொரூ வநெ கமலாஹ்ரூஹமெயிநம்.”

[காமப்யாத்யம் குரும் வந்தே கமலாக்ருஹமேதிநம்]

“காமீ கஸ்ரித்கரகமலயொ ரஞ்ஜலிம் யாவமாநஃ.”

[காமீ கச்சித் கரகமலயோரஞ்ஜலிம் யாசமாநஃ]

“ஜயதி கிதவஃ கொவி கௌமாரஹாரீ.”

[ஜயதி கிதவஃ கோபி கௌமாரஹாரீ]

என்றிப்புடைகளிலே ஸ்ரீதேசிகன் அருளிச்செய்யக் காண்கிறோம். தேசிகன் எம்பெருமானை கச்சித்தாகச் சொல்லி இழித்துவிட்டாரென்று எண்ணக்கூடுமோ? அந்த கச்சித் ப்ரயோகத்திற்கும்

இந்த கச்சித் ப்ரயோகத்திற்கும் வாசியுண்டென்று சிலர் சொல்ல வுங்கூடும்; இந்த நூற்றந்தாதியிலே "நல்லார்பரவு மிராமாநுசன்" என்ற எண்பதாம்பாட்டின் வியாக்கியானத்தில்—

"𑌅𑌨𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍁 𑌤𑌤𑌃𑌪𑌰𑌂।
𑌬𑌲𑌭𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑌸𑍍𑌤𑍁 𑌕𑌲𑍌 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃."

[அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத:பரம்—பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலளராமாநுஜ: ஸ்ம்ருத:] என்றே பாடமாக உதாஹரித்திருக்கக் காண்கையாலே இந்த கச்சித் வாக்யார்த்த ப்ரயாஸம் வ்யர்த்தமேயாம். எவ்விதமாகப் பாடமிருந்தாலும் இந்த ச்லோகமே கல்பித மென்றாலும் இதில் எமக்கொரு அபிநிவேசமும் ஆக்ரஹமுமில்லை. ஸம்ப்ரதிபந்நங்களான ப்ரமாணங்கள் இல்லையாகிலன்றோ வருந்தவேண்டுவது—நிற்க.

"திருவேங்கட முடையான் ஸந்நிதியில் நடந்த சரித்திரம்" என்று ஒரு வரலாற்றை உதாஹரித்துக்காட்டி அதுவிஷயமாகச் சில தூஷணங்களும் ஸ்வச்சந்தமாக எழுதியுள்ள பூர்வபக்ஷிகளுக்கும், உண்மையான இதிஹாஸமின்னதென்றறியகில்லாத உலகத்தார்க்கும் உண்மையுணர்த்தப்புகுவோம். திருமலை அனந்தாழ்வானருளிச்செய்த (ஸம்ஸ்க்ருத) இதிஹாஸமாலையில் அவ்வரலாறு விரித்துரைக்கப்பட்டுள்ளது; எங்ஙனேயெனில்;—(சுருங்கச்சொல்லுவோம்.)

பண்டு திருவேங்கடமுடையான் தன் பக்கல் பரமபக்த சிகாமணியாயிருந்த தொண்டைமான் சக்ரவர்த்திக்கு ஒரு காரணார்த்தமாகத் தனது திருவாழி திருச்சங்குகளைத் தந்தருளி, இப்படி ஆச்ரித பக்ஷபாதத்தாலே தனது திவ்யாயுதங்களையும் தந்து உபகரிக்கும் ஔதார்யகுணம் உலகில் பரவுதற்காகச் சிறிதுகாலம் ஸுதர்சநபாஞ்சஜந்ய சூந்யனாகவே இருந்திட்டான். அக்காலம் கலியின் கொடுமையால் வர்ணாச்ரம தர்மங்கள் குலைந்து தேவாலயங்களும் சீர்கெட்டுப் பாஷண்டிகள் தலையெடுக்கும் காலமாயிருந்தது. திருமலையில் அர்ச்சகர்களாயிருந்த வைகாநஸர்கள் எம்பெருமானுக்கு முறைப்படி உபசாரங்கள் பண்ணாமல் அச்ரத்தை காட்டியிருந்த காரணத்தினால் தேசாதிபதியான யாதவராஜனால்

அடிக்கடி தண்டிக்கப்பட்டு அங்கு வாழுகில்லாமல் வெளிநாடு சென்றனர்; வ்ருத்தர்களாயிருந்த அர்ச்சகர்கள் இங்ஙனம் ஒருவ ரொருவராக வெளியேற, ப்ரபலர்களான ஸ்ரீவைஷ்ணவர்களும் அங்கு இலராக, விரல் நுழைக்க இடம் தேடிக்கொண்டிருந்த சைவர்கள் சிலர் இதுவே நல்ல ஸமயமென்று கொண்டு அந்த யாதவமன்னன் பக்கல்சென்று அவனுடைய ப்ரீதியைச் சிறிது சிறிதாக ஸம்பாதித்து ஒருநாள் அவனிடம் சொன்னார்கள்—திரு மலையில் ஸ்வாமி புஷ்கரணியின் தென்கரையில் திகழும் தேவன் முருகக்கடவுள்தான்; அவர்க்குக் குமாரஸ்வாமியென்றும் பெயர் வழங்குவதுண்டாகையால் அந்த நாமைகதேசத்தையிட்டு ஸ்வாமி புஷ்கரிணியென்று அத்தடாகம் வழங்கப்பெற்றது. ஸ்ரீ வேங்க டாசல மாஹாத்மியம் கூறவந்த வாமந புராணப் பகுதியில் இரண் டாவது அத்யாயத்தில்—ஸுப்ரஹ்மண்யன் வேங்கடமலையில் ஒரு குளத்தின் கரையில் தவம் புரிந்து கொண்டிருந்தானென்று சொல்லப்பட்டிருத்தலாலும் அப்பெருமான் முருகக்கடவுளே. அவர்க்கு அஸாதாரண ஆயுதங்களான பாசமும் அங்குசமும் தவநிலைக்கு உரியவை யல்லாமையால் தரிக்கப்படவில்லை. இன்னும் பல ஹேதுக்களாலும் அம்மலை சைவ க்ஷேத்ரமேயாம். இப்போது தான் சிறிது காலமாகச் சில வைணவர்கள் கூடிப் புராணார்த்தங் களை மனம்போனபடி சொல்லி அப்பெருமான் விஷ்ணுவேயென் றுரைத்து ராஜாவை வசப்படுத்திக்கொண்டு சில வைஷ்ணவ விக்ர ஹங்களையும் கோவிலில் ஸ்தாபித்து உத்ஸவங்களை நடத்தத் தொடங்கினார்கள். உண்மையில் இது சைவக்ஷேத்ரமாகையால் சைவ விதிப்படி இனி இக்கோவிற் காரியங்கள் நடைபெறுமாறு மஹாப்ரபு செங்கோல் செலுத்தவேணும்—என்றார்கள்.

இதைக்கேட்ட அவ்வரசன் இந்த சைவர்கள் சொல்லுவ தெல்லாம் அநுபவ விருத்தமா யிருக்கின்றதே!; ஆராயாமல் நாம் எதையும் ஸாஹஸமாகச் செய்துவிடக்கூடாது; தக்கபடி ஆராய்ச்சி செய்யவேணும் என்றெண்ணி யிருந்தான். அக்காலத்தில் அங்கு நிபுணர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாருமில்லாமையால் ஸாமாந் யராயிருந்த சிலர் திருவரங்கம் பெரியகோயிலில் மிக்க சிஷ்யஸம் பத்துடனே எழுந்தருளியிருந்த எம்பெருமானார்க்கு இச்செய்

தியை அறிவித்தனர். இச்செய்தியையறிந்த உடையவர் கடுகடை யாகத் திருப்பதிக்கெழுந்தருளி ஸம்சயாக்ராந்தனுயிருந்த அரசனை நோக்கி, "சைவர்களால் உனது நெஞ்சில் உண்டாக்கப்பட்ட சங்காகளங்கத்தை நீக்கி உன்னைத் தெளிவிப்பதற்காகவே நெடுந் தூரத்தில் நின்றும் இங்கே வந்தோம்; உனக்குப் பரிபூர்ணத்ருப்தி உண்டாகும்படி யாம் தெளிவாகச் சொல்லவல்லோம்; கேளாய் கொற்றவனே!" என்று தொடங்கினவாறே அவ்வரசன், முன்பு கொக்கரித்த சைவர்களையும் வரவழைத்துப் பெரிய ஸபையாக்கி சைவ வைஷ்ணவர்களுக்கு வாதயுத்தம் நடக்குமாறு நியமித்துத் தான் தடஸ்தனுயிருக்க, வெகுகாலம்வரை வாதப்போர் நடந்ததில் சைவர்களுடைய துர்வாதங்களை யெல்லாம் எம்பெருமானுர் ப்ராமாணிகமாகக் கண்டித்து வெற்றிபெற்று விளங்கினுர். [இந்த வாதப்ரதிவாதங்களின் விவரணம் ஷை ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸ மாலையில் அறுபத்தைந்து பக்கம் நிறையப் பெரிய வாக் யார்த்த ஸரணியில் குறிப்பிடப்பட்டுள்ளன; அங்கே கண்டு கொள்வது.]

எம்பெருமானுருடைய அற்புதமான உபபாதநங்களைக்கேட்ட மன்னவன் கலக்கம்நீங்கி மிக்க தெளிவுபெற்று, திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்ரமே யென்றும் அங்குள்ள பெருமான் திருமாலே யென்றும் ஐயந்திரிபற அறுதியிட்டு "இந்த ஸ்ரீராமாநுஜர் ஸாமாந்ய புருஷரல்லர்; அவதார புருஷரேயாவர்; இவர் மனம் வைத்தால் அதிமாநுஷமான காரியங்களையும் செய்து ஸர்வஜனங் களுக்கும் திண்ணிய நம்பிக்கை உண்டாகும்படி செய்யவும் வல் லர்; அங்ஙன் செய்ய இவரை வேண்டிக்கொள்வோம்" என் றெண்ணி, "ஸ்வாமிந்! யோகீச்வரரே!! தேவரீர் நிரூபித்துக்காட் டிய சாஸ்த்ரார்த்தங்களைக் கேட்டுப் பரமாநந்தமடைந்தேன்; திரு மாலே திருமலைக்கு இறைவர் என்று நன்கு துணிந்தேன்; ஸம்சய லேசமுமில்லாமல் சிக்கனத் தெளிவுபெற்றேன்; ஆயினும், மஹா புருஷராயும் அதிமாநுஷ சேஷ்டிதராயுமிராநின்ற தேவரீர், பண் டிதரோடு பாமரரோடு வாசியற எல்லாரும் தெளியுமாறு ஸமாதா நோபாயம் ஏதாவது செய்தருளக்கூடுமேல் நன்று" என்று கைகூப்பி விண்ணப்பஞ் செய்ய, அதனைக்கேட்ட எம்பெருமானுர் 'புராணப் பொருள்களைப் பலவாறாக எடுத்து உபந்யஸித்துக்காட்

டினவளவிலும் இவ்வரசனுடைய மனம் பரிபூர்ண த்ருப்தியை அடையவில்லை போலும்; அதிமாநுஷமானதொரு கார்யம்செய்து காட்டவேணு மென்கிறான்; ஆயிடுக; இங்ஙனேசெய்வோம்;— ப்ரஹ்மாண்ட புராணத்தில் பதினேராவது அத்யாயத்தில் எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து ப்ரதிஜ்ஞை செய்தருளியிருக்கிறபடியே கலியுகத்தில் விமாந மண்டபாதிகளைப்போல் சங்கு சக்கரங்களையும் பக்தர்கள் செய்து ஸமர்ப்பித்தால் ஸ்வீகரித்தே தீருவனாதலால், நாம் செய்து ஸமர்ப்பிக்கும் திவ்யாயுதங்களையும் எம்பெருமான் ஸ்வீகரிக்கக்கூடுமே; ப்ரார்த்தித்தாகிலும் ஸ்வீகரிக்கச் செய்திடுவோம்; இல்லையேல் மஹத்தான அநர்த்தம் நேரிடும் போலிருக்கிறதே! இவ்வரிய செயலினால்தான் அனைவரும் விச்வஸிக்கவேணும் என்று திருவுள்ளத்திற் சிந்தித்து, அப்படியேசெய்திடுவதென்று அறுதியிட்டு, மன்னவனை நோக்கி, "நான் எம்பெருமானுக்கு அஸாதாரண சிஹ்நங்களான திருவாழி திருச்சங்குகளைச் செய்வித்துக் கொணர்ந்து பகவத்ஸந்நிதியிலே வைத்திடுகிறேன்; இந்த சைவர்கள் தாமும் தங்கள் தெய்வத்துக்குரிய பாசம் அங்குசம்முதலிய ஆயுதங்களைச் செய்வித்துக் கொணர்ந்து வைத்திடுக; எந்த ஆயுதங்களை எம்பெருமான் எடுத்து அணிந்து கொள்கிறானே பார்ப்போம்" என்றருளிச் செய்தார்.

இதைக்கேட்ட அரசன் மகிழ்ச்சிகொண்டு 'இப்படியாகில் இது சிறந்த உபாயமே; பிறகு ஒருவர்க்கும் ஆக்ஷேபம் இருக்க ப்ரஸக்தியில்லையன்றே; நல்லது; அப்படியே இருவகுப்பினரும் செய்யக்கடவது' என்று சொல்ல; உபயவாதிகளும் தங்கள் தங்கள் தெய்வத்தின் அஸாதாரண ஆயுதங்களைச் செய்வித்துக் கொணர்ந்து ஒருநாள் அவ்வரசனுடனே திருமலைக்குவந்து இரவில் திருவேங்கட முடையானுடைய ஸந்நிதி கர்ப்பக்ருஹத்தினுள்ளே அவற்றை வைத்துவிட்டுக் கதவுகளைப்பூட்டி மன்னவன் கையால் அரக்கிலச்சினை செய்வித்துக் காலையளவும் கோவிலைச் சுற்றிக் காவலிருந்துகொண்டு தங்களுக்கே வெற்றியுண்டாம்படி தங்கள் தங்கள் தெய்வத்தைச் சிந்தைசெய்து கொண்டிருந்தனர்.

எம்பெருமானார் தமது யோகமஹிமையினால் உள்ளேபுக்கு எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்து "பரமபுருஷ! முன்பு நீ

வாயோலைசெய்து கொடுத்த ப்ரதிஜ்ஞையின்படியே உனது அஸாதாரணசிஹ்நங்களைப் பேணி அணிந்துகொண்டு அடியோங்களைக் காத்தருளவேணும்” என்று பிரார்த்தித்து அப்படியே திருவாழி திருச்சங்குகளை அணிந்துகொள்வித்து க்ருதக்ருத்யராயினர்.

பிறகு பொழுது விடிந்தவாறே யாதவ மன்னவன் நித்யாநுஷ்டாநங்களை முடித்துக்கொண்டு உபயவாதிகளுடனும் ஸந்நிதிக்குச்சென்று திருக்காப்பு நீக்குவித்துப் பெருமாளை ஸேவிக்குமளவில் பாச அங்குசாதி ஆயுதங்களை அப்பால் தள்ளிவிட்டுத் திருவாழி திருச்சங்குகளை யணிந்துகொண்டு பரமபோக்யமாக ஸேவை ஸாதிக்கக்கண்டு மிகவும் ஆச்சர்யப்பட்டு எம்பெருமானார் பக்கல் அளவுகடந்த ப்ரதிபத்தியை வஹித்து அவரையே சரணமடைந்து க்ருதார்த்தனுகி, குக்ஷிதவாதம்பண்ணிக் கொக்கரித்துக்கிடந்த சைவர்களையும் தண்டித்து ராஜ்யத்தில் நின்றும் துரத்திவிட்டு இனிது வாழ்ந்தான்—என்கிறவிதுவே அவ்விடத்து இதிஹாஸம். இந்த வ்ருத்தாந்தங்களை நேரில் ஸாக்ஷாத்கரித்தவரான அனந்தாழ்வான் மிக விரித்து கத்ய ரூபமாகவும் பத்ய ரூபமாகவும் ப்ரபந்தீகரித்து அருளிச்செய்து வைத்திருக்கும்போது தடுமாறுவதென்னே?.

திருமலையில் சைவவைஷ்ணவ விவாதமும் அதற்கு அடியான ஸந்தேஹமும் உண்டாவதற்கு ப்ரஸக்தியே யில்லாமலிருக்க இவ்வளவு கதையும் கட்டுக்கதையாகவே எழுதிவைக்கப்பட்டதென்று கருதிப் பூர்வபக்ஷிகள் எழுதியுள்ளவை, ப்ரமாண சரணராயிருப்பார்க்குப் பரிதாப ஜநகமேயாம்.

ஸ்ரீ வடுகநம்பியும் தாம் அருளிச்செய்த யதிராஜ வைபவத்தில் (90, 91, 92 ஆகிய) மூன்றுச்லோகங்களில் இந்த இதிஹாஸத்தை ஸங்க்ஷேபமாக உரைத்தருளினர். “ஹஸ்தாத் தத்தலக்ஷணமும் வவ்ஸௌ ஸ்ரீஸ்ரீநிவாஸ:” என்று—பரமபக்தனுயிருந்த தொண்டைமான் சக்ரவர்த்திக்குத் திருவாழி திருச்சங்குகளைத் திருவேங்கடமுடையான் தந்தருளிவிட்டான், அதனுல்தான் ஒரு காலவிசேஷத்தில் ஸந்தேஹமும் விவாதமும் நேர்ந்தது என்று ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறுர். இக்கதை ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்மியத்தில் பரக்கக் காணத்தக்கது ;—தொண்டைமான் சக்ரவர்த்தி

க்ஷத்ரிய ஜாதியானுயினும் தவவொழுக்கத்திற் சிறந்து முனிவரை யொக்கும் பெருமைவாய்ந்து திருவேங்கடமுடையான் பக்கல் பக்தி மேலிட்டு அப்பெருமானை எப்பொழுதும் ஸேவித்துக்கொண்டு திருமலையிலேயே வஸித்து வருவதையுணர்ந்த பகையரசர்கள் அவனது நாட்டைக் கைக்கொள்ள, தொண்டைமான் அதனைத் திருவேங்கட முடையான் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்து வணங்கி நிற்க, பெருமான் தனது சங்கு சக்கரங்களைக் கொடுத்து 'இவற்றைக்கொண்டு நீ பகையரசரைத் தவறாது வென்றிடுக' என்று சொல்லியருள, தொண்டைமான் அங்ஙனமே பகை வென்று அரசு பெற்றனன் என்பதும், பின்பு அவனது வேண்டு கோளால் அத்திருவாயுதங்களை அங்கு விக்ரஹ ரூபத்தில் வெளிப் படையாகக் கைக்கொள்ளாதிருந்தனன் என்பதும், ஆனது பற்றியே சைவர்களுடைய துர்வாதங்களுக்கு அவகாசமுண்டா யிற்று என்பதும் இனியாகிலும் உள்ளத்திற் பதியவேணும்.

திருவரங்கத் தமுதனாருடைய $ திருக்குமாரரான திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார் பாடிய திருவேங்கடத் தந்தாதியில் 48, 53-ஆம் பாட்டுக்களிலும் இக்கதை குறிப்பிடப்பட்டுள்ளது. "சங்கோடு அணியாழி நீங்கி நின்றுள் வேங்கடேசனை யாதரித்தே" என்றும், "முனித் தொண்டைமான் கையிற் சங்காழி நல்கி" என் றும் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளமை காண்க.

இந்த வரலாற்றைத் தெரிந்துகொள்ளாதே பிறர் எழுதியுள்ள தூஷணங்கள் அநுவாதத்திற்கும் அநர்ஹமானவையென்று விட் டிட்டோம்.

இந்த சரித்திரத்தைக்கொண்டே சேஷாவதாரத்வத்தை ஸ்தா பிப்பார் ஆருமில்லை. திருமலையில் சேஷரூபத்துடன் கோமுகை வழியாய் நுழைந்தாரென்று பலரும் பகரக் கேட்டிருப்போமாகி லும், இதிஹாஸமாலை, யதிராஜ வைபவம், ஆறாயிரப்படி குரு பரம்பரா ப்ரபாவம், ராமாநுஜார்ய திவ்ய சரிதை முதலிய நூல் களில் அங்ஙனம் எழுதப்பட்டிருக்கவில்லை. "ஸமவாப ராமாநு ஜார்ய: ஸ்வயோகமஹிம்நா ஸ்ரீநிவாஸ ஸந்நிதிம்" என்று— எம்பெருமானார் தமது யோகசக்தி ப்ரபாவத்தால் திருவேங்கட

$ திருப்பேரனார் என்பர் சிலர்.

முடையானை அனுகினதாகத்தான் இதிஹாஸமாலையிற் சொல்லப்பட்டுள்ளது. மற்ற நூல்களில் அதுவுமில்லை ஆகையால் இந்த இதிஹாஸத்தை ஆதாரமாகக்கொண்டு உடையவருடைய சேஷாவதாரத்வத்தை யாரோ ஸாதிப்பதாகத் தாமாகவே நினைத்துக்கொண்டார்கள் போலும். அந்தக் கதையே அஸம்பாவிதமென்று பூர்வ பக்ஷிகள் எழுதியுள்ளமையால் அது முற்றிலும் யதார்த்தமே யென்பதை மாத்திரம் இங்கு ஸ்தாபிக்க முன்வந்தோமேயன்றி இந்த வரலாற்றை சேஷாவதாரத்வ ஸ்தாபக ப்ரமாணமாக நிரூபித்தோமல்லோம். நித்ய ஸூரிகளிலே ஆரேனுமொருவருடைய அம்சமாகத் திருவவதரித்தவர் எந்த வடிவையுங் கொண்டு வியாபரிக்க வல்லர் என்பது கற்றுணர்ந்த பெரியோர்களின் கொள்கை.

இதற்குமேல், "மைஸூரில் நடந்த சரித்திரத்தையும் விசாரிப்போம்" என்று தொடங்கி, "அனேகமாயிரங் கணக்கான ராக்ஷஸர்களையும் அஸுரர்களையும் ஒவ்வொன்றே நாசம் செய்தவைகளான ஐந்து ஆயுதங்களும் சேர்ந்த ஒரு அவதாரத்துக்கு ஆயிரம் வாதிகளுக்கு ஏககாலத்தில் பதில் சொல்லுவது அஸாத்யமான காரியமாகுமோ? இதற்கு ஆதிசேஷராகவே வரவேண்டுமோ? ஸ்ரீசக்ரத்துக்கு ஸஹஸ்ராரம் என்று திருநாமம் இல்லையோ? ஆயிரம் நுனிகளையுடையதாதலால் ஒவ்வொரு நுனியும் ஒவ்வொரு முகமாயிருந்து பதில் சொல்லி யிருக்கலாம்" என்று எழுதியிருப்பவர்க்கு என்ன சொல்லவல்லோம். இனி ஒருகால் எம்பெருமானாரை நேரில் ஸேவித்தே இதனைக் கேட்கவேணும். "தேவரீர் திருவாழி யாழ்வானுடைய ரூபத்தைக்கொண்டு தூர்வாதிகளுக்கு உத்தரம் அருளிச்செய்திருக்கலாமே, ஏதுக்காக சேஷரூபமெடுத்தது?" என்று கேட்போம். நடந்த சரித்திரத்தை முன்னோர்கள் எழுதிவைத்திருக்க யார்மேல் ஆபத்தி கொடுப்பது? 'பெருமாள் தசரதற்குப் பிள்ளையாகப்பிறந்து இராவணனைக் கொன்றார்' என்று ஒருவர் சொன்னால், 'அவர் தசரதற்குப் பிள்ளையாகப் பிறக்கவேவேண்டா; ஸர்வ சக்தரான அவர் தம்முடைய திருவாழியை அனுப்பியே காரியம் நடத்தவல்லர்; அப்படியேதான் நடத்தியிருக்கவேணும்' என்று மற்றொருவர் சொல்

வதைப்போலிருக்கிறது இக்கூற்று. விரலுக்குத்தக்க மோதிரம் பண்ணுவதோ, மோதிரத்துக்குத் தகுதியாக விரலைச்சீவுவதோ.

பஞ்சாயுதாழ்வாருக்கு அபாரமான சக்தியுண்டென்பதைப் பற்றி ப்ரமாணங்கள் காட்டிப் பரிச்ரமப்படுவதும் வீண். சக்தி இல்லையென்று யாரும் சொல்லவரவில்லை, பெரிய திருவடிக்கும் அளவற்ற சக்தியுண்டு. அவற்றை யெல்லாம் எடுத்துரைப்பது காடுபாய்ந்த உபந்யாஸமெனப்படும். ஆயிரம் அரங்களினால் ஆயிரம் வாதிகளுக்கு உடையவர் உத்தரம் அருளிச்செய்தா ரென்று இதுவரையில் யாரேனுமொருவர் எழுதிவைத்திருப்பின் இவர்கள் சொல்வது சிறிதாகிலும் ஏற்கும். அரம் என்பதற்கு நுனியென்று பொருள்கூறத் தலைப்பட்டது அற்புதங்களினும் அரிய அற்புதம். "லவணமென்றால் எனக்குத் தெரியாதோ? எருமைச்சாணியன்றோ" என்றவட்கு இவர்கள் உபாத்தியாயர் போலும். 𑌅𑌗𑍍𑌰𑌂 [அக்ரம்] என்பது அரமெனத் திரிந்ததென்று கூறவும் துணிவார்கள் போலும்.

வடுகநம்பிகள் அருளிச்செய்த ஸ்ரீராமாநுஜ—அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரத்தில்—

"𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌪𑍂𑌰𑍍𑌣𑍇𑌶𑌃 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌵𑌰𑍍𑌧𑌨𑌰𑌕𑍍𑌷𑌕𑌃।
𑌬𑍌𑌦𑍍𑌧𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌂𑌶𑍁𑌃 𑌶𑍇𑌷𑌰𑍂𑌪𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌕𑌃."

[ஸ்ரீபக்தக்ராமபூர்ணேச விஷ்ணுவர்த்தநரக்ஷகஃ—
பௌத்தத்வாந்த ஸஹஸ்ராம்சுஃ சேஷரூப ப்ரதர்சகஃ.]

என்ற இருபத்துமூன்றாம் ச்லோகத்தை ஸேவித்தாகிலும் தெளிவு பெறலாமே. இற்றைக்கும் தொண்டனூரில் எம்பெருமானார் திருக்கோலம் ஸேவை ஸாதிக்கிறபடியைக் கேட்டுணர்ந்தாகிலும் தெளிவுபெற விரகுண்டு.

இந்த சரித்திரத்தைப்பற்றி யாம் இங்கு இவ்வளவு எழுதிற்றும் 'சரித்திரத்தின் உண்மை இது' என்று காட்டுதற்காகவே யன்றி, இதைக்கொண்டு எம்பெருமானாருடைய சேஷாவதாரத்வத்தை ஸ்தாபிக்கவல்ல கிடீர்.

“பிற்பட்டவர்களுடைய வார்த்தை * அடையார்கமலத்தென்கிற அமுதனார் பாசுரத்துக்கு விருத்தமாக இருந்தால் பூர்வர்கள் செய்திருக்கும் ஸித்தாந்தத்துக்கு விருத்தமாதலால் அபஸித்தாந்தமென்னும் தோஷத்துக்கு உள்ளாகும்” என்றதும் ஆசார்யாபசாரத்திலே பர்யவஸித்ததாகும். “விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்டঃ” என்ற ஸ்ரீதேசிகனுடைய யதிராஜஸப்ததி ச்லோகார்த்தம் அபஸித்தாந்தமென்று ஸ்தாபிதமாயிற்று. “தேசிகன் எம்பெருமானாரை விஷ்வக்ஸேநராக உத்ப்ரேக்ஷித்திருக்கலாம்” என்றதும் முகமஸ்தீதி பாஷணமேயாம். அந்த ச்லோகத்தில் உத்ப்ரேக்ஷாலிங்கம் ஒன்றுமில்லாமையை விவேகிகள் கண்டறிவார்கள். * அடையார் கமலமென்கிற இப்பாசுரந்தான் உத்ப்ரேக்ஷையாயிருக்கலாகாதோ? என்று கேட்போமாகில் வாய்திறக்கவுண்டோ வழி.

இனி, உத்ப்ரேக்ஷையென்றால் என்னவென்று விமர்சித்தல் நன்று. வாஸ்தவார்த்தமல்லாமல் கவியின் புத்திசமத்காரத்தாலே ஏறிட்டுச் சொல்வதுதான் உத்ப்ரேக்ஷையென்று பூர்வபக்ஷிகளின் கருத்தாகக் காண்கிறது. அப்படியாகில், ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஸ்ரீதேசிகன் தமது வரலாறு அருளிச்செய்யுமிடத்தில் “घण्टा हरेः समजनिष्ट यदात्मनेति — [illegible]” என்று தம்மைப் பண்டிதர்கள் திருமலைமால் திருமணியின் திருவவதாரமாக உத்ப்ரேக்ஷிப்பார்களென்று அருளிச்செய்துள்ளமையால் அதனை அயதார்த்தமென்றிசைய வேண்டிற்றாகும். ஆகையாலே உத்ப்ரேக்ஷா சப்தார்த்தத்தைப் பூர்வபக்ஷிகள் நிஷ்கர்ஷிக்கவல்லரல்லர். ஆனபின்பு “தேசிகன் உடையவரை விஷ்வக்ஸேநராக உத்ப்ரேக்ஷித்திருக்கலாம்” என்றது அவிம்ருஷ்ட ரமணீயம்.

“अपृथक्प्रतिपन्नयन्मयत्वैर्ववृते पञ्चभिरायुधैर्मुरारेः” [அப்ருதக் ப்ரதிபந்நயந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:] என்ற யதிராஜ ஸப்ததி ச்லோகத்தை உதாஹரித்து “இதன் அர்த்தமாவது” என்று தொடங்கிப் பூர்வபக்ஷிகள் எழுதியிருக்கும் பொருள் பண்டிதர்களால் ஆரா

யத்தக்கது. வவ்ருதே [வவ்ருதே] என்றது ஹாவெவ்ஷயோம [பாவேப்ரயோக]மேயன்றி கர்த்தரிப்ரயோகமன்று. கோரமாதவஞ் செய்தாலும் கர்த்தரிப்ரயோகமாக நிர்வஹிக்க வழியில்லை. "முராரேஃ பஞ்சபிராயுதைஃ அப்ருதக்ப்ரதிபந்நயந்மயத்வைஃ வவ்ருதே" என்று அந்வயித்து பாவேப்ரயோகரீதியில் பொருளுரைக்க வேண்டியிருக்க அங்ஙன முரையாது "ஒன்றைச் சேர்ந்து எந்த பாஷ்யகாரர் ரூபத்தையடைந்த பகவானுடைய ஐந்து ஆயுதங்களுடைய அம்சங்களாலும் வ்ருத்தியை யடைந்தாரோ" என்று பொருளுரைத்திருப்பது ஒருபடியாலும் பொருத்த முடைத்தன்று. ஸாஹிதீவ்யுத்பத்தியின் ஸௌஷ்ட்டவத்தை விளக்கின வீறு வியக்கத்தக்கது. வவ்ருதே என்பதற்கு 'வ்ருத்தியடைந்தாரோ' என்று பொருள்கூறு மிவர்கள் ச்லோகத்தின் கருத்தை எங்ஙனே உபபாதிக்க வல்லர்களோ, அறியோம். (வவ்ருதே) வ்ருத்திக்ரியை பஞ்சாயுதநிஷ்டமேயன்றி யதீந்த்ரநிஷ்டமன்று. ஒரு ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா இப்படி கர்த்தரிப்ரயோகமாக உரைத்திருப்பதை வழிகாட்டியாகக் கூறமுற்படுபவர்கள் "ஸூநவஃ ஜாதஃ ஸுநஃ யஷ்டீ-ஃயதெ." என்கிற நியாயத்தை நினைப்பூட்டினார்களாமத்தனை. மற்றொரு மணிப்ரவாள வ்யாக்யாதா கர்மணிப்ரயோக ரீதியில் பொருளுரைத்துவிட்டு "இது பாவேப்ரயோகம்" என்று உபஸம்ஹரித்தார். ஹந்த! ஃமஃயாஷ வெஃராவிஜ்ரமயாஃ. இது கிடக்க.

ஆக இவ்வளவும் சர்ச்சிக்கப்பட்டுவந்த இவ்விஷயத்தில் ஸாரமாகச் சொல்லவேண்டிற்றொன்றுண்டு. எம்பெருமானார் சேஷாவதாரராயினும் விஷ்வக்ஸேநாவதாரராயினும் மற்றும் யாரேனுமொரு நித்யஸூரியின் அவதாரமாயினும் அதில் நமக்கு விப்ரதிபத்திலேசமுமில்லை: ஸ்ரீதேசிகனைப்பற்றி ஸ்ரீநயனாராசார்யர் "வேங்கடேசாவதாரோயம் தத்கண்டாம்சோதவா பவேத்-யதீந்த்ராம்சோத வேத்யேவம் விதர்க்யாயாஸ்து மங்களம்." என்ற ச்லோகத்தால் "இவர் திருவேங்கட முடையானுடைய அவதாரமோ! திருமலைமால் திருமணியின் அவதாரமோ! எம்பெருமானாருடைய அவதாரமோ! என்றிப்படி பலவாறாக உத்ப்ரேக்ஷிக்கப்படுவர் தேசிகன்" என்று ஒரு நிஷ்கர்ஷ மில்லாததுபோல் அருளிச் செய்திருக்கச்

செய்தையும் சரித்திர நூல் மூலமாகத் திருமணியவதார மென்னுமிடமே நிர்த்தாரிக்கப்பட்டிரா நின்றது. ஸுஸ்பஷ்டமாய் சங்கால வலேசத்துக்கும் இடமில்லாமலே திருமணியவதாரராக அறுதியிடப்பட்டுள்ள தேசிகனை "ஸ்ரீவேங்கடாத்ரிநாதீய கண்டாம்ஸாய மஹாத்மநே। வேதாந்தாசார்யவர்யாய வேங்கடேஸாய மங்களம்." என்று சொல்லி ஏத்தலாமாயிருக்க அப்படி ஏத்தாது விதர்க்கமேயுள்ளதாக விளம்புகின்றார் நயனாராசார்யர். "விதர்க்யாயாஸ்து மங்களம்" என்ற அந்த ச்லோகத்தைப் பூர்வபக்ஷிகள் எங்ஙனே நிர்வஹிக்க நினைப்பார்களோ அறியோம். அதனை நன்குபொருத்தி நிர்வஹிக்கும் வகை நமக்கோ எளிது. எங்ஙனே யென்னில்;—

சரித்திர நூல் என்பது வேறு, ஸ்தோத்ர நூல் என்பது வேறு. அவதாரரஹஸ்யம் உள்ளது உள்ளபடி ப்ரதிபாதிக்கப்படுவது சரித்திர நூல்களில். ஸ்தோத்ர நூல்களிலோ வென்னில், கவிகளின் புத்தி சமத்காரத்துக்குத் தக்கபடி ப்ரசம்ஸாபரங்களான பலவகை வர்ணனைகள் இருக்கக்கூடும். அவற்றைக்கொண்டு சரித்திர நூல்களால் அறுதியிடப்படுகிற அவதாரரஹஸ்ய தத்துவங்களை உபமர்த்திக்க வொண்ணாது. தேசிகன் திருமணியவதார ரென்னுமிடம் சரித்திர நூல்களால் நன்கு ஸ்தாபிக்கப்பட்ட விஷயமாதலால் அதற்கு மாறுபாடாக ஸ்தோத்ர நூல்களில் உள்ளவை ப்ரசம்ஸோக்திகளாகக் கருதப்பட வேண்டுமேயன்றி, அவற்றையே முக்கியமாகக் கொள்வதானால் ஒருவகை நிஷ்கர்ஷமுமில்லாமே எல்லாம் வ்யாகுலங்களா யொழியும.

அப்படியே எம்பெருமானாருடைய சரித்திர நூல்களில் அவருடைய அவதார ரஹஸ்யம் எவ்வாறு கூறப்பட்டிருக்கின்றதோ அவ்வாறே கொள்ளப்படவேண்டும். இதிஹாஸமாலா, திவ்ய ஸூரிசரிதம், யதிராஜ வைபவம், உபயகலா ஸம்ப்ரதாயஸ்த குரு பரம்பராப்ரபாவங்கள், ப்ரபந்நாம்ருதம்—இவைபோன்ற பல க்ரந்தங்கள் சரித்திர நூல்களாயுள்ளன. இவற்றில் சேஷாவதாரத்வமே ஒருமிடறாகக் கூறப்பட்டிருத்தலால் அதுவே யதார்த்தமாகக் கொள்ளற்பாலது. இராமாநுச நூற்றந்தாதி, யதிராஜஸப்ததி—இத்யாதிகள் ஸ்தோத்ர நூல்களேயன்றி சரித்திர நூல்க

ளல்ல. அவற்றில் கவி புத்திசமத்காரத்துக்கேற்பவும் ப்ரதிபாத்யர்களுடைய ப்ரபாவ விசேஷங்களுக்கேற்பவும் வெவ்வேறு வகையாகவும் உல்லேகித்துச் சொல்லக்கூடும். "விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ்த்ரி தண்ட:" என்று தேசிகன் உத்ப்ரேக்ஷித்தாரென்று இவர்கள் கூறியபடியே நூற்றந்தாதியில் * அடையார் கமலப் பாசுரமிதனில் அருளிச்செய்ததும் ஒரு உத்ப்ரேக்ஷா ப்ரகாரமேயென்று கொள்ளுதல் பொருத்தமுடைத்து.

திருவனந்தாழ்வானே எம்பெருமானாராகத் திருவவதரித்தானென்று வாய்விட்டு அருளிச்செய்தவர்களும்

"கிம் ஹோஷிராஜோவதார ஸ்வயஃ வோநாயிநா
யஷூவா-தாரக்ஷிம்। வஹுாயாய் கிஂநா வஸுஹிவ,
ஜஜெக்ஷ ஸ்ரீயஃ வதிவெதி விதக்யு க்ஷவீக."

[திருவனந்தாழ்வானே மீண்டு மிங்ஙனே திருவவதரித்தாரோ? பஞ்சாயுதாழ்வார்கள் தாம் திருவவதரித்தார்களோ? அன்றி எம்பெருமான்றானே திருவவதரித்தானோ? என்று விகல்பிக்கும்படியாக விளங்கினார் எம்பெருமானார்] என்றும் ஒரு புடை சொல்லி வைத்தனர். "சேஷாவாஸைங்யநாதோவா ஸ்ரீபதிர்வேதி ஸாத்விகை:—விதர்க்யாய மஹாப்ராஜ்ஞைர்யதிராஜாய மங்களம்." என்று வடுகநம்பியும் அருளிச்செய்து வைத்தார்.

ஒருபடி நிர்த்தாரணமிருக்கச்செய்தே பலபடியாக விதர்க்கிப்பர்களென்று சொல்வது என்கொண்டென்னில்; வைபவவிசேஷங்களைப் பார்த்தால் பலபடியும் சொல்லலாயிருக்கையாலே. இஃது எம்பெருமானார் விஷயமொன்றிலுமேயன்று. ஆழ்வார்கள் விஷயத்திலும் மற்றுமுள்ள பல ஆசாரியர்கள் விஷயத்திலும் இப்படியே விதர்க்கங்கள் காண்கின்றன; இன்ன ஆசிரியர் இன்ன அவதாரந்தான் என்று இன்று நாம் நிர்த்தாரணம்செய்து ஆகவேண்டியதொன்றுமில்லை. 'எம்பெருமானார் பஞ்சாயுதாவதாரர்' என்று ஒருவர்க்குக் கொள்கையாயின் அதனை மறுத்துரைக்க வருவாராருமில்லை. பெரிய திருவடியின் அம்சமென்று மற்றொருவர்க்குத் தோன்றினால் அதுவும் மறுத்துத் தீரவேண்டிய விஷயமன்று. நித்யஸூரிகளில் யாரேனுமொருவருடைய அம்சமாக ஆசார்யரைச் சொல்வது பூஷணமேயல்லது தூஷணமல்லவிறே.

பஞ்சாயுதாழ்வார்களுள் ஒருவரான திருவாழியாழ்வாரொருவரே எம்பெருமானாராய்த் திருவவதரித்ததாகக் கூறுவதில் குறையொன்று மில்லாதிருக்கச் செய்தேயும் பஞ்சாயுதாழ்வார்களும் ஒன்று சேர்ந்து வந்து திருவவதரித்ததாக அருளிச்செய்த கணக்கிலே, அநந்தகருட விஷ்வக்ஸேநாதிகளான பல நித்யஸூரிகளும் ஒன்று சேர்ந்து எம்பெருமானாராகத் திருவவதரித்தனர் என்று ஒரு பக்தசிரோமணி திருவுள்ளம்பற்றினால் அதுதானும் மறுத்துரைக்க வேண்டிய விஷயமோ? அன்று.

"அவருடைய அவதாரமன்று, இவருடைய அவதாரந்தான்" என்று ஒரு ஆக்ரஹந்தோற்ற நிர்ப்பந்திக்கப் புகுவது விவேகிகளின் பணியாகமாட்டாது. அப்படி நிர்ப்பந்தித்தே யாகவேண்டிய ஆவச்யகத்வமுளதாகில், எம்பெருமானாரைப் பற்றினவரையில் சேஷாவதாரரென்று ஸித்தாந்தப்படுத்துவதே பொருத்தமுடையதாம். இவ்வகைக்கே ப்ரமாணோபபத்திகள் மலிந்து கிடக்கின்றமையை ப்ராமணிக ஹ்ருதயங்கமமாகப் பன்னியுரைத்தோம்.

"அபிநிவேஶவஶீக்ருதசேதஸாம் ப்ஹுவிதா(அ)பி ஸமஸ்தி நு ஸம்ப்ரம:"—"விவேகவிலோபகோ ஹ்யபிநிவேஶோ ரோக:." [ஒரு விஷயத்தில் 'இது இப்படிதான்' என்று ஆக்ரஹம் வைத்துவிட்டால் விவேகவுணர்ச்சி குலைந்தொழியும்] என்று பூருவர்கள் அருளிச்செய்த கட்டளையிலே, எம்பெருமானாருடைய சேஷாவதாரத்வத்துக்கு எவ்வகையினும் இசையலாகாதென்கிற அபிநிவேசமுடையோர், இதில் நாம் எடுத்துக்காட்டிய ப்ரமாணோபபத்திகளைப் பழிக்கவேண்டி அவ்வோ க்ரந்தங்களுக்கும் க்ரந்த கர்த்தாக்களுக்கும் குற்றங்குறைகளை ஏறிட்டுக் கூறத்தலைப்படுவரேல்; "ஸ்வதோஷேணாக்ருஷ்டைர் நிஜமதிதுஷ் ப்ஹுமதம் ஸமுத்ஸ்ரிஜ்யாவ்ரூஹோ ஸ்பஷ்ட ஜனம்." என்கிற தேசிக திவ்யஸூக்தியை அநுஸந்தித்து மகிழ்ந்திடுவோமத்தனை. .... .... .... (௩௩)

நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பெலத்தைச் செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினைதென்
புலத்தில் பொறித்த வப்புத்தகச்சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பொறுத்தது * இராமாநுசன்தன் நயப்புகழே. (௩௪)

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசன் தன் | எம்பெருமானுடைய | பிறங்கியது இல்லை | பிரகாசிக்கவில்லை ; |
| நயம் புகழ் | கல்யாண குணங்களானவை | (பின்னை எப்போது பிரகாசித்தன? என்னில் ;) | |
| நிலத்தை செறுத்து உண்ணும் நீசம் கலியை | பூலோகத்தை ஹிம்ஸித்துத் தின்கிற நீசனான கலி புருஷனுடைய | என் பெய் வினை | என்னாலே செய்யப் பட்ட பாவங்களை |
| | | தென் புலத்தில் | யமலோகத்தில் |
| | | பொறித்த | எழுதிவைத்த |
| நினைப்பு அரிய பெலத்தை செறுத்தும் | இவ்வளவென்று நினைக்க முடியாதபடி அளவற்றதான பராக்ரமத்தைத் தொலைத்த வளவிலும் | அப் புத்தகம் சும்மை | அந்த புஸ்தகக் கட்டுகளை |
| | | பொறுக்கிய பின் | கொளுத்திவிட்ட பின்பு |
| | | நலத்தை பொறுத்தது | விளக்கம் பெற்றன. |

* * *—எம்பெருமானுடைய ஞானம், சக்தி முதலிய திருக் கல்யாண குணங்கள் எப்போது பிரகாசித்தனவென்றால், இந்நில வுலகத்தில் கலிபுருஷன் செங்கோல் செலுத்த முடியாதபடி அவ னுடைய வலிமையைத் தொலைத்துக் கிருதயுக தர்மமே எங்கும் நடை பெறும்படி செய்தருளினவாறே "இவர் மஹா புருஷர் ; அரிய பெரிய ஞான சக்திகளை யுடையவர்" என்று உலகத்தா ரனைவரும் போற்ற நேர்ந்ததனால் கலியின் கொடுமையைக் கெடுத்தது காரண மாகவே இவருடைய திருக்கல்யாண குணங்கள் நன்றாக விளங்கின —என்பர் சிலர் ; அது தகுதியல்ல ; கலிதோஷத்தைப் போக்கின வளவிலும் எம்பெருமானாருடைய திருக்குணங்கள் பொலிவு பெற வில்லை. பின்னை எப்போது பொலிவு பெற்றனவென்றால், எனது அளவற்ற பாவங்களையெல்லாம் சித்திரகுப்தன் எழுதிவைத் திருந்த பெரிய புத்தகச் சுமையைக் கொளுத்திவிட்டு என்னை நிஷ் கல்மஷனாக்கி அடிமைகொண்டாரென்கிற விஷயம் வெளிவந்த பிறகுதான் அவருடைய திருக்குணங்கள் ஆச்சரியமாக விளங்கின என்கிறார்.

இதனால், தம்முடைய பாவங்கள் ஸர்வசக்தனாலும் போக்க முடியாதவை என்பதும், கலியின் கொடுமையிற் காட்டிலும் தமது

கொடுமை வலிதாயிருந்ததென்பதும், இப்படி மஹா பாபிஷ்டரா யிருந்த தம்மை க்ஷமித்தருளி உஜ்ஜீவிக்கச் செய்தமையைக்கண்டு உலகத்தாரனைவரும் ஆச்சரியப்பட்டார்களென்பதும் தெரிவிக்கப் பட்டன.

நிலத்தைச் செறுத்துண்ணும்—பூமியிலுள்ள ஸகல ஜனங் களும் மனம்போனபடி கோணலாக நடக்குமாறு துர்ப்புத்தியை விளைத்து இந்த ஜகத்தைக் குட்டிச்சுவரடிக்கிற கலிபுருஷன் என்ற படி. இரண்டாமடியில், பலத்தைச் செறுத்தும் என்றே பாடம் வழங்கிவந்தாலும் பெலத்தை என்கிற பாடமே ஸத்ஸம்ப்ரதாய ஸித்தம். பொருள் ஒன்றே. மோனையின்பத்திற்குச்சேர, பெலத்தை என்றே யிருக்கவேண்டும்; ஜயம் என்பது ஜெயம் என வும், கருடன் என்பது கெருடன் எனவும், சண்பகம் என்பது செண்பகம் எனவும் வருதல் காண்க: திருப்பள்ளியெழுச்சியில் ஒன்பதாம் பாட்டில் "கீதங்கள் பாடினர்" என்றதற்கு ஏற்ப, கேந்தருவரும் எனப் பிரயோகிக்கப்பட்டுள்ளதுங் காண்க.

புத்தகம் = புஸ்தகம்; சும்மை—சுமை. பொறுக்குதல்— கொளுத்திவிடுதல். "திரணரகெண்ணிய சித்திரகுத்தன் தெரித்து வைத்த, சுருணையிலேறிய சூழ்வினை முற்றும் துறந்தனமே" என்ற தேசிகப் பிரபந்தப் பாசுரம் இங்கு நினைக்கத் தகும். ... (௫௪)

நயவே னொருதெய்வம் நானிலத்தே * சிலமானிடத்தைப்
புயலே யெனக்கவி போற்றிசெய்யேன் * பொன்னரங்கமென்னில்
மயலேபெருகு மிராமாநுசன் மன்னு மாமலர்த்தா
ளயரேன் * அருவினையென்னை யெவ்வாறின் றடர்ப்பதுவே? (௫௫)

ஒரு தெய்வம் — வேறொரு தெய்வத்தை
நயவேன் — விரும்பமாட்டேன்;
நானிலத்தே — இவ்வுலகில்
சில மானிடத்தை — சில நீசமனிசர்களைக் குறித்து
புயலே என — ('மேகம்போலே வர்ஷிக்கிற உதாரனே!' என்று அதிவாத மாகச்) சொல்லி

கவி போற்றி செய்யேன் — கவிகள்கட்டி ஸ்தோத்ரம் செய்ய மாட்டேன்;
பொன் அரங்கம் என்னில் — 'திருவரங்கம்' என்று சொன்னவாறே
மயல் பெருகும் — அளவற்ற வ்யாமோஹத்தை யடைகின்ற
இராமாநுசன் — எம்பெருமானுடைய

| | | | |
|---|---|---|---|
| திருவாய் மொழியின் மணம் தரும் இன் இசை மன்னும் இடம் தொறும் | திருவாய் மொழியினுடைய பரிமளம் மிக்க இனிய இசையுள்ள இடங்களெங்கும் | மா மலராள் புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும் பதிதொறும் | பிராட்டி நித்யவாஸம் பண்ணுகிற அழகிய மார்பை யுடைய திருமால் எழுந்தருளி யிருக்கிற திவ்ய தேசங்களெங்கும் |
| | | புக்கு நிற்கும் | எழுந்தருளியிருப்பர். |

* * *—ஞானம் தலையெடுத்த மஹான்களுடைய திரள் எங்கெங்கு இருக்கின்றதோ அங்கெல்லாம் எழுந்தருளியிருப்பவரும், திருவாய்மொழியின் பரமபோக்யமான இசை எங்கெங்கு நிகழ்கின்றதோ அங்கெல்லாம் ஸேவைஸாதிப்பவரும், ச்ரியঃபதியான ஸர்வேச்வரன் எங்கெங்கு ஸந்நிதாநம் பண்ணுகிறானோ அந்தத் திருப்பதிகளெங்கும் புகுந்து நிற்பவருமான எம்பெருமானார் அஸ்மத்குலகூடஸ்தர் என்றாராயிற்று.

"அணியரங்கன் திருமுற்றத்தடியார் தங்களின்பமிகுபெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனே யென்றுகொலோ இருக்குநாளே" (பெருமாள் திருமொழி) என்றபடி மஹாபக்தர்களுடைய கோஷ்டிகளில் அந்வயித்திருப்பது பரம புருஷார்த்தமாதலால் அதனைப் பெற்றிருப்பவர் எம்பெருமானார். "குருகூர்நம்பி பாவினின்னிசை பாடித்திரிவனே" என்கிற புருஷார்த்த நிஷ்டர்களுடைய கோஷ்டியிலும் அந்வயித்திருப்பர். பதியே பரவித்தொழுந் தொண்டருடைய திரளிலும் கலந்து பரிமாறுவர்.

எம்குலக்கொழுந்து=ஒரு மரத்தின் அபிவிருத்திக்கு அதன் கொழுந்து காரணமாதல்போல எமது குலத்தின் பெருக்குக்குக் காரணமானவர் எம்பெருமானார் என்றபடி. ஆகவே, கொழுந்து என்றது உவமவாகுபெயர். புக்கு நிற்குங் குணந்திகழ் கொண்டலாகிய இராமாநுசன் எங்குலக்கொழுந்து என்றே அந்வயித்து உரைக்கவுமாம். ... .... ... ... (கo)

கொழுந்துவிட்டோடிப் படரும்வெங்கொள்வினையால் * நிரயத்
தழுந்தியிட்டேனை வந்தாட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழுந்தவத்தோ னெம்மிராமாநுசன் தொல்புகழ் சுடர்மிக்
கெழுந்தது * அத்தால்நல் லதிசயங்கண்ட திருநிலமே. (சுக)

| | | | |
|---|---|---|---|
| அரு முனிவர் தொழும் | அருமையான நிஷ்டையையுடைய மஹான்களாலே ஸேவிக்கப் பெற்றவராயும் | நிரயத்து அழுந்தி யிட்டேனை | ஸம்ஸாரமாகிற நரகத்திலே அழுந்திக்கிடந்த என்னை |
| தவத்தோன் | ப்ரபத்தியாகிற தபஸ்ஸையுடையவராயு மிருக்கிற | வந்து ஆள் கொண்ட பின்னும் சுடர் மிக்கு எழுந்தது | வந்து ஆட்படுத்திக் கொண்ட பின்பும் ஒளி குன்ருதே முன்னிலும் விசேஷமாக விளங்காநின்றன; |
| எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானருடைய | | |
| தொல் புகழ் | நித்யமான கல்யாண குணங்கள்—, | அத்தால் | அதைக்கண்டு |
| கொழுந்து விட்டு ஓடி படரும் வெம் கோள் வினையால் | மேன்மேலும் அதிகமாகப் பெருகுகின்ற க்ரூரமாய் ப்ரபலமான துஷ்கர்மத்தாலே | இரு நிலம் | விசாலமான இப் பூமண்டலம் |
| | | நல் அதிசயம் கண்டது | மிக்க ஆச்சரியங் கொண்டது. |

* * *—உலகில் சிறந்த மஹான்களா யிருப்பவர்கள் ஏறக் குறையத் தமக்கு ஸமாநஸ்கந்தராயிருப்பவர்களோடே பழகுவர்களேயன்றி, மிகவும் நீசராயிருப்பவர்களைக் கண்ணெடுத்தும் பாரார்கள்; எவ்வகையான குணமுமில்லாத கொடிய துஷ்டனைத் தங்களருகில் சேர்த்துக்கொண்டார்களாகில் அவர்கள் மஹான்களா யிருந்தபோதிலும் உலகத்தாரால் பழிக்கப் படுவர்கள்; உபயோகமற்ற நீசர்களையெல்லாம் அருகிற் சேர்த்துக்கொண்டு தாங்களும் நீசராய்விடுகிறுர்களென்று உலகத்தாரால் பழிக்கப்பட்டு மேன்மை குன்றித் தாழ்மை பெறுவார்கள்; இது உலகிற்கண்ட விஷயம். எம்பெருமானரோ வென்னில், பெரிய பெரிய ஸத்துக்களாலே புடைசூழப்பட்டு மஹநீயராயிருந்தும் பாவங்கள் கூடு பூரித்துக் கிடக்கின்ற பாவியேனைத் தாமாகவே விஷயீகரித்து அத்தாணிச் சேவகத்துக்கு ஆளாக்கிக்கொண்டார்; இதைக்கண்டு ஒருவரும் தூஷிக்கவில்லை; பாழாய்ப்போகிற ஒரு நித்யஸம்ஸாரியை நல்ல பொருளாக ஆக்கினுரென்று எல்லாராலும் கொண்டாடப்பட்டு அவருடைய ஸௌசீல்யம் ஸௌலப்யம் முதலிய குணங்கள் முன்னிற்காட்டிலும் விசேஷமாக விளங்கினவேயன்றிக் குறைவில்லை. உலகத்தில் மற்ற பேர்களுடைய குணங்களை

மழுங்கச் செய்யவல்ல காரியமே எம்பெருமானார் திறத்தில் குணங்களின் ப்ரகாசத்திற்குக் காரணமாயிற்றென்கிற இதனை ஆராய்ந்தவர்களனைவரும் இது ஒரு அற்புதமான விஷயமென்று ஆச்சரியப்பட்டார்கள் என்றதாயிற்று.

இப்பாசுரத்திற்கு வேறொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம்; எம்பெருமானாருடைய குணங்கள் மஹாபாபியான என்னை ஆட்படுத்திக்கொண்டவளவோடு த்ருப்திபெற்று விடாமல் 'இப்படிப்பட்ட பாபிகள் இன்னும் யாரேனும் கிடைப்பாருண்டோ? கிடைப்பாருண்டோ?' என்று இன்னமும் நாக்கு நீட்டிக் கிளர்ந்து செல்லுகின்றன—என்னவுமாம். .... (சுக)

இருந்தேனிருவினைப் பாசங்கழற்றி * இன்றுயானிறையும்
வருந்தேனினியெம் மிராமாநுசன் * மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப் புன்மையினோர்க்கொன்றும்நன்மைசெய்யாப்
பெருந்தேவரைப்பரவும் * பெரியோர்தம் கழல்பிடித்தே. (சுஉ)

எம் இராமாநுசன் { ஸ்வாமி எம்பெருமானாருடைய
மன்னு மா தாள் மலர் பொருந்தா நிலை உடை புன்மையினோர்க்கு { சிறந்த திருவடித் தாமரைகளில் சேராத ஸ்வபாவத்தையுடையவர்களான நீசர்களுக்கு
ஒன்றும் நன்மை செய்யா { ஒருவிதமான உபகாரமும் செய்யாத
பெரு தேவரை } பெரிய பெருமாளை
பரவும் போற்றுகின்ற
பெரியோர் தம் { ஆழ்வானுகிற மஹானுடைய
கழல் இன்று பிடித்து { திருவடிகளை இன்று ஆச்ரயித்தேனுகை. பின்பு
இரு வினை பாசம் கழற்றி இருந்தேன் { புண்ணியம் பாவமென்று இரண்டு வகையான கருமபாசங்களினின்று விடுபட்டவனுனேன்;
யான் { இப்படி நிர்மலனுகப்பெற்ற அடியேன்
இனி இறையும் வருந்தேன் { இனிமேல் கொஞ்சங்கூட வருத்தப்பட மாட்டேன்.

* * *—இன்று முதலாக இனிமேலுள்ள காலத்தில் ஒரு போதும் நான் ஈஷத்தும் வருந்தமாட்டேன்; என்றும் பரமாநந்த பூர்ணனுகவேயிருப்பேன்; என்ன காரணமென்கிறீர்களோ?—ஸகல கருமங்களினின்றும் விடுபட்டேன். அதற்குத்தானென்ன

காரணம்? கூரத்தாழ்வான் திருவடியை இன்று ஆச்ரயிக்கப் பெற்றேனன்றோ; அது காரணமாகவேயாம். அவர்தாம் எப்படிப் பட்டவர்?—பெரிய பெருமாளைப் போற்றுமவர். பெரிய பெருமாள் எப்படிப்பட்டவர்?—; கேட்டார் கேட்டவற்றையெல்லாம் கொடுக்கும் பரம உதாரராயினும் எம்பெருமானாரை அடிபணியாத பாவிகளுக்கு எவ்விதமான நன்மையும் செய்யமாட்டாதவர்.

ஸ்ரீ ராமாநுஜ பக்தர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே ஸர்வஸ்வதாநம் பண்ணவல்ல பெரிய பெருமாளைப் போற்றுகின்ற கூரத்தாழ்வானை அடைந்து உஜ்ஜீவித்த அடியேனுக்கு இனி ஒரு வருத்தமும் விளையக் காரணமில்லையென்று தம்முடைய க்ருதக்ருத்யத்வத்தைக் கூறினாராயிற்று.

இருவினைப் பாசங்கழற்றி=பாவம்போலே புண்ணியமும் பரகதிக்குப் பிரதிபந்தகம் என்பதை உணர்க. பாவம் இரும்பு விலங்கென்றும், புண்ணியம் பொன் விலங்கென்றும் சாஸ்த்ரங்கள் கூறும்.

பெருந்தேவர் என்று பெரிய பெருமாளைச் சொல்லுகையன்றியே பெரிய ஞானிகளைச் சொல்லிற்றாகவுமாம். பெரியோர் என்று ஆழ்வானை மாத்திரம் சொல்லுகையன்றியே பல மஹான்களைச் சொல்லிற்றாகவுமாம். .... .... ... ... (௬௨)

பிடியைத்தொடருங் களிறென்ன * யானுன்பிறங்கியசீர்
அடியைத் தொடரும்படி நல்கவேண்டும் * அறுசமயச்
செடியைத்தொடரும் மருள்செறிந்தோர் சிதைந்தோடவந்திப்
படியைத்தொடரும் * இராமாநுச மிக்கபண்டிதனே. (௬௩)

| | |
|---|---|
| அறு சமயம் செடியை தொடரும் மருள் செறிந்தோர் | பாஹ்யமான ஆறு மதங்களாகிற தூறுகளிலே படிவதற்குக் காரணமான அவிவேகம் நிறைந்த மூடர்கள் |
| சிதைந்து ஓட | பங்கமடைந்து வெருவி ஓடும்படியாக |
| வந்து இப்படியை தொடரும் | இப்பூமியிலே வந்து அவதரித்து (நம்போல்வாரை விஷயீகரிப்பதற்குப்) பின் தொடர்கின்ற |
| மிக்க பண்டிதன் | மஹாபண்டிதரான |
| இராமாநுச | எம்பெருமானாரே!, |

பிடியை தொடரும் களிறு என்ன — யானைப் பேடையைப் பின்பற்றித் திரிகின்ற ஆண் யானைபோல
யான் — அடியேன்
சீர் பிறங்கிய உன் அடியை தொடரும் படி நல்க வேண்டும் — ஸௌந்தரியம் முதலிய குணங்கள் விளங்குகின்ற தேவரீரது திருவடிகளைப் பின்பற்றும்படி கிருபை செய்தருளவேணும்.

* * *:—ஸ்வாமிந் !, யானையானது தன் பேடையினிடத்துப் பெருங்காதல்கொண்டு அதனையே பின்பற்றித் திரிவதுபோல் அடியேன் தேவரீருடைய அழகிய திருவடிகளையே அளவற்ற அபிநிவேசத்தோடு அநுவர்த்தித்துச் செல்லும்படியாக அருள் புரியவேணுமென்று வேண்டினாராயிற்று.

எம்பெருமானாருடைய படிகளைப் பின்னடிகளிற் பேசுகின்றார் ;—சிறந்த சோலையிலே ஆநந்தமாக வாழ்வாரைப்போலே உத்தமமான ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்தை அவலம்பித்து வாழலாமாயிருக்க, அப்படி வாழப்பெறாமல், தூறுபோன்ற அபஸித்தாந்தங்களிற் படிந்து கெட்டுப் போவதற்குக் காரணமான அவிவேகத்தையுடைய மூடர்கள் வாதத்திற் பராஜயப்பட்டு ஓடும்படியாக இந்நிலத்தில் திருவவதரித்து நம்போல்வாரை ஆட்கொள்வதற்குத் தேடித்திரிபவரும் மஹாபண்டிதருமாவர் எம்பெருமானார் எனப்பட்டது. ... ... .... .... (கூங)

பண்டருமாறன் பசுந்தமிழ் * ஆனந்தம் பாய்மதமாய்
விண்டிடவெங்க ளிராமாநுசமுனிவேழம் * மெய்ம்மை
கொண்டநல்வேதக் கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது * வாதியர்காளுங்கள் வாழ்வற்றதே. (கூச)

எங்கள் இராமாநுச முனி வேழம் — எங்களுக்கு விதேயமான ஸ்ரீராமாநுஜமுனியாகிற மத்தகஜமானது,
மாறன் — நம்மாழ்வார்
பண் — இசைகளாலே
தரு — அருளிச்செய்த
பசுந்தமிழ் ஆனந்தம் — செந்தமிழான திருவாய்மொழியில் விளைந்த ஸந்தோஷம்

| | | | |
|---|---|---|---|
| பாய் மதம் ஆய் விண்டிட | பெருகுமதநீராக ஒழுகப்பெற்று | குவலயத்தே | இப் பூமண்டலத்திலே |
| மெய்ம்மை கொண்ட நல் வேதம் கொழு தண்டம் ஏந்தி | ஸத்யவாதியான நல்ல வேதமாகிற பெரிய தடியைத் தூக்கிக் கொண்டு | மண்டி வந்து என்றது | உங்களை நெருக்கிக் கொண்டுவந்து மேலிடாநின்றது; |
| | | வாதியர்காள் | துர்வாதிகளே! |
| | | உங்கள் வாழ்வு அற்றது | உங்களுடைய பிழைப்பு போயிற்று. |

* * *:—குத்ஸிதவாதங்கள் பண்ணுகிற துர்வாதிகளே! இனி நீங்கள் பிழைக்க வழியில்லையென்று நிச்சயித்துக் கொள்ளுங்கள்; ஏன்? என்கிறீர்களோ; எம்பெருமானாரென்னும் ஒரு மதயானையானது உங்களைப் புடைப்பதாகப் பெரிய தடியையெடுத்துக்கொண்டு எதிரிட்டு வாராநின்றது; இதற்குத் தப்பிப்பிழைக்க உங்களாலாகாது—என்கிறார்.

யானைக்கு மதநீர் பெருகுமே; இந்த ஸ்ரீராமாநுஜ கஜராஜனுக்கு எது மதநீர் என்ன; முதலடியிற் கூறுகின்றார். திருவாய்மொழின் அநுபவத்தாலுண்டான ஆநந்தரஸமே இந்த கஜராஜனுக்கு மதநீர்ப் பெருக்காம். இதனால், எம்பெருமானார் எப்போதும் திருவாய்மொழியை அநுபவித்துக் களிப்புறுவர் என்றதாகிறது.

இந்த கஜராஜன் எந்தத் தடியை எடுத்துக்கொண்டு வருகிறதென்ன; மூன்றாமடியிற் கூறுகின்றார்;—யதார்த்தவாதியான வேதத்தைக்கொண்டே துர்வாதிகளைப் புடைக்குமவராதலால் வேதமே தடியாகச் சொல்லப்பட்டது.

உங்கள் வாழ்வு அற்றதே என்றது—இனி நீங்கள் நாலுபேர்களைச் சேர்த்துக்கொண்டு மதப்ரவசனம் பண்ணமுடியாதென்றபடி.

வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு * என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம் தாரணிபெற்றது * தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்த குணத்தினர்க்கந்
நாழற்றது * நம்மிராமாநுசன் தந்தஞானத்திலே. (சுரு)

| | | | |
|---|---|---|---|
| நம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் | தவம் பெற்றது | பாக்கியம் பெற்றது; |
| தந்த ஞானத்தில் | அருளின ஞானத்தினால், | தத்துவம் நூல் | தத்வபரமான சாஸ்திரங்கள் |
| தொல்லை வாதியர்க்கு | நெடுநாளாக இருந்த துர்வாதிகளுக்கு | கூழ் அற்றது | ஸந்தேஹமற நிச்சயமான பொருளைத் தெரிவிப்பவையாயின. |
| வாழ்வு அற்றது | வாழ்ச்சி அற்றுப் போயிற்று; | குற்றம் எல்லாம் பதித்த குணத்தினர்க்கு | பல்வகைக் குற்றங்களும் நிறைந்த ஸ்வபாவத்தையுடைய ஜனங்களுக்கு |
| மறையவர் தம் தாழ்வு | வைதிகர்களுடைய குறை | அ நாழ் அற்றது | அந்தக் குற்றங்கள் தீர்ந்தன. |
| என்றும் அற்றது | இனி ஒருநாளும் இல்லாதபடியாயிற்று. | | |
| தாரணி | பூமண்டலமானது | | |

* * *:—எம்பெருமானார் இவ்வுலகில் அவதரித்து உபதேசாதி முகத்தாலே உண்டாக்கின தத்துவஞானத்தால் பலித்த அம்சங்கள் எவை யென்றால்; துர்வாதிகளுடைய வாழ்வு மாண்டது; வைதிகர்களுக்கு இருந்த ஸங்கடங்கள் அற்றுப்போயின; பூமண்டலம் மஹாபாக்யம் பெற்றது; தத்வ சாஸ்த்ரங்களில் எவ்விதமான ஸந்தேஹமும் உண்டாகாதபடி நிச்சயஞானமே உண்டாயிற்று; பாவிகளின்பாவங்களெல்லாம் தொலைந்துபோயின; ஆகிய இவை எம்பெருமானாரளித்த தத்துவஞானத்தின் பயனாகத் தேறினவை—என்றாராயிற்று.

தொல்லைவாதியர்—வைதிகர்கள் தாம் அநாதியாகவுள்ளவர்; துர்வாதிகளும் அநாதியாகவுண்டோவெனில்; பயிருள்ளபோதே தொடங்கிக் களையுமுண்டாவதுபோல, பாஹ்யர் குத்ருஷ்டிகள் என்கிற வாதிகளும் பழையராகவே யுண்டென்க.

தரணி என்ற வடசொல் தாரணியென நீட்டல் விகாரம்பெற்றது. கூழ்—ஸந்தேஹம். நாழ்—குற்றம். ... ... (கூரு)

ஞானம்கனிந்த நலங்கொண்டு * நாடோறும் நைபவர்க்கு
வானங்கொடுப்பது மாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனங்கடிந்த விராமாநுசன் தன்னையெய்தினர்க்கு அத்
தானங்கொடுப்பது * தன்தகவென்னும் சரண்கொடுத்தே. (கூகூ)

மாதவன் — திருமால்

வானம் கொடுப்பது — மோக்ஷம் அளிப்பது

(எப்படிப்பட்டவர்களுக் கென்றால்)

ஞானம் கனிந்த நலம் கொண்டு நாள்தொறும் நைபவர்க்கு — ஞானம் பக்திரூபமாகப் பரிபக்வமாகி அந்த பக்தியினால் நித்தியம் உருகுகிறவர்களுக்கேயாம்;

வல்வினையேன் மனத்தில் ஈனம் கடிந்த இராமாநுசன் — மஹாபாபியான எனது ஹ்ருதயத்திலிருந்த கல்மஷங்களைப் போக்கடித்த எம்பெருமானார்

தன்னை எய்தினர்க்கு — தம்மைப் பற்றினவர்களுக்கு

அத் தானம் கொடுப்பது — அந்த மோக்ஷஸ்தானத்தை அளிப்பது

(எவ்விதமாக வென்றால்)

தன் தகவு என்னும் சரண் கொடுத்து — தம்முடைய க்ருபையாகிற ஸாதனத்தை (அவர்களுக்குக் கைம்முதலாகக்) கொடுத்து. [தமது திவ்ய க்ருபையாலே.]

* * *:—அடியார்களுக்கு மோக்ஷமளிக்கிற அதிகாரம் எம்பெருமானுக்குமுண்டு, எம்பெருமானார்க்குமுண்டு. எம்பெருமான் அளிப்பது மிகவும் ச்ரமப்படுத்தியே; எம்பெருமானார் அளிப்பது கேவலம் தம்முடைய திருவருளாலே என்கிறார் இதில்.

ஞானமானது நன்றாகக் கனிந்து அது பக்தி, பரபக்தி, பரமபக்தி என்னும்படியான அவஸ்தைகளையடைந்து, அதனால் இந்த ஸம்ஸாரத்தில் க்ஷணகால மிருப்பதும் அஸஹ்யமாய் ஆழ்வார்களைப்போல "ஒரு பகலாயிரமூழியாலோ" என்று துடிப்பவர்களுக்குத்தான் எம்பெருமான் முக்தியளிப்பது; எம்பெருமானாரோ வென்னில் * க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யராகையாலே அடியார்களிடத்தில் எவ்விதமான க்லேசத்தையும் எதிர்பாராமல் தமது திருவருளைக்கொண்டே அவர்களைக்கரையேற்றுவர் என்றதாயிற்று.

இப்பாட்டை விநோதமாக உபந்யஸிக்கலாம்; அதாவது,—மோக்ஷமென்கிற ஒரு சரக்கு எம்பெருமானென்கிற கடையிலும் எம்பெருமானாராகிற கடையிலும் கிடைக்கக்கூடியது. உலகில் கடைகளுக்கு மூன்றுவிதமான அஸௌகரியங்கள் இருக்கக்கூடும். அவையாவன—சரக்கின் விலையை அபாரமாகச் சொல்லுதல் ஒன்று; அந்த விலையில் சிறிது குறைக்கும்படி நாம் கேட்க இட

மில்லாதபடி கருர் விலை என்று கட்டளைப்படுத்துவது ஒன்று; அதிக விலையும் கருர் விலையுமாயிருந்தாலும் இருக்கட்டும்; தற்காலம் கடனுகக் கொடுத்தால் நாலுநாள்பொறுத்து விலை கொடுத்து விடுவோமென்ருல் அதற்கும் இசையாமல் 'இன்றைக்கு ரோக்கம் நாளைக்குக் கடன்' என்பது ஒன்று. ஆக இப்படிப்பட்ட மூவகையான அஸௌகரியங்கள் அமைந்த கடையை ஒப்பன் எம்பெருமான்; ஏனெனில் மோக்ஷமாகிற சரக்குக்கு விலையை அபாரமாக விதித்துவைத்தான்; ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடோறும் நையவேண்டு மென்கையாலே இந்த விலையை எல்லாரும் செலுத்த முடியாதாகையால் விலை அதிகம். இதில் சிறிது குறைத்துக் கொள்வோமென்ருல் இசைகிருனில்லை; நாடோறும் நைபவர்க்கே வானங் கொடுப்பேனென்கிருன்; இப்படிப்பட்ட நிலைமை இவ்விருள் தருமாஞாலத்தில் உண்டாவது அருமை, முன்னடி எங்களை மோக்ஷத்திற்கு அனுப்பிவிடு; அவ்விடத்திற்போய் இந்த விலையைச் செலுத்திவிடுகிறோமென்று கடன் வேண்டினுல், 'இந்தக் கடையில் கடன்கட்டில்லை; இங்கேயிருந்து ஞானங் கனிந்த நலங்கொண்டு நாடோறும் நைபவர்களைத்தான் மோக்ஷத்துக்கு அனுப்புவேன்' என்கிருன். ஆகையாலே மூன்று வகை அஸௌகரியங்கள் நிறைந்த கடையாம் எபெருமான். எம்பெருமானுராகிற கடையில் எவ்வகையான அஸௌகரியமுமில்லை; மோக்ஷமென்னும் சரக்குக்கு அவர் விலை விதிப்பதேயில்லையாகையால், அதிக விலை யென்றுவது கருர்விலை யென்றுவது கைவிலை யென்றுவது சொல்லக்கூடிய கஷ்டங்களுக்கு ப்ரஸக்தியே இல்லை; ஆகையாலே, மோக்ஷம் விரும்புகின்றவர்களே! நீங்கள் எம்பெருமானைப்பணிந்து வருந்தாமல் எம்பெருமானுரைப் பணிந்து ஸுகப்படுங்கள்—என்று இப்பாட்டால் உபதேசித்தாராயிற்று.

வல்வினையேன் மனத்திலீனங்கடிந்த என்பதற்கு—மாதவனை அடிபணிந்து வருந்துகையாகிற ஈனத்தை எனக்குத் தவிர்த்த எம்பெருமானுர் என்று உரைக்கவுமாம். .... ... (௬௬)

சரணமடைந்த தருமனுக்கா * பண்டுநூற்றுவரை
மரணமடைவித்தமாயவன் * தன்னை வணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென் றிராமாநுச னுயிர்கட்கு
அரணங்கமைத்திலனேல்*அரணுர்மற்றிவ் வாருயிர்க்கே. (௬௭)

| | |
|---|---|
| சரணம் அடைந்த தருமனுக்கு ஆ | தன்னைச் சரணம் பற்றின தர்ம புத்ரருக்காக |
| பண்டு | முற்காலத்திலே |
| நூற்றுவரை | துரியோதனன் முதலிய நூறுபேர்களை |
| மரணம் அடைவித்த மாயவன் | சாகும்படிசெய்த எம்பெருமான் |
| தன்னை வணங்க வைத்த கரணம் இவை | தன்னை வழிபடுவ தற்காகவே ஏற் படுத்திவைத்த இந்திரியங்களாம் இவை ; |
| உமக்கு அன்று | உங்களுக்கு உரிமைப் பட்டவையல்ல ; |
| என்று | இவ்வாறாக உபதேசித்து |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| உயிர்கட்கு | ஆத்மாக்களுக்கு |
| அரண் அமைத்திலன் எல் | ரக்ஷையைக் கற்பித்திலராகில் |
| இ ஆர் உயிர்க்கு | இந்த அருமையான ஆத்மாக்களுக்கு |
| மற்று அரண் ஆர் | வேறு ரக்ஷகராவார் ஆர்? (ஆருமில்லை.) |

* * *—தன்னைச் சரணமடைந்த தர்மபுத்திரர்க்காகப் படாப் பாடுகள்பட்டு துரியோதநாதிகளான நூற்றுவரைப் பாரதப் போரில் முடித்தருளின எம்பெருமான் செவி வாய் கண் மூக்கு முதலிய இந்திரியங்களையும் அவற்றுக்கு இருப்பிடமான உடலை யும் உங்களுக்குத் தந்தருளினது, தன்னைவழிபட்டு உஜ்ஜீவிப்பதற் காகவேயன்றி உங்கள் மனம்போனபடி விஷயாந்தரங்களை அநுப விப்பதற்காகவல்ல என்கிற இவ்வர்த்தத்தை எம்பெருமானார் திரு வவதரித்து எல்லார்க்கும் உபதேசிக்கவே நாமெல்லாம் உஜ்ஜீவிக்க லாயிற்று ; அவர் இப்படி உபதேசித்திராவிட்டால் நமக்கு என்ன கதி ! வேறுயார் நம்மைத் திருத்தவல்லவர் ?—என்றாராயிற்று.

தருமனுக்கா என்று தர்மபுத்திரரைமாத்திரஞ் சொன்னது பஞ்சபாண்டவர்கட்கும் பாஞ்சாலிக்கும் உபலக்ஷண மென்க. தன்னை வணங்கவைத்த கரணமிவை என்றவிடத்து "ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் முராரிபும்" என்ற முகுந்தமாலை ச்லோகத்தை யோஜித்துக் கொள்வது. பெரியதிருமொழியில் நீணாகஞ்சுற்றி என் கிற திருமொழியையும் கூட்டிக்கொள்வது. கரணம்—வடசொல்; இந்திரியம். .... .... ... .... .... (கூஎ)

ஆரெனக்கின்று நிகர்சொல்லில் * மாயனன்றைவர்தெய்வத்
தேரினில்செப்பிய கீதையின்செம்மை * பொருள்தெரியப்
பாரினில்சொன்ன இராமாநுசனைப் பணியும்நல்லோர்
சீரினில்சென்றுபணிந்தது * என்னாவியும் சிந்தையுமே. (௯௪)

| | | | |
|---|---|---|---|
| மாயன் | ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடைய எம்பெருமான் | பாரினில் | இப்பூமியிலே |
| அன்று | முற்காலத்தில் | சொன்ன | (கீதா பாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த |
| ஐவர் | பஞ்சபாண்டவர்களுடைய | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| தெய்வம் தேரினில் | தெய்வத்தன்மை பொருந்திய தேரின்மீது (இருந்துகொண்டு) | பணியும் | ஆச்ரயித்திருக்கிற |
| செப்பிய | அருளிச்செய்த | நல்லோர் | விலக்ஷண புருஷர்களுடைய |
| கீதையின் | பகவத்கீதையினுடைய | சீரினில் | கல்யாண குணங்களிலே |
| செம்மை பொருள் | ஸ்வாரஸமான அர்த்தத்தை | என் ஆவியும் சிந்தையும் | எனது ஆத்மாவும் மநஸ்ஸும் |
| தெரிய | (அனைவரும் எளிதாகத்) தெரிந்துகொள்ளும்படி | சென்று பணிந்தது | சென்று சேர்ந்துவிட்டன; |
| | | சொல்லில் | சொல்லுமளவில் |
| | | இன்று | இக்காலத்தில் |
| | | எனக்கு ஆர் நிகர் | எனக்கு ஆர் ஒப்பாவார்?. |

* * *—எம்பெருமான் அன்றொருகால் பார்த்தஸாரதியாயிருந்துகொண்டு அவனுக்கு உபதேசித்த கீதையின் பொருளை ஸ்பஷ்டமாக அனைவரும் தெரிந்துகொள்ளும்படி ஸ்ரீ கீதாபாஷ்யமருளிச்செய்த எம்பெருமானாரை யாவர் ஆச்ரயித்திருக்கிறார்களோ, அந்த மஹான்களுடைய திருக்குணங்களிலேயே என்னுடைய ஸகல இந்திரியங்களும் அவகாஹித்துவிட்டன; எம்பெருமானைப் பணிவதற்கே இசையாத இவ்வுலகில் தத்தாஸதாஸர்களைப் பணியும்படியான பரிபாகம்பெற்ற எனக்காரும் நிகரில்லை என்றாராயிற்று.

மாயன்=ஸர்வேச்வரனை தான் அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாய்த் தாழநின்ற ஆச்சரியன். தெய்வத்தேர்=அர்ஜுநனு

டைய தேர் பெரியதிருவடியின் அம்சமாதல் அறிக. செம்மைப் பொருள்=ருஜுவான அர்த்தம். ... .... ... (சுஅ)

சிந்தையினோடு கரணங்கள்யாவும் சிதைந்து * முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு * அவையென்றனக் கன்றருளால்
தந்தவரங்கனும் தன்சரண்தந்திலன் தானதுதந்து *
எந்தையிராமாநுசன் வந்தெடுத்தனனின்றென்னையே. (சுகூ)

| | |
|---|---|
| முன் நாள் | ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் |
| சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து | சிந்தையும் இந்திரியங்களுமெல்லாம் அழிந்து |
| அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு | உபஸம்ஹாரத்தையடைந்து அசேதநப்ராயமாயிருப்பதைப் பார்த்து |
| என் தனக்கு | (அப்படி அசேதந ப்ராயராய்க் கிடந்தவர்களில் ஒருவனான) எனக்கு |
| அவை | அந்த கரண களேபரங்களை |
| அன்று | அக்காலத்தில் |
| அருளால் தந்த அரங்கனும் | க்ருபையாலே உண்டாக்கின எம்பெருமானும் |
| தன் சரண் தந்திலன் | தனது திருவடிகளைக் காட்டிக் கொடுத்து உஜ்ஜீவிப்பிக்கவில்லை. |
| | (அக்குறை நீங்க) |
| எந்தை இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| தான் வந்து | தாமாகவே வந்து |
| அது தந்து | அந்தத் திருவடிகளைத் தந்தருளி |
| இன்று என்னை எடுத்தனன் | இன்று என்னை ஸம்ஸாரத்தில் நின்றும் உத்தரிப்பித்தார். |

* * *—பிரளயகாலத்தில் ஸகல ஆத்துமாக்களும் இறகொடிந்த பக்ஷிபோலே கரணகளேபரங்களை இழந்து வருந்தும் நிலைமையிலே எம்பெருமான் பரமகாருணிகனாகிக் கரணகளேபரங்களைக் கொடுத்தருள்கின்றான் என்கிற நூற்கொள்கையின்படி—அடியேனும் கரணகளேபரசூந்யனாய் வருந்திக்கிடந்த காலத்துத் திருவுள்ளமிரங்கி அவற்றைக்கொடுத்து உதவின எம்பெருமான் இவ்வுலகில் என்னை ஒரு மநுஷ்யனாக ஸ்ருஷ்டித்து விட்டானேயொழியத் தனது திருவடிகளை எனக்குக் காட்டிக் கொடுத்து உஜ்

ஜீவிக்கச் செய்யவில்லை; அக்குறைதீர எம்பெருமானார் என்னை உஜ்ஜீவிப்பித்தார் என்கிறார்.

அந்தம்—வடசொல்; நாசம். .... .... .... (௬௬)

என்னையும் பார்த்தென்னியல்வையும்பார்த்து*எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள்செய்வதேநலம் * அன்றியென்பால்
பின்னையும்பார்க்கில் நலமுளதேயுன் பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர் * இராமாநுசா உன்னைச் சார்ந்தவரே. (௭௦)

இராமாநுசா — எம்பெருமானாரே!

என்னையும் பார்த்து — (ஒரு குணமுமில்லாமல் குற்றமே நிறைந்திருக்கிற) என்னையும் நோக்கி

என் இயல்வையும் பார்த்து — (இனிமேலும் எவ்விதநன்மையும் ஸம்பாதித்துக் கொள்ள முடியாமலிருக்கிற) என்னுடைய தன்மையையும் நோக்கி

எண் இல் பல் குணத்த உன்னையும் பார்க்கில் — எண்ணிறந்த பல திருக்குணங்களையுடைய தேவரீரையும் நோக்குமளவில்

அருள் செய்வதே நலம் — (இப்போது போல எப்போதும்) அருள் செய்திருப்பதே நல்லது;

அன்றி — இதுவொழிய

பின்னையும் பார்க்கில் — மேலும் ஆராயுமளவில்

என்பால் நலம் உளதே — என்னிடத்தில் ஏதாவது நன்மையுண்டோ? (சிறிதும் இல்லை)

(நன்மையொன்றுமில்லாவிடில் நாம் அருள் செய்யலாகாதென்று திருவுள்ளம் பற்றினால்)

உன்னை சார்ந்தவர் — தேவரீரை ஆச்ரயித்தவர்கள்

உன் பெரு கருணை தன்னை என் பார்ப்பர் — தேவரீருடைய கிருபையைப் பற்றி என்ன நினைப்பார்கள்? (இளப்பமாக நினையார்களோ.)

* * *—ஸ்வாமிந்!, அடியேனுடைய நிலைமை எப்படிப்பட்டதென்றால், ஸம்ஸாரஸம்பந்திகளான விஷயாந்தரங்களையே நச்சி உழல்பவன் நான்; தேவரீருடைய நிலைமை எப்படிப்பட்டதென்றால் அடியவர்களுடைய குற்றங்களையும் நற்றமாகக் கொண்டு அங்கீகரிப்பவர் தேவரீர். ஆகவிப்படி இருவருடைய நிலைமையையும்

நோக்குமளவில், தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபைக்கு அடியேனைப் பாத்திரமாக்குவதே தகுதி. இப்போது என்மீது நிர்ஹேதுக க்ருபைபண்ணி அங்கீகரித்திருப்பது போலவே இனிமேலும் ஒருநாளும் கைவிடாமல் காத்தருளவேணும். 'உன்னைநான் கைப்பற்றியிருப்பதற்கு உன்னிடத்தில் என்னநன்மை இருக்கிறது ?' என்று தேவரீர் விமர்சிக்கக் கூடாது ; என்னிடத்தில் ஒரு நன்மையும் கிடையாது. அப்படி நன்மையைக்கண்டே ரக்ஷிக்க வேணுமென்று நிர்ப்பந்தம் வைத்துக்கொண்டால் தேவரீருடைய திருக்குணங்களுக்கு உபயோகமேயில்லாமற் போய்விடும். "இவ்வளவுதானா எம்பெருமானுடைய குணங்கள்" என்று தேவரீருடைய அடியவர்கள் குறைவாகநினைக்க நேர்ந்துவிடும். ஆகையாலே என்பக்கல் எவ்விதமான நன்மையையும் எதிர்பாராமல் தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபையையே பற்றாசாகக் கொண்டு இதுவரையிலும்போல் என்றைக்கும் காத்தருளவேணுமென்றாராயிற்று. ... (எ௦)

சார்ந்ததென்சிந்தை யுன்தாளிணைக்கீழ் * அன்புதான்மிகவும்
கூர்ந்தததத் தாமரைத்தாள்களுக்கு * உன்தன் குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினைநீ செய்வினையதனால்
பேர்ந்தது * வண்மை யிராமாநுசா ! எம்பெருந்தகையே. (எக)

| | |
|---|---|
| வண்மை | ஔதார்யமுடையரும் |
| எம் | எமக்கு ஸ்வாமியும் |
| பெரு தகை | பெருந்தன்மையுடையருமான |
| இராமாநுசா | எம்பெருமானாரே ! |
| என் சிந்தை | எனது நெஞ்சு |
| உன் தாள் இணை கீழ் சார்ந்தது | தேவரீருடைய உபய பாதங்களின் கீழ் அமர்ந்துவிட்டது ; |
| அன்புதான் | பக்தியும் |
| அத் தாமரை தாள்களுக்கு | அந்தத் திருவடித் தாமரைகள் விஷயத்திலேயே |
| மிகவும் கூர்ந்தது | மிகவும் அதிகரித்தது. |
| என் செய்கை | எனது செயலும் |
| உன் தன் குணங் களுக்கே தீர்ந்தது | தேவரீருடைய திருக் குணங் களுக்கே அற்றுத் தீர்ந்தது ; |
| முன் செய் வினை | முன்னேசெய்த பாவங்களெல்லாம் |
| நீ செய் வினை அதனால் பேர்ந்தது | தேவரீர் செய்தருளின (கடாக்ஷமாகிற) காரியத்தாலே தொலைந்து போயின. |

* * *—கீழ்ப்பாட்டில் இவர்தாம் ப்ரார்த்தித்ததற்கு எம்பெருமானார் இசைந்தாற்போ லிருக்கக்கண்டு, ஸந்தோஷாதிசயத்தாலே தாம்பெற்ற பேறுகளைப் பேசுகிறார் இதில்.—ஸ்வாமிந்! என்னுடைய ஜ்ஞாநபக்திகள் தேவரீர் திருவடிகளில் ஊன்றி நின்றன; என்னுடைய கரணங்கள் தேவரீருடைய திருக்குணங்களில் ஈடுபட்டுக் கைங்கரியம் பண்ணத்தொடங்கின. தேவரீருடைய கடாக்ஷமாத்ரத்தாலே என்னுடைய பூர்வஸஞ்சித பாபங்களெல்லாம் பறந்துபோயின. இத்தனையும் தேவரீருடைய திருவருளின் பலன் என்றாராயிற்று. ... ... ... ... .... (எக)

கைத்தனன்தீய சமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன் தூய மறைநெறிதன்னை * என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போ டிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை * இராமாநுசன்மிக்கவண்மைசெய்தே. (எஉ)

இராமாநுசன் — எம்பெருமானார்
மிக்க வண்மை செய்து — தமது ஔதார்ய குணத்தை அதிகமாகக் காட்டி,
தீய சமயம் கலகரை — துஷ்ட மதங்களிலிருந்துகொண்டு கலஹஞ் செய்கிறவர்களை
கைத்தனன் — ஒழித்துவிட்டார்;
தூய — பரிசுத்தமான
மறை நெறி தன்னை — வேதமார்க்கத்தை
காசினிக்கு உய்த்தனன் — பூமியிலே ஸ்தாபித்தருளினார்;
என்று உன்னி — என்று அநுஸந்தித்து
உள்ளம் நெய்த்து — நெஞ்சு கனிந்து
அவ்வன்போடு இருந்து — அந்த ப்ரீதியோடே கூடியிருந்து
ஏத்தும் — (அவரை) ஸ்தோத்ரம் பண்ணுகிற
நிறை புகழோருடனே — புகழ் நிறைந்த மஹான்களோடே
என்னை வைத்தனன் — (என்னையும் ஒருவனாக எண்ணும்படி) என்னை வைத்தருளினார்.

* * *—கீழ்ப்பாட்டில், தாம் பெற்ற சிலபேறுகளைப் பேசினார்; அவற்றுள் முக்கியமான ஒரு பேற்றைத் தனிப்படப் பேசுகிறார் இதில்.

“ஸ்வாமி, துஷ்டமதஸ்தர்களை யெல்லாம் தொலைத்து வேத மார்க்கத்தைப் பிரதிஷ்டாபநஞ் செய்தருளினார்” என்று இந்த வைபவத்திலே யீடுபட்டு நெஞ்சு கனிந்திருக்கின்ற மஹான்களோடே என்னையும் ஒருவனாக எண்ணலாம்படி ஒரு பொருளாக்கி வைத்தார் எம்பெருமானார்; இப்படியும் ஒரு ஔதார்ய முண்டோ? என்று உருகுகின்றார்.

நிறைபுகழோருடனே வைத்தனன்—அஸத்துக்களோடே பழகிக்கிடந்த என்னை ஸத்துக்களோடே கூட்டிவைத்தார் என்னவுமாம். .... ... .... ... ... (எஉ)

வண்மையினாலும் தன்மாதகவாலும் * மதிபுரையும்
தண்மையினாலு மித்தாரணியோர்கட்கு * தான்சரணாய்
உண்மைநன்ஞான முரைத்தவிராமா நுசனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை * மற்றோர்நிலை தேர்ந்திடிலே.

| | |
|---|---|
| தன் வண்மையினாலும் | தம்முடைய ஔதார்ய குணத்தாலும் |
| மா தகவாலும் | பரமக்ருபையாலும் |
| மதி புரையும் தண்மையினாலும் | சந்திரனையொத்த திருவுள்ளக் குளிர்ச்சியாலும் |
| இ தாரணியோர்கட்கு | இப் பூமியிலுள்ளவர்களுக்கு |
| தான் சரண் ஆய் | தாமே ரக்ஷகராய்க் கொண்டு |
| உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை | யதார்த்தமாய் விலக்ஷணமான ஞானத்தை உபதேசிக்கிற எம்பெருமானாரை |
| உன்னும் திண்மை அல்லால் | சிந்திப்பதாகிற அத்யவஸாயமொன்று தவிர |
| தேர்ந்திடில் | ஆராயுமளவில் |
| எனக்கு மற்று ஓர் நிலை இல்லை | அடியேனுக்கு வேறொரு அத்யவஸாயமில்லை. |

* * *:—தம்முடைய அத்யவஸாயத்தின் உறைப்பை உரைக்கிறார் இதில். எம்பெருமானாரை இடைவிடாது சிந்திப்பதே நன்று என்று கொண்டிருக்கையாகிற அத்யவஸாயந் தவிர வேறு எந்த அத்யவஸாயமும் எனக்கில்லை யென்கிறார். மற்றபேர்களைவிட்டு எம்பெருமானாரையே சிந்திப்பதற்கு யாது காரணமென்னில்;—பொருளின் சீர்மைபாராமல் உபதேசிப்பதற்கு உறுப்பான ஔதார்ய குணத்தாலும், பிறருடைய துர்க்கதியைக்கண்டு பொறுக்கமாட்

டாத பரம க்ருபையாலும், குளிர்ந்த திருவுள்ள முடைமையாலும் ஒருவருடைய அபேக்ஷையில்லாமல் தாமாகவே ரக்ஷகராகி யதார்த்தமான விலக்ஷண ஞானத்தை உபதேசிப்பவர் அவ்வெம் பெருமானொருவரேயன்றோ; ஆகையால் அவர் தம்மையே சிந் திப்ப தென்கிற உறுதி எனக்கு உண்டாயிற்று. .... (எக)

தேரார்மறையின் திறமென்று * மாயவன் தீயவரைக்
கூராழிகொண்டு குறைப்பது * கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம் மிராமாநுசனவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது * அப்போதொரு சிந்தைசெய்தே.

| | |
|---|---|
| மறையின் திறம் தேரார் என்று | (இப்பாவிகள்) வேதஞ் சொல்லுகிற வழியை நிரூபித்தறிகிற தில்லை யென்று |
| தீயவரை | பாவிகளை |
| மாயவன் | எம்பெருமான் |
| குறைப்பது | தண்டிப்பது |
| கூர் ஆழி கொண்டு | கூர்மையான தனது திருவாழியாலே; |
| கொண்டல் அனைய வண்மை | மேகம்போன்ற ஒளதார்யகுண முடையவரும் |
| ஏர் ஆர் குணத்து | (மற்றும் பல) நல்லகுணங்க ளுடையவரு மான |
| எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| அ எழில் மறையில் சேராதவரை சிதைப்பது | அந்த சிறந்த வேதத்தில் அந்வயியாதவர் களை பங்கப் படுத்துவது (எப்படி யென்றால்) |
| அப்போது ஒரு சிந்தை செய்து | அப்போ தப்போது ஒவ்வொரு யுக்தியைக் கொண்டாம். |

* * *:—எம்பெருமான் தனது ஆஜ்ஞாரூபமான வேதங் களின் கட்டளைப்படி நடவாத கொடியவர்களைத் தனது திருவாழி யைக் கொண்டு த்வம்ஸம்பண்ணிவிடுவன்; எம்பெருமானாரோவென் னில் அவ்வளவு ஆயாஸம் எடுத்துக்கொள்வதில்லை; வேதங்களை அடியோடு ஒப்புக்கொள்ளாத பாஹ்யர்களையும், வேதங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு அவற்றில் அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளையும் வாதப்போரில் அப்போதப்போது திருவுள்ளத்தில் ஸ்புரிக்கின்ற நல்லயுக்திகளைக்கொண்டு கண்டித்து விடுவர்.

இதனால், துஷ்டர்களை நிரஸிக்கும்வகையில் எம்பெருமானாருடைய சாதுரியம் ஒப்பற்றதென்று சொல்லிற்றாயிற்று. (எச)

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் * திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி * நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னை விடேனென்றிருக்கிலும் நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து * இராமாநுசாவென்னை முற்றுநின்றே.

| | |
|---|---|
| செய் தலை | வயல்களில் |
| சங்கம் | சங்குகளானவை |
| செழு முத்தம் | அழகிய முத்துக்களை |
| ஈனும் திரு அரங்கர் | உண்டாக்குமிடமான திருவரங்கமாநகரில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் |
| கை தலத்து | தமது திருக்கையிலே |
| ஆழியும் சங்கமும் ஏந்தி | திருவாழி திருச்சங்குகளைத் தரித்துக் கொண்டு |
| நம் கண் முகப்பே | நமது கண்ணெதிரில் |
| மொய்த்து | வந்து நெருங்கி |
| அலைத்து | புத்தியைக் கெடுத்து |
| உன்னை விடேன் என்று இருக்கிலும் | ‘உன்னை விடமாட்டேன்’ என்று இருந்தாலும், |
| இராமாநுசா | எம்பெருமானாரே! |
| நின் புகழே | தேவரீருடைய திவ்ய குணங்களே |
| என்னை வந்து முற்றும் மொய்த்து நின்று | என் பக்கல் வந்து சூழ்ந்துகொண்டு |
| அலைக்கும் | ஆகர்ஷிக்கின்றன. |

* * *:—எம்பெருமான் தனது விலக்ஷணமான அழகைக் காட்டிக் கொண்டு வந்து என் கண்ணெதிரே நின்றாலும், என்னை விடாதே வலியப்பற்றினாலும் அவனது அழகில் நான் மோஹிக்கப் பெறுவதில்லை; தேவரீருடைய திருக்குணங்களே என்னை ஈடுபடுத்துகின்றன; பகவத் குணங்களுக்கு நான் ஈடுபடுவதில்லை யென்கிறார்.

“செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும்” என்கிற விசேஷணம்—திருவரங்கர் என்பதன் பகுதியாகிய திருவரங்கத்தில் அந்வயிக்கும். திருவரங்கம் எப்படிப்பட்டதென்றால், முத்துக்களை யுதிர்க்கும் சங்குகள் நிறைந்த வயல்சூழ்ந்தது என்றவாறு. ஈனுதல்—பிரஸவித்தல்.

எம்பெருமானாரிடத்தில் * தேவுமற்றறியாத பத்திப்பெருங் காதல் தமக்கு உள்ளமை இப்பாட்டில் சொல்லப்பட்டதென்க.

நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும் * நிறைவேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்தநாடும் குலவிய பாற்கடலும் *
உன்றனக் கெத்தனை யின்பந்தரு முன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது * இராமாநுசா இவை யீந்தருளே. (எசு)

இராமாநுசா — எம்பெருமானாரே!,
நின்ற வண் கீர்த்தியும் நீள் புனலும் நிறை — நிலைநின்ற பெரும் புகழும் அதிகமான நீர்ப்பெருக்கும் நிறைந்துள்ள
வேங்கடம் பொன் குன்றமும் — திருவேங்கட மென்னும் அழகிய திருமலையும்
வைகுந்தம் நாடும் — ஸ்ரீவைகுண்டமாகிய திருநாடும்
குலவிய பால் கடலும் — கொண்டாடத்தக்க திருப்பாற்கடலும்
உன் தனக்கு — தேவரீருக்கு
எத்தனை இன்பம் தரும் — எவ்வளவு ஆநந்தத்தை விளைக்குமோ
உன் இணை மலர் தாள் — தேவரீருடைய உபய பாதாரவிந்தங்கள்
என் தனக்கும் அது — எனக்கும் அவ்வளவு ஆநந்தத்தை யுண்டாக்கும்;
இவை — இப்படிப்பட்ட திருவடிகளை
ஈந்தருள் — அடியேனுக்குத் தந்தருளவேணும்.

* * *—கீழ்ப்பாட்டில் அமுதனார் விளக்கிய பரமபக்தியை அறிந்த எம்பெருமானார் மிகவும் உகந்தருளி 'இவர்க்கு நாம் எதைச் செய்வோம்' என்றிருப்பதாகக் கண்ட அமுதனார், ஸ்வாமிந்! அடியேனுக்கு தேவரீர் வேறொன்றும் செய்தருளவேண்டா; அடியேனுக்கு ஸர்வஸ்வமாகிய இந்தத் திருவடித்தாமரைகளைத் தந்தருளவேண்டுமத்தனை யென்கிறார்.

"நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும்நிறை" என்னுமளவும் திருவேங்கடத்துக்கு விசேஷணம். பாவங்களைப் போக்கவல்லதென்று நிலைநின்ற புகழ்பெற்றதும் * தெழிகுரலருவிகளை யுடையதுமான திருமலையென்ன, பரமபதமென்ன, திருப்பாற்கடலென்ன, ஆகிய இந்த ஸ்தலங்களெல்லாம் ஸ்வாமிந்! தேவரீருக்கு எப்படிப்பட்ட ஆநந்தத்தை விளைக்குமோ அப்படிப்பட்ட ஆநந்தத்தை அடியேனுக்கு தேவரீருடைய திருவடிகள் விளைக்கும்.

“ தெழிகுரலருவித் திருவேங்கடத்து எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கு—ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்” என்று நம்மாழ்வார் பாரித்தாற்போலத் திருமலையப்பனுக்குக் கைங்கரியம் பண்ணவேணுமென்று அடியேன் விரும்பவில்லை; நம்மாழ்வாருகந்த விஷயமென்று தேவரீர் உகந்திருக்கலாம். “ மாகவைகுந்தங் காண்பதற்கு என் மனமேகமெண்ணு மிராப்பகலின்றியே” என்று ஆழ்வார் விரும்பின திருநாட்டிலும் அடியேனுக்கு விருப்பமில்லை. அதையும் ஆழ்வாருகந்த திருநாடென்று தேவரீர் உகந்திருக்கலாம். “பொங்கிய பாற்கடல் பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால், என்கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்து ஆவியை ஆகுலஞ்செய்யு மங்குயிலே!” என்று ஆண்டாள் விரும்பினாற்போலத் திருப்பாற்கடல் நாதனோடு அணையவேணுமென்கிற விருப்பமும் அடியேனுக்கில்லை; அதனையும் நம் தங்கை உகந்த விஷயமென்று தேவரீர்உகந்திருக்கலாம்; உண்மையில் அடியேன் உகந்த விஷயம் எது வென்றால் “ எம்பெருமானார் திருவடிகளே சரணம் ” என்பதொன்றேயாம். ஆனபின்பு அடியேனுக்கு இத்திருவடிகளையே சேமவைப்பாகத் தந்தருளவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று. .... .... .... .... .... (எசு)

ஈந்தனனீயாதவின்னருள் * எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளால் * இப்படியனைத்தும்
ஏய்ந்தனன் கீர்த்தியினா லென்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன் * வண்மை யிராமாநுசற்கென் கருத்தினியே?.

| | | | |
|---|---|---|---|
| ஈயாத | (இதற்கு முன்பு ஒருவர்க்கும்) அருளாத | அ மறை பல் பொருளால் பாய்ந்தனன் | அந்த வேதங்களின் அர்த்தங்களையே கொண்டு கண்டித்தவரும், |
| இன் அருள் | விலக்ஷணமான க்ருபையை | கீர்த்தியினால் | தமது கீர்த்தியாலே |
| ஈந்தனன் | அடியேனுக்குச் செய்தருளினவரும், | இ படி அனைத்தும் ஏய்ந்தனன் | இப்பூமியெங்கும் வியாபித்தவரும் |
| எண் இல் மறை குறும்பை | எண்ணிறந்த வேத விரோதிமதங்களை | என் வினைகளை | எனது கருமங்களை |

| | | | |
|---|---|---|---|
| வேர் பறிய காய்ந்தனன் | வேரோடே அறும்படி போக்கின வரும் | இராமாநுசற்கு | எம்பெருமானார்க்கு |
| வண்மை | ஔதார்யமே வடிவுகொண்ட வருமான | இனி என் கருத்து | இன்னமும் (செய்யத் தக்கதாகத்) திருவுள்ளத்தில் ஏதேனு முண்டோ?. |

* * *—கீழ்ப்பாட்டில் தாம் அபேக்ஷித்தபடியே திருவருளைத் தந்தருளப்பெற்று, க்ருதக்ருத்யராய், அவர் செய்தருளின உபகாரங்களை அநுஸந்தித்து, இவையெல்லாம் செய்தபின்பு இன்னமும் செய்தருள்வதாகத் திருவுள்ளம்பற்றியிருப்பது எதுவோ? என்கிறார்.

எம்பெருமானார் என்னுடைய பாவங்களையெல்லாம் வேரோடே பறித்தெறிந்து தம்முடைய பரமக்ருபைக்கு என்னைப் பாத்திரமாக்கி யருளினார். இவ்வகையாலே எனக்குமாத்திரம் உபகாரம் செய்தாரல்லர்; வேதங்களுக்குப் புறமதத்தவர்கள் சொல்லும் அபார்த்தங்களை உண்மைப் பொருள்களாலே கண்டித்து எல்லாரையும் உஜ்ஜீவிப்பித்தாரென்கிற புகழ் உலகமெங்கும் பரவப்பெற்றார். ஆனபின்பு இனிமேல் அவர் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. இல்லையாயினும் அவர் திருவுள்ளத்தை நோக்குமிடத்து, மேன்மேலும் ஏதோ நன்மைகளைச்செய்து போரப் பாரித்திருப்பதாகவே காண்கிறது; இன்னும் என்னசெய்யப்போகிறாரோ தெரியவில்லையென்கிறார்.

மறைக்குறும்பாவது—வேதத்திற்கு மாறாகச்சொல்லும் தப்புப் பொருள்கள். ஈந்தனன், பாய்ந்தனன், ஏய்ந்தனன், காய்ந்தனன் என்பவற்றை வினைமுற்றாகவே கொண்டு உரைத்தலுமாம். (எஎ)

கருத்தில்புகுந்துள்ளில்கள்ளங்கழற்றி * கருதரிய
வருத்தத்தினால் மிகவஞ்சித்து * நீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கியபின் என்னெஞ்சில்
பொருத்தப்படாது * எம்மிராமாநுச! மற்றோர் பொய்ப்பொருளே.

| | | | |
|---|---|---|---|
| எம் இராமாநுச | எம்பெருமானாரே!, | கருத அரிய வருத்தத்தினால் மிக வஞ்சித்து | நெஞ்சால் நினைக்க முடியாத பரிச்ரமங்கள் பட்டு என்னை நன்றாக ஏமாத்தி |
| நீ | தேவரீர் | | |

| | | | |
|---|---|---|---|
| கருத்தில் புகுந்து | (எனது) நெஞ்சிலே வந்து புகுந்து | திரு மகள் கேள்வனுக்கு ஆக்கிய பின் | திருமாலுக்கு ஆளாம் படி பண்ணினபின்பு |
| உள்ளில் கள்ளம் கழற்றி | உள்ளேயிருந்த ஆத்மாபஹார தோஷத்தைப் போக்கி | மற்று ஓர் பொய் பொருள் | (இதற்கு மாறான) வேறு எந்த தப்புவிஷயமும் |
| திருத்தி | சிக்ஷித்து | என் நெஞ்சில் | என் மனத்தில் |
| இந்த மண் அகத்தே | இந்த லோகத்திலே | பொருத்தப் படாது | பொருந்த மாட்டாது. |

* * *—எம்பெருமானார் தம்மைத் திருத்துகைக்காகப் பட்ட பாடுகளை எடுத்துச்சொல்லி, இப்படி என்னைத் திருத்தி தேவரீருக்கு உத்தேச்யமான விஷயத்திலே ஆட்படுத்தினபின்பு இனி வேறு எந்த விஷயமும் என்னெஞ்சுக்கு இசையமாட்டாதென்கிறார்.

ஸ்வாமிந்!, 'நாம் தூரஇருந்தால் இவனைத் திருத்தமுடியாது' என்றும், 'இவனுக்குத் தெரியும்படியாக அருகிலிருந்தால் இவன் விலக்குவான்' என்றும் கருதி எனக்குத்தெரியாமல் என்மனத்துள் புகுந்து மறைந்துநின்று அஹங்காரம் மமகாரம் முதலிய மனக் குற்றங்களை யடங்கலும் அகற்றி இவ்வகையாலே மெதுவாகத் திருத்தி, தேவரீருக்கு உகப்பான பகவத்விஷயத்திலே ஆட்படுத்தியருளிற்று. இப்படி திருந்தின நான் இனி ஸ்வரூபவிருத்தங்களான விஷயங்களை நெஞ்சிலும் நினையேன் என்றாராயிற்று. (எஅ)

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து * இந்தப் பூதலத்தே
மெய்யைப்புரக்குமிராமாநுசன்நிற்க * வேறுநம்மை
உய்யக்கொள்ள வல்லதெய்வமிங்கியாதென் றுலர்ந்துஅவமே
ஐயப்படா நிற்பர் * வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே. (எகூ)

| | | | |
|---|---|---|---|
| இந்த பூதலத்தே | இப்பூமியிலே | பொய்யை சுரக்கும் பொருளை துரந்து | பொய்யான விஷயத்தையே மேன்மேலும் வெளிப்படுத்துகிற (புறமதத்தவர்களின்) அர்த்தங்களைக் கண்டித்து |

மெய்மை புரக்கும் — ஸத்யத்தை ரக்ஷிக்கிற
இராமாநுசன் — எம்பெருமானார்
நிற்க — எழுந்தருளியிருக்கும்போது
(இவரைக் கணிசியாமல்)
வையத்து உள்ளோர் — இப்பூமியிலுள்ளவர்கள்
நம்மை உய்யக் கொள்ள வல்ல — 'நம்மை உஜ்ஜீவிக்கச் செய்யக்கூடிய
வேறு தெய்வம் இங்கு யாது என்று — வேறு ஏதாவது தேவதை இவ்வுலகில் உண்டோ?' என்று (விசாரித்துக் கொண்டு)
உலர்ந்து — மன வருத்தத்தாலே உடம்பு உலர்ந்து
நல் அறிவு இழந்து — (எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றிருக்கை யாகிற) நல்ல ஞானம்பெறுமல்
அவமே — வீணாக
ஐயம் படா நிற்பர் — ஸம்சயப்படா நின்றார்கள். ஐயோ!.

* * *—உலகத்தில் மனிசர் பலவகைப்படுவர்: சாஸ்த்ரமில்லை, தெய்வமில்லை, பரலோகமில்லை என்று நாஸ்திகராய்த் திரிவார்பலர்; எல்லாம் உண்டு; புண்யபாபங்களுக்கு நாம் கட்டுப்பட்டு நடக்க வேணும்; நல்ல வழியில் நின்று உஜ்ஜீவிக்கும் வகை தேடவேணும் என்று கொண்டு ஆஸ்திகராயிருப்பார் சிலர்; முதற் சொன்ன நாஸ்திகர்களைப்பற்றி நமக்குக் கவலையில்லை. ஆஸ்திகராயிருப்பவர்கள் எப்படியாவது உஜ்ஜீவித்துப் போகவேணுமென்கிற ருசியுடையரா யிருந்துவைத்து எம்பெருமானாருடைய திவ்யப்ரபாவங்களைக் கண்டு வைத்தும் இவர் திருவடிகளில் ஆச்ரயித்து எளிதில் உஜ்ஜீவித்துப் போகாதே 'எந்த தெய்வத்தினிடத்தில் ஆச்ரயித்தால் நாம் உஜ்ஜீவித்துப்போகலாம்?' என்று விசிகித்ஸை பண்ணிக்கொண்டு வீண்காலம் கழிக்கிறார்களே! அந்தோ! இஃது என்ன அவிவேகம்!! என இரங்கினாராயிற்று.

பொய்யைச் சுரக்கும் பொருளென்றது—பொய் தவிர வேறில்லாத அர்த்தம் என்றபடி. "ஸர்வம் அஸத்யம்" என்கிறவர்களாகையாலே அஸத்யமயம். மெய்யைப் புரக்கு மிராமாநுசன்=

"யதார்த்தம் ஸர்வவிஜ்ஞாநம்" என்று ஸ்தாபித்தருளினவர். புரத்தல்—காப்பாற்றுதல். .... ... (எக)

நல்லார்பரவு மிராமாநுசன் * திருநாமம் நம்ப
வல்லார்திறத்தை மறவாதவர்கள் யவர் * அவர்க்கே
எல்லாவிடத்திலு மென்றுமெப் போதிலுமெத்தொழும்பும் *
சொல்லால்மனத்தால் கருமத்தினல் செய்வன் சோர்வின்றியே.

| | |
|---|---|
| நல்லார் பரவும் இராமாநுசன் | ஸத்துக்களாலே கொண்டாடப்படுகிற எம்பெருமானாருடைய |
| திரு நாமம் | திருநாமத்தை |
| நம்ப வல்லார் திறத்தை | (தங்களுக்குத் தஞ்சமாக) நம்பியிருக்கவல்லவர்களுடைய படிகளை |
| மறவாதவர்கள் எவர் | மறவாமல் எப்போதும் சிந்திப்பவர்கள் யாரோ, |
| அவர்க்கே | அப்படிப்பட்ட ஸ்ரீராமாநுஜ பக்தபக்தர்களுக்கே |
| எல்லா இடத்திலும் | ஸகல தேசங்களிலும் |
| என்றும் | ஸகல அவஸ்தைகளிலும் |
| எப்போதிலும் | ஸகல காலங்களிலும் |
| எத் தொழும்பும் | ஸகலவித கைங்கரியங்களையும் |
| சொல்லால் மனத்தால் கருமத்தினல் | மனமொழி மெய்களென்னும் த்ரிகாணங்களாலும் |
| சோர்வு இன்றி செய்வன் | பிரியாதே யிருந்து செய்வேன். |

* * *—தம்முடைய நிலைநின்ற நிஷ்டையைப் பேசுகிறார் இதில். ஸத்துக்களனைவரும் கொண்டாடும்படியான எம்பெருமானாருடைய திருநாமங்களையே தங்களுக்குத் தஞ்சமாக நம்பியிருக்கிற மஹான்களையே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீராமாநுஜ பக்தபக்தர்களுக்கே அடியேன் * ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமைகள் செய்யக்கடவேனென்றுராயிற்று. தொழும்பு=அடிமை. ... ... (அ0)

சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ் * தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்ற வெனக்கு * அரங்கன்செய்ய தாளிணைகள்
பேர்வின்றியின்று பெறுத்து மிராமாநுச வினியுன்
சீரொன்றிய கருணைக்கு * இல்லைமாறு தெரிவுறிலே. (அக)

| | |
|---|---|
| உன் தன் துணை அடி கீழ் | தேவரீருடைய உபயபாதங் களின்கீழே |
| சோர்வு இன்றி தொண்டு பட்டவர் பால் | சோராமல் அடிமைப் பட்டவர்கள் விஷயத்தில் |
| சார்வு இன்றி நின்றஎனக்கு | பொருத்தமில்லாம லிருந்த எனக்கு |
| இன்று | இன்றைத்தினத்தில் |
| அரங்கன் செய்ய தாள் இணைகள் | பெரிய பெருமா ளுடைய சிவந்த திருவடியிணைகளை |
| பேர்வு இன்றி பெறுத்தும் இராமாநுசா | ஒருகாலும் விட்டு நீங்காதபடி சிரோ பூஷணமாகத் தந்தருளின எம் பெருமானாரே! |
| இனி | இப்படியான பின்பு |
| தெரிவுறில் | ஆராயுமளவில் |
| உன் | தேவரீருடைய |
| சீர் ஒன்றிய கருணைக்கு | சிறந்த திருவருளுக்கு |
| மாறு இல்லை | ஒப்பு இல்லை. |

* * *—ஸ்ரீராமாநுஜ பக்தபக்தர்களுக்கே ஆட்செய்வே னென்று கீழ்ப்பாட்டில் கூறின அமுதனார், இப்படிப்பட்ட உறுதி எனக்கு இன்று உண்டாயிற்றேயொழிய இதற்கு முன்பு உண் டாகாமலே யிருந்தது; அப்படியிருந்தவென்னை தேவரீர் திவ்ய க்ருபையாலே திருத்தி தேவரீருகந்த விஷயத்திற்கு ஆட்படுத் திற்றே! இஃது என்ன ஒப்பற்ற திருவருள்! என்று ஆச்சரியப் படுகிறார்.

ஸ்வாமிந்! தேவரீருக்கு அடிமைப்பட்ட பெரியோர்கட்கு ஒரு நொடிப் பொழுதும் ஆளாகாமல் ஸம்ஸாரத்திலே கைகழிந்துபோன என்னை தேவரீர் நிர்ஹேதுக கிருபையாலே அழகிய மணவாள னுடைய திருவடிகளுக்கு ஆளாக்கி வைத்தது; இப்படிப்பட்ட தேவரீருடைய திருவருளுக்கு ஒப்பு இல்லை என்றாராயிற்று. (அக)

தெரிவுற்றஞானம் செறியப்பெறாது * வெந் தீவினையால்
உருவற்றஞானத் துழல்கின்ற வென்னை * ஒருபொழுதில்
பொருவற்ற கேள்வியனாக்கி நின்றானென்ன புண்ணியனோ
தெரிவுற்றகீர்த்தி * இராமாநுசனென்னும் சீர்முகிலே. (அஉ)

| | |
|---|---|
| தெரிவு உற்ற ஞானம் செறிய பெறாது | தெளிவான ஞானத்தைச் சேரப்பெறாமல் |
| வெம் தீ வினையால் | மிகவுங் கொடிதான கருமத்தாலே |

| | | | |
|---|---|---|---|
| உரு அற்ற ஞானத்து உழல்கின்ற என்னை | உபயோகமற்ற ஞானத்தை யுடையனும் (ஒன்றிலும் நிலையில்லாமல்) திரிகிற என்னை | தெரிவு உற்ற கீர்த்தி | ப்ரஸித்தமானபுகழை யுடையவரும் |
| ஒரு பொழுதில் | ஒரு க்ஷணகாலத்தில் | சீர் முகில் என்னும் | (ஔதார்யத்தில்) சிறந்த மேகமென்னத் தக்கவருமான |
| பொருவு அற்ற கேள்வியன் ஆக்கி நின்றான் | ஒப்பற்ற பஹுச்ருதனாக ஆக்கியருளினவரும் | இராமாநுசன் | எம்பெருமானார் |
| | | என்ன புண்ணியனோ | என்ன தார்மிகரோ? [ஒப்பற்ற தர்மிஷ்டரென்றபடி.] |

* * *—இது நல்லது, இது தீயது என்று பகுத்தறியமாட்டாமல் மஹாபாபத்தினால் விபரீத ஞானத்தைக்கொண்டு ஸம்ஸாரத்தில் நின்றவிடத்தில் நில்லாமல் ஓய்வின்றித் திரிந்துகொண்டிருந்த எனக்கு ஒரு க்ஷணத்திலே எம்பெருமானார் அரிய பெரிய அர்த்த விசேஷங்களை உபதேசித்தருளி 'பஹுச்ருதன்' என்னும்படியாக என்னை ஆக்கிவிட்டார்; இப்படி இரும்பைப் பொன்னாக்குகிற மஹாநுபாவர் வேறு யாரேனுமுண்டோ? என்கிறார்.

பொருவற்ற கேள்வியனாக்கி நின்றான்=அமுதனாரைப்போலே விஷயங்கள் கேட்டவர் இவ்வுலகில் யாருமில்லை யென்னும்படி செய்தருளினார்; பஹுச்ருதனென்றால் பல பெரியோர்களிடத்தில் பலவாறாகப் பல விஷயங்களைப் பலகால் கேட்டுணர்ந்தவனென்று பொருள். பொருவு—ஒப்பு. ... ... ... (அஉ)

சீர்கொண்டு பேரறம்செய்து * நல்வீடு செறிதுமென்னும்
பார்கொண்ட மேன்மையர் கூட்டனல்லேன் * உன்பதயுகமாம்
ஏர்கொண்ட வீட்டை யெளிதினிலெய்துவ னுன்னுடைய
கார்கொண்ட வண்மை * இராமாநுசா! இது கண்டுகொள்ளே.

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசா | எம்பெருமானாரே!, | | |
| சீர் கொண்டு | சமம் தமம் முதலிய குணங்களை யுடையராய் | நல் வீடு செறிதும் என்னும் | பரம புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைந்திடுவோம் என்றிருக்கிற |
| பேர் அறம் செய்து | சிறந்த தருமமாகிய சரணாகதி யோகத்தை யநுஷ்டித்து | | |

| | | | |
|---|---|---|---|
| பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன் | ப்ரஸித்தமான ப்ரபாவத்தையுடைய ப்ரபந்நர்களுடைய கோஷ்டியில் நான் சேர்ந்தவனல்லேன்; | எளிதினில் எய்துவன் | ஸுலபமாக அடைந்திடுவேன்; |
| உன் பதயுகம் ஆம் | தேவரீருடைய உபய பாதங்களாகிற | கார் கொண்ட | (ஔதார்யத்தில்) மேகத்தை வென்றிருக்கிற |
| ஏர் கொண்ட வீட்டை | பரம விலக்ஷணமான மோக்ஷத்தை | உன்னுடைய | தேவரீருடைய |
| | | வண்மை இது | ஔதார்யம் இப்படிப்பட்டது; |
| | | கண்டுகொள் | தேவரீரே இதனைக் கண்டு கொள்ளலாம். |

[அடியேன் சொல்லவேணுமோ?]

* * *—சரமச்லோகத்திலே கண்ணபிரான் நியமித்தபடியே நாம் சரணாகதியை அநுஷ்டித்து விட்டோமாகையால் நமக்கு மோக்ஷம் கைபுகுந்துவிட்டதேயாமென்று அறுதியிட்டிருக்கும் மஹான்களில் அடியேன சேர்ந்தவனல்லேன்; அப்படி அடியேன் ஒன்றும் அநுஷ்டிக்கவில்லை. தேவரீருடைய திருவடிகளாகிற மோக்ஷத்தை அடைந்திடத் தடையில்லை யென்கிற மனவுறுதியே அடியேனுக்குள்ளது என்றாராயிற்று.

"ப்ரபத்திః பரமோ தர்மః" என்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே பேரறம் என்றார். வீடு என்று கைவல்யத்துக்கும் வாசகமுண்டாகையாலே பரமபதமென்கிற வாசிதோற்ற நல்வீடு என்றார். பதயுகம்—வடசொல்; யுகம் என்றால் இரண்டு. இது கண்டு கோள்=ஔதார்யத்தின் சீர்மை உதாரர்களுக்குத் தெரியாது; யாசகனுக்கே தெரியுமாதலால் அடியேன் உணர்த்த தேவரீர் உணர்க—என்கிறாராகவுமாம். .... .... .... (அ௩)

கண்டுகொண்டே னெம்மிராமா நுசன்றன்னைக் காண்டலுமே *
தொண்டுகொண்டே னவன் தொண்டர்பொற்றாளில்*என் தொல்லை [வெந்நோய்
விண்டுகொண்டேனவன் சீர்வெள்ளவாரியை வாய்மடுத் தின்று
உண்டுகொண்டேன்*இன்னமுற்றனவோதி லுலப்பில்லையே. (அ௪)

| | | | |
|---|---|---|---|
| எம் இராமாநுசன் தன்னை | ஸ்வாமி எம்பெருமானாரை | இன்று கண்டு கொண்டேன் | இன்று (உள்ளபடி) தெரிந்து கொண்டேன்; |

| | |
|---|---|
| காண்டலுமே | இப்படி தெரிந்து கொண்ட வளவிலே |
| அவன் தொண்டர் பொன்தாளில் | அவரது பக்தர்களுடைய அழகிய திருவடிகளில் |
| தொண்டு கொண்டேன் | அடிமைப்பட்டேன்; (அதனால்) |
| என் தொல்லை வெம் நோய் | எனது பழைய கொடுவினைகளை |
| விண்டு கொண்டேன் | நீக்கிக்கொண்டேன், |
| அவன் சீர் வெள்ளம் வாரியை | அவருடைய கல்யாணகுண ப்ரவாஹமாகிற கடலை |
| வாய் மடுத்து உண்டு கொண்டேன் | வாயார அநுபவிக்கப் பெற்றேன்; |
| இன்னம் உற்றன | இப்படியாக இன்னமும் நான்பெற்ற நன்மைகளை |
| ஓதில் | சொல்லத் தொடங்கினால் |
| உலப்பு இல்லை | (அதுக்கு) ஒரு முடிவு கிடையாது. |

* * *—இனிமேலும் எம்பெருமானார் திருவருளால் நான் பெறப்போகிற நன்மைகள் அளவற உண்டு; எனினும், இன்றளவும் நான் பெற்ற பேறுகளுக்கு எல்லையுண்டோ வென்கிறார்.

எம்பெருமானாரை நம்போன்ற ஒரு மனிசராகவே ஸாமாந்யர் நினைத்திருப்பாராயினும் அடியேன் அப்படி நினைக்கவில்லை; 'இவர் மநுஷ்யரல்லர்; உலகத்தை வாழ்விக்க ஸ்ரீ வைகுண்டத்தில் நின்றும் வந்தவதரித்த நித்யஸூரிகளிலே ஒருவராவர்' என்று தெரிந்துகொண்டேன்; ["இராமாநுசன்றன்னைக் கண்டு கொண்டேன்" என்பதற்கு இது கருத்து.] அங்ஙனம் தெரிந்துகொண்டவுடனே அவரிடத்தில்வைத்த பக்தி அவரடியார்களளவுஞ்சென்று அவருடைய பக்தர்களின் திருவடிகளில் கிஞ்சித்கரிக்கப் பெற்றேன்; அதனால் என்னுடைய பாவங்களெல்லாம் தீரப்பெற்றேன். இப்படிப்பட்ட எனக்கு அவ்வெம்பெருமானாருடைய திவ்ய குணாநுஸந்தானமே * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாமாகப் பெற்றேன். இப்படியாக நான்பெற்ற நன்மைகளில் இவை சில; எல்லாவற்றையும் பூர்த்தியாகச் சொல்லில் பெரிய பாரதமாம் என்றவாறு. உலப்பு—முடிவு. .... (அசு)

ஓதியவேதத்தி னுட்பொருளாய் * அதனுச்சி மிக்க
சோதியைநாத னெனவறியா துழல்கின்ற தொண்டர் *
பேதைமைதீர்த்த விராமாநுசனைத் தொழும் பெரியோர்
பாதமல்லாலென்றன் னாருயிர்க்கு * யாதொன்றும் பற்றில்லையே.

| | |
|---|---|
| ஓதிய வேதத்தின் உள் பொருள் ஆய் | அத்யயநம் பண்ணப்படுகிற வேதங்களின் உட்பொருளாயும் |
| அதன் உச்சி மிக்க சோதியை | அந்த வேதங்களின் முடிவாகிய உபநிஷத்துக்களிலே மிகவும் விளங்கு பவனாயுமுள்ள ஸ்ரீமந் நாராயணனை |
| நாதன் என அறியாது | ஸர்வ சேஷியென்று தெரிந்து கொள்ளாமல் |
| உழல்கின்ற தொண்டர் | கண்ட விடங்களிலும் அடிமைசெய்து திரிகின்ற பாமரர்களுடைய |
| பேதைமை | அவிவேகத்தை |
| தீர்த்த | போக்கடித்த |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| தொழும் | ஸேவிக்கின்ற |
| பெரியோர் | மஹான்களுடைய |
| பாதம் அல்லால் | திருவடிகள் தவிர |
| என்தன் ஆர் உயிர்க்கு | எனது அருமையான ஆத்மாவுக்கு |
| யாது ஒன்றும் பற்று இல்லை | வேறு எதேனும் புகலிடமில்லை. |

* * *—கீழ்ப்பாட்டில் "அவன் சீர் வெள்ளவாரியை வாய் மடுத்து உண்டு கொண்டேன்" என்றும் "அவன் தொண்டர் பொற்றாளில் தொண்டு கொண்டேன்" என்றும் சொன்ன இரண்டு விஷயங்களுள் முதற்சொன்ன விஷயமே [அதாவது—ஸ்ரீராமாநுஜ பக்தர்களுக்கு பக்தனாயிருப்பதே] எனக்குச் சிறந்த உத்தேச்ய மென்கிறார் இதில்.

ஸகல வேதங்களாலும் பிரதிபாதிக்கப் படுபவனும், கரும காண்டங்களிற்போல் இந்திரன், அக்நி, வருணன் முதலிய சப்தங் களையிட்டு அத்தேவதைகட்கு அந்தர்யாமியென்று (தலையைச் சுற்றிப்) பிரதிபாதிக்கப் படுகையன்றியே வேதாந்தமான உபநி ஷத்துக்களில் ஸாக்ஷாத்தாகவே பிரதிபாதிக்கப்படுபவனுமான ஸர் வேச்வரனை சேஷியென்று தெரிந்துகொள்ளாமல் தேவதாந்தரங் களைத் தொழுதும் நீசரான அரசர்களைப் பணிந்தும் ஸம்ஸாரத்தில் அழுந்திக்கிடக்கிற ஸம்ஸாரிகளுடைய அஜ்ஞானத்தைப் போக்கின

எம்பெருமானாரை அடிபணிந்த மஹாநுபாவர்கள் தாம் எனக்கு சரண்யர் என்றாராயிற்று.

வேதத்தின் நுண் பொருள் என்றும் பிரிக்கலாம். .... (௮௫)

பற்று மனிசரைப்பற்றி * அப்பற்று விடாதவரே
உற்றாரென வுழன்றோடி நையேனினி * ஒள்ளியநூல்
கற்றார்பரவு மிராமாநுசனைக் கருது முள்ளம்
பெற்றாரவர் * அவரெம்மை நின்றாளும் பெரியவரே. (௮௬)

| | |
|---|---|
| பற்று மனிசரை பற்றி | உபயோகமற்ற மநுஷ்யர்களைப் பற்றி |
| அப் பற்று விடாது | அந்தப் பற்றுதலை விடாமல் |
| அவரே உற்றார் என | அவர்களையே உறவினராகக் கொண்டு |
| உழன்று | அவர்கள் பின்னே அலைந்து |
| ஓடி | அவர்களிட்ட காரியங்களைச் செய்ய ஓடி |
| இனி நையேன் | இனிமேல் துவளமாட்டேன்; |
| ஒள்ளிய நூல் கற்றார் | சிறந்த சாஸ்த்ரங்களைக் கற்றவர்களாலே |
| பரவும் | கொண்டாடப்படுகிற |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| கருதும் உள்ளம் பெற்றார் யவர் | அநுஸந்திக்கும்படியான நெஞ்சையுடையோர் யாவரோ, |
| அவர் | அந்த மஹான்களே |
| எம்மை | நம்மை |
| நின்று ஆளும் பெரியவர் | சாச்வதமாக அடிமை கொள்ளும் மஹாத்மாக்கள். |

* * *—நேற்றுவரையில் நான் உபயோகமற்ற சிறு மனிசரையெல்லாம் சரணம்பற்றி, அவர்களே நமக்கு ரக்ஷகர் என்றெண்ணி அவர்களது மனைக்கடைதோறும் கிடந்து உழன்றேன்; இனி ஒருநாளும் அப்படி கெட்டுப்போகமாட்டேன்; பல பல பண்டிதர்களாலே கொண்டாடப்படுகின்ற எம்பெருமானாரைச் சிந்திப்பவர்கள் யாவரோ அந்த ஸ்ரீராமாநுஜ பக்தர்களுக்கே அடியேன் ஆட்பட்டவனாக ஆய்விட்டபடியால் * பற்றுமனிசரை உற்றாரென உழன்றோடி நையேன் இனி.

பற்று மனிசர்=ஒரு ஆபத்தைப் போக்கவும் ஸம்பத்தைக் கொடுக்கவும் சக்தி போராதவர்கள் என்கை. "அப்பற்று விடாதவரே" என்றவிடத்து 'விடாது அவரே' என்று பிரிக்காமல்

விடாதவரே என்று ஒரு சொல்லாகவே கொண்டு உரைத்தலுமாம்; பற்று மனிசரை நான் பற்றவில்லை; பற்றுமனிசரைப் பற்றி அப் பற்றை விடாதவர்கள் சிலருண்டு, அவரை நான் உற்றாரெனப் பற்றினேன் என்றவாறு. இதனால், மூர்க்கரிலும் கடைகெட்ட மூர்க்கனாயிருந்தே னென்றதாம்.

ஒள்ளிய நூல்—"சுடர்மிகு சுருதி" என்றார் ஆழ்வாரும்.

பெரியவர்பேசிலும் பேதையர் பேசிலும் * தன்குணங்கட்கு
உரியசொல்லென்று முடையவனென்றென்று*உணர்வில் மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தி யிராமாநுசன் மறை தேர்ந்துலகில்
புரியுநன்ஞானம் * பொருந்தாதவரைப் பொரும் கலியே. (௯௭)

| | |
|---|---|
| பெரியவர் பேசிலும் | ஞானசக்திகளால் நிறைந்த மஹான்கள் பேசினாலும் |
| பேதையர் பேசிலும் | ஒன்றுந் தெரியாதவர்கள் பேசினாலும் |
| தன் குணங்கட்கு உரிய சொல் என்றும் உடையவன் என்று என்று | தனது திருக் குணங்களுக்கு ஏற்றசொற்களை எப்போதும் உடையவ ரென்று பலகாலுஞ் சொல்லி |
| உணர்வில் மிக்கோர் தெரியும் | சிறந்த ஞானிகள் அநுஸந்திக்கிற |
| வண் கீர்த்தி | திவ்யகீர்த்தியை யுடையரான |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| மறை தேர்ந்து | வேதங்களை ஆராய்ந்து |
| உலகில் | இவ்வுலகத்தில் |
| புரியும் | உபதேசித்தருளின |
| நல் ஞானம் பொருந்தாதவரை | நல்ல ஞானத்தில் சேராதவர்களை |
| கலி பொரும் | கலிபுருஷன் பீடிப்பன். |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறின அத்யவஸாயம் எனக்குக் கலியின் கொடுமையினால் ஒரு காலத்தில் மாறிவிடக் கூடுமென்று நினைக்கிறீர்களோ, அப்படி நினைக்கவேண்டா; இராமாநுசனடியார் திறத்தில் கலிபுருஷன் ஒரு கொடுமையும் செய்யமுடியாதவன்; மற்றவர்களைத்தான் கலிபுருஷன் கெடுப்பன். எனது அத்யவஸாயம் நெடுநாளளவும் நிலைநிற்கக் கூடியதே என்றாராயிற்று.

[பெரியவர் பேசிலும் இத்யாதி.] இதன் கருத்து யாதெனில் எம்பெருமானாருடைய திருக்குணங்களை மஹா ஞானிகள் தாம்

பேசி முடிக்கவல்லவர்கள், அற்பஞானிகள் .நம்மால் பேசமுடியா தென்று பின்வாங்கக் கூடியவர்கள்—என்பதில்லை; "தங்களன் பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்து பூசிப்ப" என்றும் "பேசுவார் எவ்வளவுபேசுவர் அவ்வளவே வாசமலர்த்துழாய் மாலையான்—வடிவு" என்றும் சொன்னாற்போல, பெரியோர் சொன்னாலும் சிறியோர் சொன்னாலும் அவரவர்களுடைய யோக்யதைக்குத் தக்கபடி சொல்லித் துதிக்கத்தகுந்தவர் எம்பெருமானார் என்று பெரியோர்கள் தெரிந்துகொண்டு, நாம் நமது சக்திக்குத தக்கபடி ஸ்தோத்ரம் பண்ணுவோமென்று துதிக்கின்றார்களென்கை. அப்படி துதிக்கப்படுகின்ற எம்பெருமானார் உபதேசித்த ஞானத்தை அநாதரித்து அவ்வுபதேசத்தின்படி நடவாதவர்களே கலிதோஷத்தினால் வருந்துவார்களென்றதாயிற்று. ... ... (அஎ)

கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் * கலைப்பெருமான்
ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து * அதனால்
வலிமிக்கசீய மிராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கதென்று * இப்புவனத்தில் வந்தமை போற்றுவனே.

| | |
|---|---|
| கலி மிக்க | நிலவளம் மிகுந்த |
| செந்நெல் கழனி | செந்நெல்கழனிகளையுடைய |
| குறையல் | திருக்குறையலூரில் அவதரித்த |
| கலை பெருமான் | சாஸ்த்ர மென்னும் படியான திவ்யப்ரபந்தங்களை யருளிச் செய்த பெருமைவாய்ந்த திருமங்கையாழ்வாருடைய |
| மிக்க ஒலி பாடலை | அதிசயித்த இசையையுடைய பெரிய திருமொழியை |
| உண்டு | அநுபவித்து |
| தன் உள்ளம் தடித்து | தமது திருவுள்ளம் பூரித்து |
| அதனால் வலி மிக்க | அத்தால் மிடுக்கு அதிகரித்த |
| சீயம் | சிங்கம்போன்ற |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| மறை வாதியர் ஆம் புலி மிக்கது என்று இப் புவனத்தில் வந்தமை | வேதத்தில் துர்வாதங்கள் பண்ணுகிற குத்ருஷ்டிகளாகிற புலிகள் அதிகமாய் விட்டனவென்று (அவற்றைத் தண்டிப்பதற்காக) இவ்வுலகில் அவதரித்தபடியை |
| போற்றுவன் | புகழ்ந்திடக் கடவேன். |

* * *—திருக்குறையலூரில் திருவவதரித்துத் திருமொழி முதலான ஆறு திவ்யப்பிரபந்தங்களை அருளிச்செய்த திருமங்கை மன்னனுடைய ஸ்ரீஸூக்திகளை அநவரதம் அநுஸந்தித்துக் கொண்டு அதனாலே மனக்களிப்புற்ற எம்பெருமானார் இவ்வுலகத்தில் குத்ருஷ்டி மதங்களைக் கண்டிப்பதற்காக அவதரித்தார்; எப்படி அவதரித்தார்; குத்ருஷ்டிகளாகிற புலிகளைப் கபளீகரிக்க வந்த சிங்கமோ என்னும்படியாக அவதரித்தார். இப்படி அவதரித்தபடியை நான் போற்றுவேன் என்றாயிற்று.

கலிமிக்க செந்நெற்கழனி=கலியாவது ஆரவாரம்; உழுவது நடுவது அறுப்பதாய்ச் செல்லுகிற கோலாஹலம். திருமங்கையாழ்வாருடைய திருவவதாரஸ்தலம் திருக்குறையலூரெனப்படும். "கலைப்பெருமான்" என்று சிறப்பித்துக் கூறியது அவருடைய நாவீறு விளங்குதற்கென்க. புவனம்—வடசொல். ... (அஅ)

போற்றரும் சீலத்திராமாநுச * நின்புகழ் தெரிந்து
சாற்றுவனேல் அதுதாழ்வதுதீரில் * உன்சீர் தனக்கோர்
ஏற்றமென்றே கொண்டிருக்கிலுமென் மனமேத்தி யன்றி
ஆற்றகில்லாது * இதற்கென்னினைவா யென்றிட் டஞ்சுவனே

| | |
|---|---|
| போற்ற அரு சீலத்து | புகழ்ந்து தலைக்கட்ட முடியாத சீலகுணத்தையுடைய |
| இராமாநுச | எம்பெருமானாரே; |
| நின் புகழ் | தேவரீருடைய திருக்குணங்களை |
| தெரிந்து சாற்றுவனேல் | உணர்ந்து பேசுவேனாகில் |
| அது | (நீசனாகிய நான்) பேசுகிறவது |
| தாழ்வு | (தேவரீருக்கு) அவத்யமாம்; |
| அது தீரில் | அப்படி நான் பேசுவது தவிர்ந்தால் |
| உன் சீர் தனக்கு ஓர் ஏற்றம் | தேவரீருடைய திருக்குணங்களுக்கு மேன்மையாகும் |
| என்றே கொண்டு இருக்கிலும் | என்று நான் தெரிந்து கொண்டிருந்தாலும் |
| என் மனம் | எனது நெஞ்சானது |
| ஏத்தி அன்றி | (தேவரீருடைய திருக்குணங்களைப்) புகழ்ந்தல்லது |
| ஆற்ற கில்லாது | தரித்திருக்க மாட்டாது; |
| இதற்கு | இவ்விஷயத்திலே |
| என் நினைவாய் என்றிட்டு அஞ்சுவன் | தேவரீர் என்ன நினைக்குமோ வென்று பயப்படுகின்றேன். |

* * *—கீழ்ப்பாட்டில் "போற்றுவனே" என்றதும் எம்பெருமானாரைப் போற்றுதற்குஉரிய யோக்யதை நமக்கு உண்டோ? என்று ஆராய்ந்து பார்த்தார்; யோக்யதை சிறிதுமில்லை யென்றறிந்தார்; யோக்யதையில்லாத நாம் இந்த ஸாஹஸத்தில் கைவைப்பதானது அவரைப் பழிப்பதாகத் தலைக்கட்டுமேயன்றிப் புகழ்வதாக ஆகாது, ஆனபின்பு நாம் வாயைமூடிக்கொண்டிருப்பதே நன்று என்று கொண்டு வெறுமனிருக்கப்பார்த்தார்; நெஞ்சு கேட்கவில்லை; எம்பெருமானார் விஷயமாக எதையாவது சொல்லிக்கொண்டேயிருக்கவேணுமென்று நெஞ்சு பதறுகின்றபடியால் வாய் மூடியிருக்க முடியவில்லை; அந்தோ! என்செய்வேன்? போற்றவோ யோக்யதையில்லை; போற்றாமலிருக்கவோ மனமில்லை; போற்றியே தீரும்படி நேருகிறது. இவன் ஆற்றாமையாலே போற்றுகிறானென்று தேவரீர் நினைக்குமோ? அன்றி அஹங்காரத்தாலே போற்றுகிறானென்று நினைக்குமோ? எப்படிநினைக்குமோ? மிகவும் அஞ்சுகின்றேன் ஸ்வாமீ! என்றாராயிற்று. .... (அக)

நினையார் பிறவியை நீக்கும்பிரானை * இந்நீணிலத்தே
எனையாள வந்த விராமாநுசனை * இருங்கவிகள்
புனையார்புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார் * பிறப்பில் வருந்துவர்மாந்தர் மருள்சுரந்தே. (கூ0)

| | | | |
|---|---|---|---|
| பிறவியை நீக்கும் பிரானை | ஸம்ஸாரத்தை யொழிக்கும் உபகாரகராயும் | புனையும் பெரியவர் தாள்களில் | (ஏதோபாக்கியத் தாலே) பாடல் களைப்பாடுகிற மஹான்களின் திருடிகளில் |
| இ நீள் நிலத்தே | இப்பெரிய பூமியிலே | பூ தொடையல் வனையார் | புஷ்ப மாலைகளை ஸமர்ப்பியாதவர் களாயுமுள்ள |
| எனை ஆள | என்னை அடிமை கொள்வதற்கே | மாந்தர் | மனிசர்கள் |
| வந்த | அவதரித்தவராய முள்ள | மருள் சுரந்து | அஜ்ஞானம் அதிகமாகப் பெற்று |
| இராமாநுசனை | எம்பெருமானாரை | பிறப்பில் வருந்துவர் | ஸம்ஸாரத்திற் கிடந்து துன்பப் படுவர்கள். |
| நினையார் | சிந்தியாதவர்களா யும், | | |
| இரு கவிகள் புனையார் | (அவர்விஷயமாக) நல்ல பாடல் களைப் பாடாத வர்களாயும் | | |

* * *—கீழ்ப்பாட்டில், அஞ்சுவனே என்ற இவருடைய அச்சம் தீரும்படி குளிரக் கடாக்ஷித்தார் எம்பெருமானார்; அந்தக் கடாக்ஷ வைபவத்தாலே அச்சம் தீரப்பெற்றுத் தேறுதலடைந்து, மநோவாக்காயங்களில் ஏதேனுமொன்றால் எம்பெருமானார் விஷயத்தில் ஒரு நன்மைசெய்து வாழ்ந்துபோகலாமாயிருக்க, பாவிகள் அதுசெய்யாதே பாழாய்ப்போகிறார்களே! என அநுதபிக்கிறார் இதில்.

ஸம்ஸாரத்தில் பிறவியைப் போக்க வல்லவராய், விசேஷித்து அடியேனை ஆட்படுத்திக்கொள்ளுதற்காக இவ்வுலகில் அவதரித்தவரான எம்பெருமானாரை இந்தப் பாழும் ஸம்ஸாரிகள் நெஞ்சாலே நினைக்கவாவது நினைக்கலாம்; அல்லது வாய்வந்தபடி சில சொற்களைச் சொல்லித் துதிக்கவாவது துதிக்கலாம்; அதுவுமல்லாமல், அவரைத் துதிக்கின்ற மஹான்களின் திருவடிகளில் பூவிட்டு வணங்கவாவது வணங்கலாம். இப்படிப்பட்ட மனமொழி மெய்களின் காரியங்களில் ஒன்றையுஞ் செய்யாமல் ஸம்ஸாரத்தைப் பூண் கட்டிக்கொள்ளுகிறார்களே பாவிகள்!. புனைதல்—தொடுத்தல். வனைதல்—ஸமர்ப்பித்தல். .... .... .... (கூo)

மருள் சுரந்தாகம வாதியர்கூறும் * அவப்போருளாம்
இருள் சுரந்தெய்த்த வுலகிருள்நீங்க * தன்னீண்டியசீர்
அருள் சுரந்தெல்லா வுயிர்கட்கும்நாத னரங்கனேன்னும்
போருள் சுரந்தான் * எம் மிராமாநுசன் மிக்கபுண்ணியனே. (கூக)

| | | | |
|---|---|---|---|
| ஆகமம் வாதியர் | (சிவன் சொன்ன) சைவ ஆகமத்தைப் பிரமாணமாகக் கொண்டு வாதம்பண்ணுகிற பாசுபதர்கள் | அவம் பொருள் ஆம் இருள் சுரந்து | நீசமான அர்த்தங்களாகிற இருள் மேலிட்டு (அதனால்) |
| | | எய்த்த | கெட்டுப்போன |
| | | உலகு | உலகத்தவர்களுடைய |
| மருள் சுரந்து | அஜ்ஞானம் அதிகரிக்கப் பெற்று | இருள் | அஜ்ஞாநாந்தகாரமானது |
| | | நீங்க | போகும்படியாக |
| கூறும் | (சிவனுடைய பாரத்துவ விஷயமாகச்) சொல்லுகிற | தன் | தம்முடைய |
| | | ஈண்டிய சீர் அருள் சுரந்து | விலக்ஷணமான க்ருபையைப் பெருக்கி |

| | | | |
|---|---|---|---|
| எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும் பொருள் | 'எல்லாப் பிராணிகளுக்கும் ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனே' என்கிற அர்த்தத்தை | சுரந்தான் | வெளியிட்டவரான |
| | | எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| | | மிக்க புண்ணியன் | சிறந்த புண்யாத்மா. |

* * *—இந்த ஸம்ஸாரிகள் இப்படி விமுகராயிருக்கச் செய்தேயும் இவர்களைத் தம்பேறாக உஜ்ஜீவிக்கச்செய்வதற்காக எம்பெருமானார் முயன்றதைச் சிந்தித்து அவரைக் கொண்டாடுகிறார்.

ஆஸுரப்ரக்ருதிகளை மோஹிக்கச்செய்வதற்காக ருத்ரன் சொன்ன சைவ ஆகமத்தையே முக்கியமாகக் கொண்டு பாசுபதர்கள் சொல்லுகிற அபார்த்தங்களைக் கேட்டு உலகத்தார் வழி திகைத்து ஸம்ஸாரத்தில் உழலாநிற்க, அப்பொழுது எம்பெருமானார் அவதரித்து அந்த அபார்த்தங்களைக் கண்டித்துத் தமது திருவருளாலே ஸ்ரீரங்கநாதனே ஸர்வ ஸ்வாமியென்னும் தத்துவப் பொருளை உபதேசித்தார்: ஓ ஜனங்களே! இந்த மஹா தார்மிஷ்டரையே நீங்களும் ஆச்ரயித்து உஜ்ஜீவித்துப்போங்கள் என்றாராயிற்று.

மிக்க புண்ணியனை எம்மிராமாநுசன்.......பொருள் சுரந்தான் என்றும், பொருள் சுரந்தவனை எம்மிராமாநுசன் மிக்க புண்ணியன் என்றும் இரண்டுபடியும் யோஜிக்கலாம். .... (கூக)

புண்ணியநோன்பு புரிந்துமிலேன் * அடிபோற்றி செய்யும்
நுண்ணருங்கேள்வி நுவன்றுமிலேன் * செம்மைநூற் புலவர்க்கு
எண்ணருங்கீர்த்தி யிராமாநுச இன்று நீபுகுந்தென்
கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் * நின்றவிக்காரணம் கட்டுரையே.

| | | | |
|---|---|---|---|
| செம்மை நூல் புலவர்க்கு | நல்லசாஸ்த்ரங்களைக் கற்றுக் கவிசொல்ல வல்லவர்களுக்கும் | புண்ணியம் நோன்பு புரிந்தும் இலேன் | புண்ணியமான ஒரு விரதத்தையும் அடியேன் அநுஷ்டிக்கவில்லை; |
| எண்ண அரு கீர்த்தி | அளவிட முடியாத கீர்த்தியையுடைய | அடி போற்றி செய்யும் | தேவரீருடைய திருவடிகளை வாழ்த்துகைக்கு உறுப்பான |
| இராமாநுச | எம்பெருமானாரே!, | | |

| | | | |
|---|---|---|---|
| நுண் அருங் கேள்வி | ஸூக்ஷ்மமாய் அருமையான ச்ரவணத்தை | இன்று | இன்று |
| நுவன்றும் இலேன் | (செய்யவேணு மென்று வாயாலே) சொல்லவுமில்லை. | என் கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் | அடியேனது கண்ணி னுள்ளேயும் நெஞ்சி னுள்ளேயும் |
| (இப்படியிருக்க;) | | புகுந்து நின்ற இக் காரணம் கட்டுரை | புகுந்து எழுந்தருளி யிருப்பதற்குக் காரணமருளிச் செய்யவேணும். |

* * *—ஸ்வாமிந்! சிறந்த கவிகளாலும் தேவரீருடைய திவ்ய கீர்த்திகள் அளவிட்டு வருணிக்க முடியாதவை; ஆகவே, தேவரீருடைய மாஹாத்மியம் எல்லையற்றது. இப்படிப்பட்ட தேவரீர் பாவியேனுடைய நெஞ்சையும் கண்ணையும்விட்டு அகலாது எப்போதும் அடியேனை விஷயீகரித்திருப்பதற்கு யாதுகாரணமென்று அடியேன் எவ்வளவுசிந்தித்தும் காரணம் புலப்படவில்லை அடியேன் ஏதாவது நல்ல காரியத்தைச் செய்திருந்தேனாகில் அது காரணமாயிருக்கலா மென்று நினைத்துக்கொள்ளக்கூடும்; அப்படி ஒரு நற்கருமமும் செய்திலேன். தேவரீருடைய திருவடிகளைப் போற்றுவதற்குப்பாங்கான விஷயங்களைக் காதால் கேட்டது மில்லை; கேட்கவேணுமென்ற விருப்பமிருப்பதாக வாய் கொண்டும் ப்ரஸ்தாவம் செய்வதில்லை. இப்படிப்பட்ட என்னை இன்று தேவரீர் விஷயீகரித்தது என்னோ? என்கிறார். நிர்ஹேதுக க்ருபையாலே விஷயீகரித்தருளிற்று என்றவாறு. கட்டுரை = இது முழுச் சொல்லு; சொல் என்றபடி. .... ... ... (கூஉ)

கட்டப்பொருளை மறைப்பொருளென்று * கயவர் சொல்லும்
பெட்டைக்கெடுக்கும் பிரானல்லனே * என் பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வா ளுருவி
வெட்டிக்களைந்த * இராமாநுச னென்னும் மெய்த்தவனே.

| | | | |
|---|---|---|---|
| கிட்டி | அடியேன்பக்கல் வந்து நெருங்கி | என் பெரு வினையை கிழங்கொடு வெட்டி களைந்த | எனது மஹா பாபங்களை வேரோடே அறுத்தொழித்த |
| தன் அருள் என்னும் ஒள் வாள் உருவி | தம்முடைய க்ருபை யாகிற அழகிய வாளை உறையில் நின்றுங் கழற்றி (அதனால்) | இராமாநுசன் என்னும் | எம்பெருமானா ரென்கிற |

மெய் தவன் மாமுனிவர் (எப்படிப்பட்டவரென்றால்)
கயவர் { துஷ்டர்களான குத்ருஷ்டிகள்
கட்டம் பொருளை மறை பொருள் என்று சொல்லும் பெட்டை { தப்பான அர்த்தங்களை வேதங்களின் அர்த்தமாகக் கொண்டு சொல்லுகிற பிரட்டுப் பேச்சுகளை
கெடுக்கும் பிரான் அல்லனே { கண்டித்தொழித்த மஹாநுபாவ ரன்றோ.

* * *—கீழ்ப்பாட்டில் "இராமாநுச! இன்று நீ புகுந்து என் கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்றவிக்காரணங்கட்டுரையே" என்றதற்கு அவர் ஒரு உத்தரமும் அருளிச்செய்யாதிருக்கவே, நிர்ஹேதுக க்ருபையாலே செய்தருளினாரென்று தாமே தெளிந்து கொண்டு "என்னுடைய வலிய பாவங்களைத் தமது கருணையாலே அறுத்தருளின எம்பெருமானார்; ஒருவரும் அபேக்ஷியாமலிருக்கத் தாமேவந்து குத்ருஷ்டிமதங்களைக் கண்டித்த மஹாநுபாவரன்றோ; அவர் செய்யுமவையெல்லாம் நிர்ஹேதுகமாகவன்றோ இருப்ப தென்கிறார்.

கட்டம்—கஷ்டம்; கட்டப்பொருளென்றது கஷ்டப்பட்டுச் சொல்லும் பொருள் என்றபடி. மதாந்தரஸ்தர்கள் சொல்லும் பொருள்கள் அஸ்வரஸமாகையால் க்லிஷ்டங்களாயிருக்குமெனக. கயவர்—நீசர், துஷ்டர். பெட்டு=பிறரை வஞ்சிக்கச் சொல்லும் பொய்ப்பேச்சு. மெய்த்தவன்=தவமாவது சரணாகதியோகம்.

தவந்தருஞ் செல்வும் தகவுந்தரும் * சரியாப்பிறவிப்
பவந்தருந் தீவினை பாற்றித்தரும் * பரந்தாமமென்னும்
திவந்தரும் தீதிலி ராமாநுசன்தன்னைச் சார்ந்தவர்கட்கு
உவந்தருந்தேன் * அவன்சீரன்றி யானொன்று முள்மகிழ்ந்தே.

தீது இல் இராமாநுசன் { எவ்வகைக் குற்றமும் அற்றவரான எம்பெருமானார்
தன்னை சார்ந்தவர் கட்கு { தம்மைவந்து அடைந்தவர் களுக்கு

| | |
|---|---|
| தவம் தரும் | சரணாகதி நிஷ்டையைக் கொடுத்தருள்வர்; |
| செல்வும் தகவும் தரும் | பக்தியாகிற செல்வத்தையும் தமது அருளையும் கொடுத்தருள்வர்; |
| சரியா பிறவி பவம் தரும் தீவினை | நிவர்த்திக்கமுடியாத ஜந்ம ஸம்ஸாரங்களை உண்டாக்குகின்ற கொடு வினைகளை |
| பாற்றி தரும் | போக்கடித்தருள்வர்; |
| பரம் தாமம் என்னும் திவம் தரும் | பரமபதமென்று சொல்லப்படுகிற வானுலகத்தை அளிப்பர்; (ஆனபின்பு) |
| யான் | அடியேன் |
| அவன் சீர் அன்றி | அவ்வெம்பெருமானுருடைய திருக் குணங்களைத் தவிர்த்து |
| ஒன்றும் | வேறொன்றையும் |
| உள் மகிழ்ந்து உவந்து அருந்தேன் | மனக் காதலோடே விரும்பி அநுபவிக்க மாட்டேன். |

* * *—நான் இனி எம்பெருமானாருடைய திருக்குணங்களைத் தவிர்த்து வேறொன்றையும் அனுபவிக்க மாட்டேன். அவ்வெம்பெருமானார்க்கு என்ன விசேஷமென்கிறீர்களோ? அவர் தம்மையாச்ரயித்த பக்தஜநங்களுக்கு ஆதியிலே சரணாகதி நிஷ்டையை உண்டாக்கி அதன்மேல் ஸ்வரூபாநுரூபமான பக்தியைப் பிறப்பித்து ஜநநமரண ரூபமான ஸம்ஸாரத்துக்கு ஹேதுவான அநாதி பாபங்களையெல்லாம் போக்கிக் கடைசியில் ஸ்ரீவைகுண்டத்தையும் தந்தருள்பவர், ஆகையாலே அவருடைய திவ்ய குணங்களை எனக்கு ஸர்வதா போக்கியம்.

இப்பாட்டில், தரும் என்னும் பதம் ஐந்து இடங்களில் வருகின்றது. இரண்டாமடியின் முதலிலுள்ள தரும் என்பது மாத்திரம் தீவினைக்கு விசேஷணம்; மற்ற நான்கும் எம்பெருமானார் பக்கல் அந்வயிக்கும் வினைமுற்றுக்கள்.

"சலியாப்பிறவி, சரியாப்பிறவி" என்பன பாட பேதங்கள். பவம்—வடசொல். பரந்தாம—வடசொல். திவம்—வடசொல் விகாரம்.

உண்ணின் றுயிர்களுக் குற்றனவேசெய்து * அவர்க்குயவே
பண்ணும் பரனும் பரிவிலனும்படி * பல்லுயிர்க்கும்
விண்ணின் தலைநின்று வீடளிப்பானெம் மிராமாநுசன்
மண்ணின் தலத்துதித்து * உய்மறைநாலும் வளர்த்தனனே.

| | | | |
|---|---|---|---|
| உயிர்களுக்கு உள் நின்று | எல்லா ஆத்மாக் களுக்கும் அந்தர் யாமியாயிருந்து கொண்டு | பல் உயிர்க்கும் | ஸகல ஆத்மாக்களுக்கும் |
| உற்றனவே செய்து | ஹிதமான வற்றையே நடத்திக்கொண்டு | வீடு அளிப்பான் | மோக்ஷத்தை அருள்வதற்காக |
| அவர்க்கு | அவ்வாத்மாக்களுக்கு | எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| உயவே பண்ணும் பரனும் | உஜ்ஜீவநத்தையே பண்ணிக்கொண் டிருக்கிற எம்பெருமானும் | விண்ணின் தலை நின்று | ஸ்ரீ வைகுண்டத்தில் நின்றும் |
| பரிவு இலன் ஆம் படி | (ஆத்மாக்களிடத்தில் எம்பெருமானு ரைப்போல்) ப்ரீதி யுடையவனல் லன் என்ன வேண்டும்படியாக | மண்ணின் தலத்து உதித்து | இப்பூதலத்திலே அவதரித்து |
| | | உய் மறை நாலும் | எல்லார்க்கும் உஜ்ஜீ வநஹேதுவான நான்கு வேதங்களையும் |
| | | வளர்த்தனன் | குறைவின்றி வளரச் செய்தருளினர். |

* * *—ஸகல ஆத்மாக்களுடையவும் ஹ்ருதயத்திலே எப்போதும் இருந்துகொண்டு அவர்களை நல்வழியில் நடத்துகைக்கு உரிய செயல்களைச்செய்து உஜ்ஜீவிப்பிக்கின்ற ஸர்வேச்வரன்படியையும் இவ்வெம்பெருமானார்படியையும் பார்த்தால், இவ்விருவர்களுள் எம்பெருமானார்தாம் ஸம்ஸாரிகள் விஷயத்தில் அதிகமான அன்பு உடையவர்; எம்பெருமானுக்கு இவ்வளவு அன்பு இல்லை என்னும்படியாக இவர் எல்லார்க்கும் மோக்ஷமளிப்பதற்காகப் பரமபதத்தில் நின்றும் பூலோகத்திற்கு இறங்கி வந்து வேதமார்க்கத்தைப் பிரதிஷ்டாபநஞ் செய்தருளினர் என்றாராயிற்று. எம்பெருமான் ஸ்வதந்த்ரனுகையாலே நிக்ரஹத்துக்கும் அநுக்ரஹத்துக்கும் பொதுவாயிருப்பன்; எம்பெருமானார் அப்படியல்ல. அநுக்ரஹமே வடிவுகொண்டவரென்னலாம்படியாய் அனைவர்க்கும் முக்தியளிப்பவர் என்பது தேர்ந்த கருத்து.

இப்பாட்டின் ஈற்றடியை "மண்ணின்தலத்துதித்து மறை நாலும் வளர்த்தனனே" என்றே அத்யாபகர்கள் ஓதுவர்கள். "நேர்பதினுறே" என்ற கட்டளைக் கலித்துறையின் இலக்கணப்படி பதினுறெழுத்து ஓத்திருந்தாலும் தளைதட்டுகிறபடியாலும்,

ஸ்ரீ மணவாளமாமுனிகளுரையில் "ஸர்வோஜ்ஜீவந சாஸ்த்ரமான" என்கிற ஒரு வாக்கியம் வ்யர்த்தமாகவேண்டி வருகையாலும் இவ் விரண்டு குறைகட்கும் இடமறும்படி "....உய் மறைநாலும்" என்கிற ப்ராசீந பாடம் கொள்ளத்தக்கது. உய் என்பதற்குப் பொருளாகவே மணவாள மாமுனிகள் "ஸர்வோஜ்ஜீவந சாஸ்த்ரமான" என்கிற வாக்கியமருளிச் செய்தாரென்க. ... .... (கூரு)

வளரும்பிணிகோண்ட வல்வினையால் * மிக்க நல்வினையில்
கிளருந்துணிவு கிடைத்தறியாது * முடைத் தலையூன்
தளருமளவும் தரித்தும் விழுந்தும் தனிதிரிவேற்கு
உளரேம்மிறைவர் * இராமாநுசன் றன்னை யுற்றவரே. (கூசு)

| | |
|---|---|
| வளரும் பிணி கொண்ட வல்வினையால் | அளவற்ற துன்பங்களை யுண்டாக்க வல்ல கொடிய கருமங்களாலே |
| மிக்க நல் வினையில் | பரம தர்மமான சரணாகதியில் |
| கிளரும் துணிவு கிடைத்தறியாது | மஹாவிச்வாஸம் கிடைக்காததனால் |
| முடை தலை ஊன் தளரும் அளவும் | கெட்ட நாற்றங்களுக்கு இருப்பிடமான சரீரம் கட்டுக் குலையும்வரையில் |
| தரித்தும் விழுந்தும் | ஒருவாறு தரித்திருந்தும் (சப்தாதி விஷயங்களிலே) போய்விழுந்தும் |
| தனி திரிவேற்கு | துணையின்றித் திரிகிற எனக்கு |
| இறைவர் | ஸ்வாமிகள் (யாரென்றால்) |
| எம் இராமாநுசன் தன்னை உற்றவர் | நம் எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் |
| உளர் | இருக்கிறார்கள். |

* * *—"மறைநாலும் வளர்த்தனன்" என்ற அமுதனாரை நோக்கிச் சிலர், எம்பெருமானார் மறைநாலும் வளர்த்தது உண்மை தான்; அவர் சேதநர்கட்கு உஜ்ஜீவநோபாயமாக வேதாந்தக் கட்டளையிலே அருளிச்செய்தவை பக்தியும் ப்ரபத்தியும்; இவற்றில் உமக்கு எந்த வுபாயத்தில் ஊற்றம்? என்று கேட்க, எனக்கு அவ்விரண்டும் உபாயமல்ல; ஸ்ரீராமாநுஜ பக்தர்களுடைய அபிமானத்திலே ஒதுங்கி வாழ்பவன் அடியேனென்கிறார்.

என்னுடைய அநாதி பாபத்தினால் எனது நெஞ்சில் பக்தியும் பிறக்கவில்லை; ப்ரபத்திக்குவேண்டிய மஹாவிச்வாஸமும் பிறக்க

வில்லை. மிகவும் ஹேயமான சரீரத்தைப் போஷித்துக்கொண்டு சப்தாதி விஷயங்களிலே ஊன்றினவனுயிருந்தேன். இப்படி கதியற்ற எனக்கு எம்பெருமானருடைய அந்தரங்க பக்தர்களே ரக்ஷகராவாராகையால் நான் ததீயாபிமாந நிஷ்டனுனேன் என்றுராயிற்று.

மிக்க நல்வினை=வினை, நல்வினை, மிக்க நல்வினை என்று மூன்ருக்கி, வினையென்று ஸாமாந்ய பக்தியைச் சொல்லுகிறதாகவும், நல்வினையென்று விசேஷ பக்தியைச் சொல்லுகிறதாகவும், மிக்க நல்வினையென்று ப்ரபத்தியைச் சொல்லுகிறதாகவும் பெரியோர் கூறுவர். முடைத்தலையூன்=தலை என்று இடம்; முடையாவது துர்நாற்றம்; துர்நாற்றத்திற்கு இருப்பிடமான சரீரம் என்றபடி. "தீண்டாவழும்பும் செந்நீரும் சீயும் நரம்பும் செறி தசையும், வேண்டா நாற்றம் மிகுமுடல்" (திருவரங்கக் கலம்பகம்) என்றார் இவரது திருக்குமாரர். ... ... .... (கூகா)

தன்னையுற்றுட்செய்யும் தன்மையினோர் * மன்னு தாமரைத்தாள்
தன்னையுற்றுட்செய்ய வென்னையுய்த்தா னின்று * தன்தகவால்
தன்னையுற்றுரன்றித் தன்மையுற்று ரில்லை யென்றறிந்து
தன்னையுற்றுரை * இராமாநுசன் குணம் சாற்றிடுமே. (கூஎ)

இராமாநுசன் — எம்பெருமானரானவர்,
தன்னை உற்றார் அன்றி தன்னை உற்றாரை குணம் சாற்றிடும் தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து — தம்மைப்பற்றியிருப்பாருண்டே யொழிய தம்மைப் பற்றியிருப்பவர்களுடைய குணகீர்த்தனம் பண்ணும் ஸ்வபக்த பக்தர்கள் ஒருவருமில்லையென்று திருவுள்ளம்பற்றி
என்னை — அடியேனை
இன்று — இன்றைத்தினத்தில்
தன் தகவால் — தமது அருளாலே
(என்ன செய்தாரென்றால்)
தன்னை உற்று ஆள் செய்யும் தன்மையினோர் — தம்மையடைந்து கைங்கரியம் பண்ணும் ஸ்வபாவமுடையரான ஸ்வபக்தர்களுடைய
மன்னு தாமரை தாள் தன்னை உற்று ஆள் செய்ய — ஒன்றோடொன்று சேர்ந்த திருவடித் தாமரைகளை நான் அடைந்து ஆட்செய்யும்படி
உய்த்தான் — வைத்தருளினார்.

* * *—எம்பெருமானர் என்னைத் தம்மிடத்து ஆட்படுத்திக்கொள்ளாமல் தம்மை அடுத்தவர்கள் பக்கல் என்னை ஆட்படுத்

தினார். இதற்கு என்ன காரண மென்கிறீர்களோ? எல்லாரும் நம்மையே நேராகவந்து ஆச்ரயிக்கிறார்களேயொழிய நம்மை ஆச்ரயித்தவர்களை ஆச்ரயிப்பார் ஆருமில்லையே; இவ்வமுதனார், நம்மை ஆச்ரயித்தவர்களை ஆச்ரயிக்கிற அதிகாரியாக இருக்கட்டும்—என்று திருவுள்ளம்பற்றிச் செய்தார்.

இப்பாட்டின் அந்வயக்ரமம் சிறிது வருத்தப்படுத்தும்; ஜாகரூகராயிருந்து அந்வயித்துக்கொள்க;—தன்னையுற்றாரன்றித் தன்னையுற்றாரைக் குணம் சாற்றிடுந் தன்மையுற்றாரில்லை யென்றறிந்து, இராமாநுசன், தன்னையுற்றாட்செய்யுந் தன்மையினோர் மன்னு தாமரைத்தாள் தன்னையுற்று ஆட்செய்யத் தன்தகவால் இன்று என்னையுய்த்தான்—என்று அந்வயம்.

சாற்றிடும் என்கிற விசேஷணபதம் பாட்டின் முடிவில் வந்து நின்றது அபூர்வப் பிரயோக மென்பர். என்னையுற்றான்—என்று ஓதுவர்கள். ... .... ... ... (௩௭)

இடுமேயினிய சுவர்க்கத்தில் * இன்னம் நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத் தொடர்தரு தொல்லை * சுழல்பிறப்பில்
நடுமேயினிநம் மிராமாநுசன் நம்மை நம்வசத்தே
விடுமேசரண மென்றால் * மனமேநையல் மேவுதற்கே. (௩௮)

| | |
|---|---|
| நம் இராமாநுசன் | நம் எம்பெருமானார், |
| சரணம் என்றால் | உமது திருவடிகளே சரணமென்று நாம் சொல்லி விட்டோமானால் |
| இனிய சுவர்க்கத்தில் இடுமே | (சிலர்க்கு) இனிதாகத் தோற்றுகிற ஸ்வர்க்கத்திலே நம்மைக்கொண்டு சேர்த்திடுவரோ? |
| இன்னம் | அல்லது |
| நரகில் இட்டு சுடுமே | நரகத்திலே கொண்டு தள்ளி தஹிக்கச் செய்வரோ? |
| அவற்றை தொடர்தரு | அந்த ஸ்வர்க்கநரகங்களைத் தொடர்ந்து கிடக்கிற |
| தொல்லை சுழல் பிறப்பில் | அநாதியாயும் சுழன்று வருவதாயுமுள்ள ஜன்மத்திலே |
| நடுமே | நிறுத்துவரோ? |
| இனி | மேலுள்ள காலங்களில் |
| நம்மை | நம்மை |
| நம் வசத்தே விடுமே | நாம்போகிறவழியே விட்டுவைப்பரோ? |

(இவைசெய்யமாட்டாரான பின்பு)

| | |
|---|---|
| மனமே! | ஓநெஞ்சே! |
| மேவுதற்கு | பேறுபெறும் விஷயமாக |
| நையல் | நீ கரையவேண்டா. |

* * *—மனமே! இனி நீ 'நமக்குப் பேறு கிடைக்குமோ கிடைக்காதோ?' என்று அவ்விஷயத்தில் சிறிதும் கவலைப்படாதே. நாம் 'ஸ்வர்க்கலோகம் போகநேருமோ? நரகம்போக நேருமோ? இந்த ஸம்ஸாரத்தில்தான் கிடந்து உழலும்படி நேருமோ?' என்று சிந்தித்து இனி நீ வருந்தவேண்டா; 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று ஒருதடவை சொல்லிவிட்டால் அந்த எம்பெருமானார் நம்மைக் கைவிடுவரோ? சிலநாளிருந்து இன்பம் நுகர்ந்து மீள்வதற்குறுப்பான சுவர்க்கத்திலே நம்மைக் கொண்டுபோகப் பார்த்திருப்பரோ? துன்பங்களையே அநுபவிப்பதற் கிடமான நரகத்திலே நம்மைக்கொண்டுபோய் ஹிம்ஸிக்கப் பார்த்திருப்பரோ? இன்பதுன்பங்களை மாறிமாறி அநுபவிப்பதற்கு இடமான இவ்விருள்தருமா ஞாலத்திலேதான் வைப்பரோ! இந்நிலத்தில் சிலநாள் நம்மை வைத்திருந்தாலும் தந்தலைவெட்டியாய் நம்மை வைத்திடுவரோ? பின்னை என் செய்வார்? தம்முடைய பாதங்களில் சேரும்படி தாமே அங்கீகரித்திடுவர்! அதற்காக நீ எள்ளளவும் கரையவேண்டா என்று தமது திருவுள்ளத்தை நோக்கிச் சொன்னாராயிற்று.

அவற்றைத் தொடர்தரு தொல்லைச் சுழல்பிறப்பு=சுவர்க்கம் போனாலும் நரகம் போனாலும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்க வேண்டுகையாலே ஸ்வர்க்க நரகங்களைத் தொடர்ந்தேயிருக்குமாம் பிறப்பு.

நையல்—முன்னிலை யெதிர்மறை வினைமுற்று. .... (கஅ)

தற்கச் சமணரும் சாக்கியப்பேய்களும் * தாழ்சடையோன்
சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் * நான்மறையும்
நிற்கக் குறும்புசெய் நீசரும்மாண்டனர் நீணிலத்தே
பொற்கற்பகம் * எம்மிராமாநுச முனி போந்தபின்னே. (கக)

தற்கம் சமணரும் { தர்க்கம் பண்ணுகிற சமணர்களும்

பேய் { பேய்போலே பிடித்தபிடி விடாதேநிற்கிற

சாக்கியர்களும் பௌத்தர்களும்

தாழ் சடையோன் சொல் கற்ற சோம்பரும் { ருத்ரனுடைய சொல்லாகிய சைவாகமத்தைக் கற்ற தாமஸர்களான சைவர்களும்

| | | | |
|---|---|---|---|
| சூனிய வாதரும் | சூந்யவாதிகளும் | (எப்போது? என்றால்) | |
| நால் மறையும் நிற்க | நான்கு வேதங்களும் விளங்கிக் கொண்டிருக்கச்செய்தே | பொன் கற்பகம் எம் இராமாநுச முனி | சிறந்த கல்ப வ்ருக்ஷம்போலே உதாரரான ஸ்வாமி எம்பெருமானார் |
| குறும்பு செய் நீசரும் | (அவற்றுக்குச் சேராத) அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளும் | நீள் நிலத்தே போந்த பின் | விசாலமான இப்பூமியிலே திருவவதரித்த பின்பு. |
| மாண்டனர் | ஒழிந்தார்கள்; | | |

* * *—ஸகலமான அர்த்தங்களையும் அளிக்கவல்ல எம்பெருமானார் இவ்வுலகத்தில் திருவவதரித்தபிறகு ஜைநர், பௌத்தர், சார்வாகர், பாசுபதர், அத்வைதிகள் முதலிய மதாந்தரஸ்தர்கள் எல்லாரும் மாண்டுபோனார்கள்; இனி அவர்களால் எவ்விதமான கெடுதியும் உலகத்துக்கு விளையமாட்டாது என்றாராயிற்று.

சமணர்—'ஆர்ஹதர்' என்று வழங்கப்படுகிற ஜிநமதத்தவர்கள். சாக்கியர்—புத்தமதத்தவர்கள்: இவர்கட்குக் கொண்டது விடாமையாகிற பிடிவாதம் அதிகமாகையாலே "சாக்கியப் பேய்களும்" என்றார். சூனியவாதர்—'ஸர்வம் சூந்யம்' என்று வாதிப்பவர்கள். ... .... ... ... ... (கூகூ)

போந்ததென்னெஞ்சென்னும்பொன்வண்டு * உனதடிப்போதி
ல்ரோண்சீராந்தெளிதேனுண் டமர்ந்திட வேண்டி * நின்பாலதுவே
ஈந்திடவேண்டு மிராமாநுச இதுவன்றி யொன்றும்
மாந்தகில்லாது * இனி மற்றொன்றுகாட்டி மயக்கிடலே. (கoo)

| | | | |
|---|---|---|---|
| இராமாநுச | எம்பெருமானாரே! | ஒண் சீர் ஆம் தெளி தேன் உண்டு அமர்ந்திட வேண்டி | அழகிய குணங்களாகிற தேனைப்பருகி நித்யவாஸம் பண்ணவிரும்பி |
| என் நெஞ்சு என்னும் பொன் வண்டு | எனது நெஞ்சாகிற அழகிய வண்டானது | நின் பால் | தேவரீரிடத்தில் |
| உனது அடி போதில் | தேவரீருடைய திருவடித் தாமரைகளில் | போந்தது | வந்து சேர்ந்தது; |
| | | அதுவே | அத்திருக்குணங்களையே |

| | |
|---|---|
| ஈந்திட வேண்டும் | அளித்தருள வேணும்; |
| இது அன்றி | இத்திருக்குணங்களைத் தவிர |
| ஒன்றும் | வேறொன்றையும் |
| மாந்தகில்லாது | (நெஞ்சு) புஜிக்க மாட்டாது; |
| இனி | இப்படியான பின்பு |
| மற்று ஒன்று காட்டி | வேறொரு விஷயத்தைக்காட்டி |
| மயக்கிடல் | மயக்கவேண்டா. |

* * *—ஸ்வாமிந்! அடியேனுடைய நெஞ்சு தேவரீருடைய திருக்குணங்களையே எப்போதும் அநுபவிக்க விருப்பங்கொண்டு மேல்விழுந்து தேவரீரிடம் வந்து சேர்ந்தது. இது இனி வேறொன்றை விரும்பாது; தேவரீரும் இனி இதை ஸம்ஸாரத்தில் போகவொட்டாமல் தேவரீரிடத்திலேயே நிலைநிறுத்திக் கொள்ள வேணும்.

தமது நெஞ்சை ஒரு வண்டாக ரூபணம் பண்ணினதற்கு ஏற்ப எம்பெருமானாருடைய திவ்யகுணங்களை மதுவாக ரூபணம் பண்ணினார். இந்த வண்டுக்கு அந்தத் தேன் தவிர வேறொன்றும் ரஸிக்கமாட்டாது.

மயக்கிடல்=முன்னிலை யெதிர்மறை வினைமுற்று. (௧௦௦)

மயக்கு மிருவினை வல்லியிற்பூண்டு * மதிமயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றியவென்னை * துயரகற்றி
உயக்கொண்டு நல்கு மிராமாநுசவென்ற துன்னை யுன்னி
நயக்குமவர்க் கிதிழுக்கென்பர்*நல்லவரென்று நைந்தே (௧௦௧)

| | |
|---|---|
| மயக்கும் | "அஜ்ஞானத்தை விளைக்க வல்ல |
| இரு வினை | புண்ய பாபமென்னும் இருகருமங்களாகிற |
| வல்லியில் | விலங்கில் |
| பூண்டு | அகப்பட்டுக் கொண்டு |
| மதி மயங்கி | அறிவுகெட்டு |
| துயக்கும் | ப்ரமிக்கச் செய்கிற |
| பிறவியில் | ஸம்ஸாரத்திலே |
| தோன்றிய என்னை | பிறந்த அடியேனை |
| துயர் அகற்றி உய கொண்டு | துக்கங்களைப் போக்கி உஜ்ஜீவிக்கச்செய்து |
| நல்கும் | அருள்செய்கின்ற |
| இராமாநுச | எம்பெருமானாரே!" |

| | | | |
|---|---|---|---|
| என்றது இது | என்று தேவரீருடைய பாவநத்வத்தைப்பேசுகையாகிற இது | என்றும் நயக்குமவர்க்கு | எப்போதும் ஆசையுடனிருப்பவர்களுக்கு |
| உன்னை உன்னி நைந்து | தேவரீரை அநுஸந்தித்து உருகி | இழுக்கு என்பர் நல்லவர் | தகாதது என்று ஸத்துக்கள் சொல்லுவர்கள். |

* * *—எம்பெருமானார்க்கு, பாவநத்வம் என்றும் போக்யத்வம் என்றும் இரண்டு படிகள் உண்டு. பாவநத்வமாவது—பக்தர்களுடைய பாவங்களைப்போக்கிப் பரிசுத்தப்படுத்தல். போக்யத்வமாவது எப்போதும் அநுபவிக்கக் கூடியவராயிருக்கை. இவ்விரண்டில் பாவநத்வத்தைவிட போக்யத்வமே சிறந்தது; ஏனென்றால், நம்முடைய பாவங்களைப் போக்கிறுரென்கிற காரணத்தாலே நாம் அவரைப் பாவநர் என்று அநுஸந்திக்கவேண்டும்; இது ஒரு உபாதியைப்பற்றி வருவது. போக்யத்வத்தை அநுஸந்திப்பது இப்படிப்பட்டதல்ல. அது ஸ்வரூபப்ராயுக்தம். ஆகையாலே, பாவநத்வத்தை அநுஸந்திப்பதைவிட போக்யதையை அநுஸந்திப்பதே சிறந்தது. அப்படியிருக்க இவ்வமுதனார் இப்பிரபந்தத்தில் அடிக்கடி எம்பெருமானாருடைய பாவநத்வத்தை அநுஸந்தித்தார்; 'என்னுடைய பாவங்களையெல்லாம் போக்கினார், என்னுடைய குற்றங்களையெல்லாம் நீக்கினார்' என்று அடிக்கடி சொல்லியிருக்கிறார். அப்படி சொன்னதற்கு அநுதாபப்படுகிறார் இப்பாட்டில். போக்யதையில் ஈடுபட்டுப் பேசவேண்டியிருக்க, பாவநத்வத்தில் ஈடுபட்டமை தோற்றப் பேசினது பிசகு என்று பெரியோர்கள் சொல்லுவர்கள் என்றாராயிற்று. .... (க0க)

நையும் மனமுன் குணங்களையுன்னி * என்னாவிருந்தெம்
ஐயனிராமாநுச னென்றழைக்கும் * அருவினையேன்
கையும் தொழும் கண்கருதிடுங்காணக் கடல்புடைசூழ்
வையமிதனில் * உன்வண்மை யென்பாலென் வளர்ந்ததுவே.

| | | | |
|---|---|---|---|
| (எம்பெருமானாரே!) | | உன் குணங்களை உன்னி | தேவரீருடைய திருக்குணங்களைச்சிந்தித்து |
| மனம் | எனது நெஞ்சானது | | |

| | | | |
|---|---|---|---|
| கையும் | கரைகின்றது ; | காண கருதிடும் | (தேவரீரை) ஸேவிக்க ஆசைப் படுகின்றன ; |
| என் நா | எனது வாக்கானது | கடல் புடை சூழ் வையம் இதனில் | சுற்றிலும் கடல் சூழப்பெற்ற இம்பூமண்டலத்தி னுள்ளே |
| இருந்து | நிலை நின்று | உன் வண்மை | தேவரீருடைய ஔதார்ய குணம் |
| எம் ஐயன் இராமாநுசன் என்று அழைக்கும் | எமக்கு ஸ்வாமியான எம்பெருமா னாரே! என்று அழைக்கின்றது. | என்பால் வளர்ந்தது என் | அடியேன்மீது (இவ்விதமாக) வளர்ந்ததற்குக் காரணம்யாதோ?. |
| அரு வினையேன் | மஹாபாபியான என்னுடைய | | |
| கையும் | கைகளும் | | |
| தொழும் | அஞ்ஜலிபண்ணு கின்றன ; | | |
| கண் | கண்களானவை | | |

* * *—ஸ்வாமிந்! அடியேனுடைய நெஞ்சு தேவரீருடைய குணாநுபவத்தில் ஊன்றி 'இப்படியும் சில குணங்கள் இருப்பதே!' என்று உருகிப்போகின்றது. எனது நாவானது தேவரீருடைய திரு நாம ஸங்கீர்த்தனத்திலே ஆழ்ந்துவிட்டது. எனது கைகள் தேவரீ ருக்கு அஞ்ஜலி பண்ணுவதில் ஆழ்ந்தன. கண்கள் தேவரீரை இப் போது ஸேவித்துக் கொண்டிருப்பதுபோலவே என்றைக்கும் ஸேவித்துக்கொண்டிருக்க ஆவல்கொண்டன. ஆக இப்படி எனது கரணங்களெல்லாம் தேவரீர்பக்கல் ஊன்றும்படி தேவரீருடைய வள் ளல்தனம் அடியேனொருவன்மீது ஏறிப்பாய்ந்தவிது சொல்லுந் தர மன்று—என்றாராயிற்று. ஐயன் இராமாநுசன்—அண்மைவிளி. முதல் வேற்றுமையாகவே கொண்டால், அழைக்கும் என்றது 'வ்யா வஹரிக்கும்' என்றபடியாம். ... .... ... (௧௦௨)

வளர்ந்தவெங்கோப மடங்கலொன்றாய் * அன்று வாளவுணன்
கிளர்ந்தபொன்னாகம் கிழித்தவன் * கீர்த்திப் பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தை யிராமாநுச னென்றன் மெய்வினைநோய்
களைந்து நன்ஞானமளித்தனன் * கையில் கனியென்னவே.

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்னொரு காலத்தில் | வாள் அவுணன் | வாளையுடைய ஹிரண்யாஸுர னது |
| வளர்ந்த வெம் கோபம் மடங்கல் ஒன்று ஆய் | கரோமான கோபம் மேலிடப்பெற்ற ஒரு நரஸிம்ஹ மூர்த்தியாகி | கிளர்ந்த | செருக்கினால் செறித்திருந்த |

| | | | |
|---|---|---|---|
| பொன் ஆகம் | பொன்போன்ற மார்வை | இராமாநுசன் | எம்பெருமானார் |
| கிழித்தவன் | கிழித்துப் பொகட்டவனான எம்பெருமானுடைய | என் தன் மெய் வினை நோய் களைந்து | எனதுஉடலைப்பற்றியிருக்கிற வினை நோய்களையெல்லாமொழித்து |
| கீர்த்தி பயிர் எழுந்து | திருப்புகழ்களாகிற பயிர் வளர்ந்து | கையில் கனி என்ன | கையிலங்கு நெல்லிக் கனிபோலே ஸுலபமாக |
| விளைந்திடும் சிந்தை | விளையப்பெற்ற திருவுள்ளத்தை யுடையரான | நல் ஞானம் அளித்தனன் | விலக்ஷணமான ஞானத்தைத் தந்தருளினார். |

* * *—கீழ்ப்பாட்டிற் சொன்னபடியே தம்முடைய கரணங்கள் எம்பெருமானார் விஷயத்தில் ஊன்றுகைக்குக்காரணம் என்னவென்று கேட்பார்க்கு விடை கூறுவதுபோலும் இப்பாட்டு. நரசிங்கவுருக்கொண்டு இரணியனுடலைப்பிளந்த பிரானுடைய திருக்கல்யாண குணங்களை எப்போதும் சிந்தித்துக்கொண்டிருக்கிற எம்பெருமானார் என் பாவங்களைப்போக்கி நல்லறிவை நல்கினார்; ஆகையால்தான் என்னுடைய கரணங்கள் அவர்பக்கலிலேயே ஆழங்காற்பட்டுவிட்டன—என்றாராயிற்று.

மடங்கல்—ஆண் சிங்கம். இரணியன் எம்பெருமானளவில் எவ்வளவு தீமை செய்திருந்தாலும் எம்பெருமானுக்குக் கோபம் உண்டாகாது; பரமபாகவதனான ப்ரஹ்லாதனளவில் அளவற்ற தீமைகள் புரிந்ததனால் * வளர்ந்த வெங்கோப மடங்கலொன்றாயினனென்க. கீர்த்திப்பயிரெழுந்து விளைந்திடுஞ் சிந்தை=பகவத்குணமாகிற பயிர் எம்பெருமானாருடைய திருவுள்ளமாகிற க்ஷேத்திரத்திலே சிறப்பாக விளைந்தோங்குமென்றது—எம்பெருமானாரைப்போல் பகவத் குணாநுபவம் பண்ணிக் களிப்பார் வேறு ஆருமில்லையென்றவாறு.

கையிற்கனியென்னவே=ஸ்பஷ்டமாக என்று கருத்து. "கரதலாமலகம்" என்பர்—வடநூலாரும். ... .... (கoரு)

கையில்கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும் * உன்தன்
மெய்யில்பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான் * நிரயத்
தொய்யில்கிடக்கிலும் சோதிவிண் சேரிலும் இவ்வருள்நீ
செய்யில்தரிப்பன் * இராமாநுச என்செழுங் கொண்டலே. கoசு)

செழு கொண்டல் — (ஔதார்யத்தில்) விலக்ஷணமான மேகம்போன்ற
என் இராமாநுசா — எம்பெருமானாரே!, (தேவரீர்)
கண்ணனை — எம்பெருமானை
கையில் கனி என்ன — உள்ளங்கை நெல்லிக் கனிபோலே
காட்டி தரினும் — காட்டிக் கொடுத்தாலும்
உன் தன் மெய்யில் பிறங்கிய சீர் அன்றி யான் வேண்டிலன் — தேவரீருடைய திருமேனியில் விளங்குகிற ஸௌந்தரியம் முதலிய குணங்களைத் தவிர வேறொன்றிலும் நான் கண்வைக்க மாட்டேன்;
நிரயம் தொய்யில் — ஸம்ஸார நரகக்குழியில்
கிடக்கிலும் — அழுந்திக் கிடந்தேனாகிலும்
சோதி விண் சேரிலும் — சோதிமயமான பரம பதத்தை அடைந்தேனாகிலும்
இவ் அருள் — (தேவரீருடைய திருமேனியழகை அநுபவித்திருக்கைக்கு உறுப்பான) கிருபையை
நீ செய்யில் — தேவரீர் செய்தருளினால் தான்
தரிப்பன் — (ஸம்ஸாரத்திலோ மோக்ஷத்திலோ) கால்பாவிநிற்பேன்.

* * *—அடியேன் அபேக்ஷிப்பவற்றையெல்லாம் குறையறக் கொடுத்தருள்கின்ற ஸ்வாமீ!, தேவரீர் அடியேனுக்கு எம்பெருமானை ஸுலபமாகக் காட்டிக் கொடுத்தருளினாலும் தேவரீருடைய திருமேனியழகை அநுபவிப்பதில் அடியேனது நெஞ்சு ஊன்றியிருக்குமேயொழிய அவ்வெம்பெருமானை விரும்பவே மாட்டாது. தேவரீருடைய திருமேனியின் அநுபவம் அடியேனுக்கு வாய்த்திருக்குமாகில் இவ்விருள் தருமாஞாலத்தில் இருப்பும் எனக்குத் துயரை விளைக்கமாட்டாது. இவ்வநுபவம் இல்லாவிடில் பரமபதமும் எனக்கு ஆநந்தத்தை விளைக்கமாட்டாது. இவ்வநுபவம் மாறாமல் வாய்த்திருக்குமிடமே எனக்குப் பரமபோக்யமானது. அது ஸம்ஸார பூமியாகவுமாம், நரகமாகவுமாம்; பரமபதமாகவுமாம். ஆகையால் அடியேனுக்கு தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவமே இடைவிடாது செல்லும்படி அருள்புரியவேணுமென்று வேண்டினாராயிற்று.

நிரயத்தொய்யில்=நிரயமாவது நரகம். இந்த ஸம்ஸாரநிலமே நரகமெனப்படும். தொய்யில் — சேறு. ஏழனுருபு தொக்கியிருக்கிறது. தொய்யல் என்பாருமுளர். ... .... (கoச)

செழுந்திரைப் பாற்கடல் கண்டுயில்மாயன் * திருவடிக்கீழ்
விழுந்திருப்பார் நெஞ்சில் மேவுநன்ஞானி * நல்வேதியர்கள்
தொழுந்திருப் பாத னிராமாநுசனைத் தொழும்பெரியோர்
எழுந்திரைத் தாடுமிடம் * அடியேனுக் கிருப்பிடமே. (௧௦௫)

| | |
|---|---|
| செழு திரை பால் கடல் | அழகிய அலைகளையுடைய திருப்பாற் கடலில் |
| கண் துயில் | பள்ளிகொண்டிராநின்ற |
| மாயன் | ஸர்வேச்வரனுடைய |
| திரு அடி கீழ் | திருவடிகளின்கீழே |
| விழுந்து இருப்பார் | விழுந்துகிடக்கும் மஹான்களுடைய |
| நெஞ்சில் மேவும் | ஹ்ருதயத்திலே பொருந்தி யெழுந்தருளி யிருக்கிற |
| நல் ஞானி | சிறந்த ஞானியாயும் |
| நல் வேதியர்கள் தொழும் திரு பாதன் | நல்ல வைதிகர்களால் ஸேவிக்கப்பட்ட திருவடிகளை யுடையவராயு மிருக்கிற |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| தொழும் | ஸேவிக்கின்ற |
| பெரியோர் | மஹாத்மாக்கள் |
| எழுந்து இரைத்து ஆடும் இடம் | உடம்பு இருந்த விடத்தில் இராமல் கிளர்ந்து கோஷித்துக் கொண்டு கூத்தாடும் இடம் |
| அடியேனுக்கு இருப்பு இடம் | அடியேன்வஸிக்கு மிடமாகும். |

* * *—கீழ்ப்பாட்டில் "நிரயத் தொய்யில் கிடக்கிலும் சோதிவிண் சேரிலும்" என்று ஸம்ஸாரத்தையும் பரமபதத்தையும் வாசியற்றதாகச் சொன்ன அமுதனாரை நோக்கிச் சிலர், 'உலகத்தில் எல்லாரும் ஸம்ஸாரத்தை வெறுத்துப் பரமபதத்தை ஆசைப்படாநிற்க நீர் ஸம்ஸாரத்தையும் பரமபதத்தையும் துல்யமாகக்கருதிப் பேசுகின்றீரே, உமக்கு உத்தேச்யமான ஸ்தானம் எது? சொல்லும்' என்ன; ஸ்ரீராமாநுஜபக்தர்கள் களித்துக் கூத்தாடுகின்ற இடமே எனக்குப் பரமோத்தேச்யமான ஸ்தானம் என்கிறார்.

திருப்பாற்கடல்நாதனை ஸ்ரீமந்நாராயணனை அடிபணிந்தவர்களும் அவ்வெம்பெருமானை உபேக்ஷித்துவிட்டு எம்பெருமானாரையே நெஞ்சில் தியானிப்பர்களாம். அப்படிப்பட்ட எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் எம்பெருமானாரை அநுபவித்ததனாலுண்டாகும் மகிழ்ச்சி தலைமண்டை கொள்ளப் பெற்று

உடம்பு இருந்த விடத்திலிராதே கிளர்ந்து கடலிரைத்தாற்போலே இரைத்துக்கொண்டு தலைகால் தெரியாமல் எங்கெங்குக் கூத்தாடுவர்களோ அங்கங்கெல்லாம் அடியேன் உவந்து இருப்பேன்; அவ்விடமே எனக்கு முக்திஸ்தானம் என்றாராயிற்று. (க0ரு)

[சாற்றுப் பாசுரங்கள்.]

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் * மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர் * அவைதன்னொடும் வந்
திருப்பிடம் மாய னிராமாநுசன்மனத் தின்றவன்வந்
திருப்பிடம் * என்ற னிதயத்துள்ளே தனக்கின்புறவே. (க0சு)

| | |
|---|---|
| மாயனுக்கு | ஸர்வேச்வரனுக்கு |
| இருப்பு இடம் | வாஸஸ்தானம் (எவையென்றால்) |
| வைகுந்தம் | பரமபதமும் |
| வேங்கடம் | திருவேங்கடமலையும் |
| மாலிருஞ் சோலை என்னும் பொருப்பு இடம் | திருமாலிருஞ் சோலையென்கிற திருமலையும் (ஆகிய இவையாம்) |
| என்பர் நல்லோர் | என்று ஸத்துக்கள் சொல்லுவர்கள். |
| மாயன் | (இவற்றை இருப் பிடமாகவுடைய) ஸர்வேச்வரன் |
| அவை தன்னொடும் வந்து இருப்பிடம் | அந்த ஸ்ரீவைகுண்டம் முதலிய வற்றோடே கூடவந்து எழுந்தருளி யிருப்பது |
| இராமாநுசன் மனத்து | எம்பெருமானா ருடைய திருவுள் ளத்திலேயாம்; |
| அவன் | அவ்வெம்பெருமா னார் தாம் |
| இன்று வந்து | இப்போது வந்து |
| தனக்கு இன்பு உற இருப்பிடம் | தமக்கு ஆநந்தமாக எழுந்தருளி யிருப்பது |
| என் தன் இதயத் துள்ளே | அடியேனுடைய ஹ்ருதயத்தி னுள்ளேயாம். |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடியே அமுதனாருடைய எல்லை கடந்த ப்ராவண்யத்தை அறிந்த எம்பெருமானார் 'நம்மேல் இவ்வளவு காதல்கொண்டிருக்கிற இவருடைய நெஞ்சை நாம்விட்டு நீங்கலாகாது' என்று கொண்டு அமுதனாருடைய திருவுள்ளத்தை மிகவும் விரும்பியருள, அதனைக்கண்டு மகிழ்ந்து பேசுகிறார்.

எம்பெருமான் எங்கே எழுந்தருளியிருப்பனென்றால், ஸ்ரீவைகுண்டத்திலும் திருவேங்கடமலை திருமாலிருஞ்சோலைமலை

முதலிய திவ்ய தேசங்களிலும் எழுந்தருளியிருப்பனென்று நல்லோர்கள் சொல்லுவர்கள். அப்படிப்பட்ட எம்பெருமான் அந்த ஸ்ரீ வைகுண்டம் முதலிய இடங்களையும் பேர்த்துக்கொண்டு எம்பெருமானார் திருவுள்ளத்திலே வந்து நித்யவாஸம் பண்ணுநின்றான். அப்படிப்பட்ட எம்பெருமானார் என்னுடைய நெஞ்சத்திலே நித்யவாஸம் பண்ணுநின்றார்.

பெரிய திருவந்தாதியில், "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீயென்செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய்—அவிவின்றி, யான் பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியாயுள்ளு." என்ற பாசுரம் இங்கே நினைக்கத்தகும். உபய விபூதி விசிஷ்டனான எம்பெருமான் உடையவர் திருவுள்ளத்திலே உள்ளான்; உபயவிபூதி விசிஷ்டனைக் கபளீகரித்த அந்த உடையவரையும் அடியேன் கபளீகரித்தவன்—என்றதாகிறது.

போருப்பு-மலை .... ... ... (௧0௬)

இன்புற்றசீலத் திராமாநுசா * என்று மெவ்விடத்தும்
என்புற்றநோ யுடல்தோறும் பிறந்திறந்து * எண்ணரிய
துன்புற்று வீயினும்சொல்லுவ தொன்றுண்டுன் தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி * என்னையாக்கியங் காட்படுத்தே (௧0௭)

| | |
|---|---|
| இன்பு உற்ற | ஆநந்தபூர்ணராயெழுந்தருளியிருக்கிற |
| சீலத்து இராமாநுசா | ஸௌசீல்ய குணமுடைய எம்பெருமானாரே!, |
| சொல்லுவது ஒன்று உண்டு | தேவரீரிடத்தில் அடியேன் விஜ்ஞாபிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு; |
| (அஃது என்னவென்றால்) | |
| என்பு உற்ற நோய் உடல் தோறும் | எலும்பிலே உறைந்து நலியக்கூடிய வியாதிகளுக்கு இருப்பிடமான சரீரங்களிலெல்லாம் |
| பிறந்து இறந்து | பிறப்பதும் இறப்பதுமாகி |
| எண்ண அரிய துன்பு உற்று வீயினும் | எண்ணமுடியாத துன்பங்களையநுபவித்து முடிந்து போனாலும் |
| என்றும் | எல்லாக் காலங்களிலும் |
| எவ் இடத்தும் | எல்லாவிடங்களிலும் |
| உன் தொண்டர் கட்கே | தேவரீருடைய பக்தர்கள் விஷயத்திலேயே |
| அன்பு உற்று இருக்கும்படி என்னை ஆக்கி | பக்தனாயிருக்கும்படி அடியேனைச் செய்தருளி |
| அங்கு | அந்த பக்தர்களிடத்தில் |

| | | |
|---|---|---|
| ஆள் படுத்து | (அடியேனை) ஆட்படுத்தி யருளவேணும்; | (இதுவே அடியேனுடைய வேண்டுகோள்.) |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடியே தம்மிடத்தில் வ்யாமோஹங்கொண்டிருக்கிற எம்பெருமானாரை நோக்கி 'ஸ்வாமிந்! தேவரீருக்கு அடியேன் விண்ணப்பம் செய்யவேண்டிய விஷயம் ஒன்றேயுள்ளது. அதாவது—பலவகை நோய்களுக்குக் கொள்கலமான சரீரத்தில் பிறப்பதும் இறப்பதுமாயிருந்துகொண்டு எவ்வளவோ துக்கங்களை அநுபவிக்கும்படியாக நேர்ந்தாலும் நேரட்டும்; எந்த நிலைமையிலும் அடியேன் தேவரீருடைய அந்தரங்க பக்தர்களுக்கே அடிமைசெய்யப் பெறவேணுகில் அதுவே போதுமானது. ஆகையாலே அடியேனுக்கு வேறொன்றும் பிரார்த்திக்கத் தக்கதில்லை. எத்தனை பிறவிகள் நேர்ந்தாலும் அந்த நிலைமைகளில் அடியேனை தேவரீருடைய பக்தர்களுக்கே அடிமைப்படுத்தியருளவேணும்—என்பதொன்றையே பிரார்த்திக்கின்றேனென்று ராயிற்று. ... .... ... .... ... (கoஎ)

அங்கயல் பாய்வயல் தென்னரங்கன் * அணியாகமன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப்போற்றுதும் * பத்தியெல்லாம்
தங்கிய தென்னத் தழைத்துநெஞ்சே நந்தலைமிசையே
பொங்கிய கீர்த்தி * இராமாநுசனடிப் பூமன்னவே. (கoஅ)

| | |
|---|---|
| நெஞ்சே | ஓ மனமே! |
| பத்தி எல்லாம் தங்கியது என்ன தழைத்து | பக்தியெல்லாம் நம்மிடத்திலே குடிகொண்டதென்று சொல்லும்படியாக வீறுபெற்று, |
| பொங்கிய கீர்த்தி இராமாநுசன் அடி பூ | பரந்த புகழையுடையரான எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகள் |
| நம் தலை மிசையே மன்ன | நமது தலைமேலே நித்யவாஸம் பண்ணும்படியாக, |

(நாம் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால்)

| | |
|---|---|
| அம் கயல் பாய் வயல் தென் அரங்கன் | அழகிய கயல் மீன்கள் பாய்கிற கழனிகள்சூழ்ந்த தென்னரங்கத்தில் உறையும் பெருமானுடைய |
| அணி ஆகம் மன்னும் | அழகிய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகிறவளாய் |
| பங்கயம் மா மலர் பாவையை | சிறந்த தாமரைப் பூவில் பிறந்த பதுமை போன்றவளான ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| போற்றுதும் | வாழ்த்துவோம். |

* * *—இப்பிரபந்தத்தின் தொடக்கத்தில் “இராமாநுசன் சரணாரவிந்தம் நாம் மன்னிவாழ” என்று எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளைப் பொருந்தி வாழ்வதே தமக்குப் பரம புருஷார்த்தமாக அருளிச்செய்தவராகையாலே அந்தப் புருஷார்த்தம் நமக்கு யாவஜ்ஜீவம் ஸித்திக்கும்படியாக—எல்லாச் செல்வங்களையும் அளிக்கவல்ல பெரியபிராட்டியாரைப் பிரார்த்திப்போமென்கிறார்—முடிவான இப்பாட்டில்.

பொங்கிய கீர்த்தியை யுடையரான இராமாநுசருடைய அடிப்பூ நம் தலைமிசையே மன்னுவதற்காகவும், பத்தியெல்லாம் தங்கியதென்னத் தழைத்து நிற்பதற்காகவும் பங்கயமாமலர்ப் பாவையைப் போற்றுவோமென்கிறார். எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் நமக்கு அளவற்றபக்தி உண்டாவதற்கும், அத்திருவடிகள் நமக்குச் சிரோபூஷணமாவதற்கும் உறுப்பாகப் பிராட்டியை வேண்டிக்கொள்வோமென்கை. உலகத்தில் ஸாமாந்ய ஸம்பத்தை அளிக்கவல்ல பிராட்டியே இந்தவிசேஷஸம்பத்தையும் அளிக்கக்கடவள் என்றதாயிற்று. ... ... (க0அ)

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
இராமாநுச நூற்றந்தாதி உரை
முற்றுப்பெற்றது.

இயற்பா உரை முற்றிற்று.

# இராமாநுச நூற்றந்தாதி—அடிவரவு.

1. பூமன் கள்ளார் பெரிய லென்னை,
எனக் கியலும் மொழி வருந்து மிறை மன் சீர்.
2. சீரிடம் செய்யும் கதி சோரா தாழ்,
முனி யெய்தற் குறு வாரப்பொழில் நிதி.
3. நிதி கார்த்தி வைப்பா மொய்த்த காரேய்,
திக்குக் கொள்ள நெஞ்சில் கூட்டு மின்ப மாண்டு.
4. ஆண்டு பொரு மடையார் நில நயவேன்,
அடல் படி யாக்கிப் பொருளும் சேம மண்.
5. மண் ஆயி சுரச் சொல்லார் பேறு,
கூறு மிறை நிக ரான துதிப் படி.
6. அடி பார்த் தற்புத நாட்டி கண் கோக்குலம்,
மற்றொரு பேதையர் கடலுணர் கொழுந்து.
7. கொழு விரும் பிடியைப் பண்டரு வாழ் ஞானம்,
சரண மாரெனச் சிந்தை யென்னையும் சார்.
8. சார் கைத்த வண்மை தேர் செய்த்தலை நின்ற,
ஈந்தனன் கருத்தில் பொய்கை நல் சோர்வி.
9. சோர் தெரிவுற்ற சீர் கண் டோதி பற்று,
பெரியவர் கலிமிக்க போற்றரும் நினையார்.
10. நினையார் மருள் புண்ணி கட்டத் தவ முண்ணின்,
வளரும் தன்னையுற் றிடும் தற் போந்த.
11. போந்ததென் மயக்கும் கையும் வளர்ந்த,
கையிற் செழுந்திரை யிருப் பின்பங்கயல்பூ.

## அறிவிப்பு.

இயற்பா உரை மூன்று ஸம்புடமாக வகுக்கப்பட்டுள்ளது. முதல் ஸம்புடம்—நான்கு திருவந்தாதிகள். இரண்டாம் இரண்டாம் ஸம்புடம்—நம்மாழ்வார் திவ்ய ப்ரபந்தங்களாகிய, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி. மூன்றும் ஸம்புடம்—திருமங்கையாழ்வார் பிரபந்தங்களான திருவெழுகூற்றிருக்கையும் திருமடல்களும், இராமாநுச நூற்றந்தாதியும். இவை தனித் தனிப் புத்தகமாகவும் கிடைக்கும்.

## இராமானுச நூற்றந்தாதிச் செய்யுளகராதி.



PRINTED AT THE MODEL PRESS, RATTAN BAZAAR ROW, MADRAS.